தாயுமானவர் இயற்றிய

# மௌனகுரு வணக்கம்



प्रज्ञानं ब्रह्म

விளக்கியவர்

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்

தாயுமானவர் இயற்றிய

# மௌனகுரு வணக்கம்

சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

விரிவுரையுடன்

தபோவனப் பிரசுராலயம்
திருப்பராய்த்துறை போஸ்ட், எலமனூர் ஸ்டேஷன்
திருச்சி ஜில்லா
1964



*தாயுமானவர் இயற்றிய*

# மௌனகுரு வணக்கம்

*விரிவுரையுடன்*

ஆசைநிக ளத்தினை நிர்த்தூளி படவுதறி
ஆங்கார முளையைஎற்றி
அத்துவித மதமாகி மதம்ஆறும் ஆருக
அங்கையின் விலாழியாக்கிப்
பாசஇருள் தன்னிழ லெனச்சுளித் தார்த்துமேல்
பார்த்துப் பரந்தமனதைப்
பாரித்த கவளமாய்ப் பூரிக்க வுண்டுமுக
படாமன்ன மாயைநூறித்
தேசுபெற நீவைத்த சின்முத்தி ராங்குசச்
செங்கைக்கு ளேயடக்கிச்
சின்மயா னந்தசுக வெள்ளம் படிந்துநின்
திருவருட் பூர்த்தியான
வாசமுறு சற்சார மீதென்னை யொருஞான
மத்தகஜ மெனவளர்த்தாய்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

*விலங்குகளை வளர்ப்பது காலமெல்லாம் மக்கள் செய்துவரும் ஒரு வாழ்க்கைச் செயலாகும். ஆடு மாடுகள், குதிரை, நாய், பன்றி முதலியன மானுட சமூகவாழ்க்கையின் ஒரு பகுதியாகவே வந்தமைந்*

திருக்கின்றன. இவைகளை நல்ல பாங்கில் வளர்ப்பது பொறுப்பு வாய்ந்த மக்களுடைய செயல் ஆகிறது. இந்த ஜந்துக்களைச் சித்திரவதை பண்ணுவதுபோன்று சரியானபடி உணவு கொடுக்காமலும், ஏனைய வசதிகள் செய்துவைக்காமலும் இவைகளை வளர்ப்பவர்கள் உண்டு. மனிதனைச் சார்ந்திருக்கிற இத்தகைய கால் நடைகளைச் சரியாக வளர்க்காவிட்டால் அது ஒரு பாபச் செயலாகவே கருதப்படுகிறது. கால் நடைகளை யார் நல்ல பாங்கில் வளர்த்து வருகிறார்களோ அவர்கள் பாராட்டுதற்குரிய நல்வினை செய்தவர்களாகிறார்கள். யானை காட்டில் வசிக்கும் ஜந்து. அதைப் பிடித்துப் பழக்கி வளர்ப்பவர்கள் உண்டு. ஆனால் யானையை வளர்ப்பது எல்லார்க்கும் ஆகாத காரியம் ஏழை ஒருவனுக்கு யானையைப் பிடித்துத் தானம் கொடுப்பது ஒவ்வாது. அப்படிச் செய்தால் அந்த ஏழைக்கும் திண்டாட்டம்; யானையும் பல துன்பங்களுக்கு உட்படும். கோயில்களில் யானையை நன்கு பரிபாலித்து வளர்க்கிறார்கள். அரசர்களுக்கும் யானையைப் பரிபாலித்து வளர்க்க முடியும். அதைக் கொழுத்திருக்கிற பாங்கில் வளர்த்து வருவதே முறை. நன்றாக வளர்க்கப்படுகிற கொழுத்த யானை ஒன்றோடு தம்மைச் சீர்தூக்கிப் பாடல் ஒன்றைத் தாயுமான சுவாமிகள் பாடியுள்ளார். யானைக்குச் சொந்தக்காரன் இருப்பதுபோன்று தம்மை ஆட்கொண்ட குரு தமது உடையவன் ஆகின்றார். நன்கு வளர்க்கப்பெற்ற யானை செய்கின்ற பல செயல்களோடு தமது ஆத்ம

பரிபாகம் சீர்தூக்கப்படுகிறது. அக்கோட்பாடுகளை யெல்லாம் ஆராய்ந்து பார்ப்போம்.

மனிதனுல் நன்கு வளர்க்கப்படுகிற யானை ஒன்று காலில் விலங்கு அல்லது சங்கிலியிட்டுக் கட்டி வைக்கப் பட்டிருக்கிறது. சில வேளைகளில் அந்த யானை சங்கி லியை உடைத்துக்கொண்டு இங்குமங்கும் ஓடித்திரிவ துண்டு. நிகளம் என்னும் சொல் சங்கிலி அல்லது கட்டிவைக்கும் பொருள் எனப் பொருள்படுகிறது. நிர்த்தூளிப்படுதல் என்னும் சொல்நிர்நாசமாதல்எனப் பொருள்படுகிறது. உதறுதல் என்னும் பதத்துக்கு அப்புறப்படுத்துதல் என்பது பொருள். கட்டுண்டு கிடப்பதில் யானைக்கு விருப்பமில்லை. தன்போக்கில் உலாவித்திரிய அது விரும்புகிறது. ஜீவாத்மா ஒருவன் ஆசையில் கட்டுண்டு கிடக்கிருன். ஆசையில் அவன் கட்டுப்பட்டிருக்கும் பரியந்தம் பிரபஞ்ச வாழ்வில் மனி தன் தளைக்கப்பட்டிருப்பவன் ஆகிருன். பலம் படைத் துள்ள யானையே தன்னைக் கட்டியிருக்கும் சங்கிலியை உடைத்தெறிந்துவிட்டுத் தன்போக்கில் போகவல்லது. பிறவிப் பெருங்கடலில் கட்டுண்டிருக்கிற மனிதன் எப் பொழுது விடுதலையடைகிருன் என்பது கேள்வி. ஜன் மாந்தரங்களில் அவனைக் கட்டிப் பிடித்திருக்கும் ஆசையை உடைத்துத் தள்ளுவானுகில் அப்பொழுது அவன் செயற்கரிய செயல் செய்தவனுகின்ருன். பராக் கிரமங்களுள் மிகப் பெரியது ஆசையைத் துகள் துக ளாக உடைத்தெறிவதாகும். தன் கட்டை யானை உடைத்துத் தள்ளுவது போன்று ஆசை என்னும்

கட்டினை ஆத்ம சாதகன் சின்னாபின்னமாக்கவேண்டும். இக்கருத்தை ஆசை நீகளத்தினை நிர்த்தூளிபட உதறி என்று தாயுமான சுவாமிகள் பகர்கின்றார். எது ஆசை என்பதை ஈண்டு ஆராய்வது அவசியமாகிறது. 'ஆசை அறுமின் ஆசை அறுமின்; ஈசனோடாயினும் ஆசை அறுமின்' என்பது பழமொழி. ஆனால் ஈசனைக் குறித்து மனிதன் அடையும் ஆசை அவனைப் பந்தப்படுத்தாது. உலக வாழ்க்கையில்கொண்டுள்ள நாட்டங்கள் அனைத்தும் ஆசை எனப்படுகின்றன. அந்த நாட்டத்தை ஒழிப்பதற்கு மனிதன் கடவுள் மீது ஆசை வைக்க வேண்டும். கடவுள் நாட்டம் வலுக்குமளவு உலக நாட்டத்தின் வேகம் தணிந்து விடுகிறது. யார் ஒருவனுக்குக் கடவுள் நாட்டம் ஒன்றுதான் உள்ளத்தில் நிறைந்திருக்கிறதோ அவனுக்குஉலக ஆசைகள் அனைத்தும் அகன்றுபோய் விடுகின்றன. கடவுளை அடைந்தபின் கடவுள் நாட்டம் என்னும் ஆசையும் இறுதியில் ஒடுங்கிவிடுகிறது. உலக வாழ்க்கையில் வைத்துள்ள விருப்பத்துக்கு ஆசை என்று பெயர். அதை ஒழிப்பது மனிதன் செய்கின்ற செயல்களுள் சாலச் சிறந்ததாகிறது.

யானையின் காலில் விலங்கு போட்டுக் கட்டி பூமியில் ஆழப்பதித்திருக்கும் முளை ஒன்றில் கட்டி விடுகிறார்கள். யானை சங்கிலியை மட்டும் உடைத்தெறிந்து விட்டால் புதிய சங்கிலி போட்டுக் கட்டிப் பழைய முளையில் மாட்டி விடுவார்கள்; ஆனால் அந்த முளையையே பிடுங்கி எறிந்துவிட்டால் பிறகு அதைக்

கட்டிவைக்க ஏது இல்லாது போய்விடுகிறது. நட மாடித் திரியும் யானையைத் திரும்பத்திரும்பக்கொண்டு வந்து பூமியில் உறுதியாக அமைக்கப்பெற்றிருக்கும் முளையிலேயே கட்டி வைக்கிறார்கள். மனிதனைப் பிர பஞ்ச வாழ்க்கையில் கட்டிவைப்பதற்கு முளை ஒன்று உண்டு. அகங்காரம் என்பது அம்முளையாகும். அகங் காரம் ஆங்காரமாகத் திரிவுபட்டிருக்கிறது. எது அகங்காரம் என்னும் கேள்வி எழுகிறது. அகங்காரம் இருக்கும் வரையில் மனிதன் பந்தபாசத்துக்கு ஆளா கிறான். அகங்காரம் இருக்கும் வரையில் மனிதனுக்குக் கடவுள் காட்சி கிட்டுவதில்லை. அதை இரண்டு வகைப்பட்டதாக ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் பிரித் திருக்கிறார். பழுத்த அகங்காரம் என்பது ஒன்று. பழுக்காத அகங்காரம் மற்றொன்று. பழுத்த அகங் காரம் மனிதனுக்குத் தீங்கு செய்யாது. ஒருவிதத்தில் அவனுடைய முன்னேற்றத்துக்கு அது துணைபுரிகிறது. 'நான் கடவுளுடைய பக்தன். நான் 'கடவுளுக்கே உரியவன்' – ஒரு மனிதன் இப்படித் தன்னை அகங் கரிப்பானாகில் அதில் கேடு இல்லை. இது பழுத்த அகங்காரம். பழுக்காத அகங்காரம் வீண் கர்வம் படைத்தது. 'என்னை யாரென்று தெரியுமா? உன்னைப் படாத பாடுபடுத்தி வைக்கிறேன், பொறு' இப்படிப் பகர்வது அதன் இயல்பு. அது மனிதனைப், புதிய பந்தபாசங்களில் ஆழ்த்துகிறது. அகங்காரத்தை இன் னும் ஓர் பாங்கில் நூலோர்கள் விளக்கியுள்ளார்கள். தானல்லாததைத் தான் என்று கருதுவது அகங்காரம்.

மனிதன் உடல் சொரூபம் அல்ல. ஆனால் உடலைத் தான் என்று கருதுவது அகங்காரம். தன்னை ஆத்ம சொரூபமாக உணர்வது அகங்காரமாகாது. பழுத்த பழத்தில் மேல்தோல் வேறு, சுளை வேறு ஆகப் பிரிந்து போய்விடுகின்றன. அங்ஙனம் ஞானம் முதிர்கின்ற இடத்து ஆத்ம சொரூபம் வேறு, உடல் வேறு என்கின்ற நல்லறிவு வந்துவிடுகிறது. அகங்காரம் அகலுகின்றவளவு ஒரு மனிதன் ஞானி ஆகிறான். கட்டுத் தரையிலுள்ள முளையை நீக்கிவிட்டால் யானையைத் திரும்பவும் அங்கே கட்டமுடியாது. ஆத்ம சாதகன் தன்னுடைய அகங்காரத்தை நீக்கிவிட்டால் பிறகு அவனைப் பந்தப்படுத்துதற்கு ஒன்றுமில்லை. இக் கோட்பாட்டை **ஆங்கார முளையை எற்றி** என்று தாயுமானவர் பகர்கிறார். எற்றுதல் என்பதற்கு எறிதல் அல்லது நீக்கிவிடுதல் என்பது பொருள்.

கட்டினின்று விடுபட்ட யானை எப்பொழுது மகிழ்வடைகிறது? சிற்சில வேளைகளில் அது மதம் பிடித்தது ஆய்விடுகிறது. அப்பொழுது அதற்கு என்ன துன்பம் வரப்போகிறது என்பதைப்பற்றிக் கவலை இல்லை. ஒன்றுக்கும் அஞ்சாத நிலையில் யானை அப்பொழுது இருக்கிறது. அகங்காரம் பிடித்த மனிதனை மதம் பிடித்தவன் என்று சொல்லலாம். அகங்காரம் என்னும் மதம் பிடிக்கின்றபொழுது அதைத் தொடர்ந்து துன்பமும் வருகிறது. அத்துன்பத்தினின்று மனிதன் தப்பித்துக்கொள்ளமுடியாது. வெளித் தோற்றத்துக்கு அகங்காரம்போன்று

தென்படுகிற மற்றொரு மனநிலை உண்டு. ஆத்மபோதத்தில் நிலைபெற்றிருக்கின்றவனுக்கு அச்சம் கிடையாது. அவன் அனுஷ்டிக்கின்ற மதம் உலகிலுள்ள மதங்கள் அனைத்துக்கும் அடிப்படைத் தத்துவமாகும். மெய்ப்பொருள் ஒன்றுதான் உள்ளது. அந்த ஒரு பொருள் பலதரப்பட்ட காட்சிகளைக் கொடுத்துக் கொண்டிருக்கிறது. பலதரப்பட்ட காட்சிகளைக் காண்பது அக்ஞானம். அத்தனைக்கும் அடிப்படையாயுள்ள மூலப்பொருளைக் காண்பது ஞானநிலை. தங்கத்தைக் கொண்டு விதவிதமான நகைகள் செய்கிறோம். வெவ்வேறு வகைப்பட்ட நகைகள் என்று அவைகளை உலகத்தவர் பொருள்படுத்துகின்றனர். தங்கம் ஒன்றுதான் கணக்கற்ற நகைகளாகக் காட்சி கொடுத்துக் கொண்டிருக்கிறது என்று தங்கத்தை உள்ளபடி அறிகின்றவன் அதைப் பொருள்படுத்துகிறான். மூலப்பொருளாகிய ஒன்றை மட்டும் அங்கீகரிக்கிற மதத்துக்கு அத்வைதமதம் என்று பெயர். ஏனைய மதங்கள் எல்லாம் அத்வைத மதத்தில் சமரசப்பட்டுவிடுகின்றன. அத்வைத மதத்தை அனுஷ்டிக்கின்றவன் நாநாவகைப்பட்ட பிரபஞ்சக் காட்சிகளை எல்லாம் பரம்பொருள் என்றே அங்கீகரிக்கிறான். ஜகத் என்கின்ற பிரபஞ்சமும் ஜீவர்கள் என்கின்ற உயிர்த்தொகைகளும் அவனுடைய காட்சியில் இல்லை. உலகனைத்தும் ஆயிருப்பவர் கடவுள் ஒருவரே என்னும் கொள்கையில் அவன் உறுதிகொண்டவனாக இருக்கின்றான். தன்னையும் மற்ற உயிர்களையும் கடவுள் சொரூபமாக

உணர்கிறான். தன்னைக் கடவுள் சொரூபமாக உணர்வது அகங்காரம் என்று சிலர் நினைக்கின்றனர். வேதாந்த சாஸ்திரப்படி தன்னை உடல் சொரூபமாக உணர்வது அகங்காரம். தன்னை ஆத்ம சொரூபமாக உணர்வது மெய்யுணர்வு. பரமாத்மன் ஒருவனுக்கு அன்னியமாக ஜீவாத்மாக்கள் இல்லை. அலைகள் அனைத்தும் கடலினுடைய கணக்கற்ற தோற்றங்களாக இருப்பதுபோன்று எண்ணிறந்த ஜீவகோடிகள் பரமாத்மனின் தோற்றங்களாம். ஜீவதோற்றம் தாற்காலிகமாக அக்ஞானத்தால் வரவழைத்துக்கொண்ட பொய்த்தோற்றம். பரபோதமோ ஜீவனுடைய நிஜ சொரூபம். அதை நினைவுக்குக் கொண்டுவருவது ஒன்றே மெய்ஞானத்தைப் பெறுவதற்கு உற்ற உபாயமாகிறது. இக்கோட்பாட்டை **அத்துவித மதமாகி** என்று தாயுமானவர் பாராட்டுகிறார்.

அத்வைத அனுபவம் வருவதற்கு முன்பு மனபரிபாகம் அடைவதற்கு மத அனுஷ்டானங்கள் பல இருக்கின்றன. அவைகளுள் ஆறு மதங்கள் சிறந்தவை என ஐதிகமாக அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றன. உண்மையில் சான்றோர்களால் நிறுவப்பெற்ற எல்லா மதங்களும் அத்வைத மதத்தை அடைவதற்கு உற்ற உபாயங்களாகின்றன. மலை உச்சி ஒன்று. அதை எட்டுதற்கு மலை அடிவாரத்தில் இருக்கின்ற பாதைகள் பல. எந்தப் பாதையை முறையாகப் பயன்படுத்தினாலும் மலை ஏறுகின்றவன் மலை உச்சிக்கு வந்தாக வேண்டும். மலை உச்சிபோன்றது அத்வைத மதம்.

அதை அடைதற்கான பாதைகள் போன்றவை உலகில் உள்ள மதங்கள். அவைகளுள் சைவம், வைஷ்ணவம், சாக்தம், கௌமாரம், காணபத்யம், சௌரம் ஆகிய ஆறும் சரியானமதங்கள் என்று வேதத்தில் அங்கீகரிக்கப்பட்டவைகளாகும். இந்த ஆறு மதங்களுள் ஆத்ம சாதகன் ஏதேனும் ஒன்றை அனுஷ்டிக்கலாம்; அல்லது ஆறு மதங்களையும் ஒன்று சேர்த்தும் அனுஷ்டிக்கலாம். பரந்த மனப்பான்மை படைத்த ஆத்மசாதகனுக்கு இவ் ஆறு மதங்களுள் உயர்வு தாழ்வு கிடையாது. சமரச நோக்கம் கொண்டு ஆறு சமயங்களையும் அவன் பொருள்படுத்துகிறான். அவனுடைய மனநிலை மதம் பிடித்த யானையினுடையநிலையோடுஒப்பிடப்படுகிறது. உயர்வு தாழ்வு பாராட்டாமையே அதற்குக் காரணமாகிறது. பக்கம் பக்கம் ஆறு நதிகள் இருக்கின்றன என்று வைத்துக்கொள்வோம். நதியினுள் இறங்கி, துதிக்கையினால் நீரை உறிஞ்சி தன் உடல்மீது அதை இறைத்துக் கொள்ளுதலில் யானைக்குப் பெருமகிழ்வு உண்டாகிறது. ஒரு நதிக்கும் மற்றொரு நதிக்குமிடையில் யானை வித்தியாசம் பாராட்டுவதில்லை. எந்நதியினின்று அதற்கு நீர் அகப்பட்டாலும் அதைத் துதிக்கையால் உறிஞ்சித் தன்மீது ஊற்றிக்கொள்ளுதலில் அதற்குப் பேரானந்தம் உண்டாகிறது. யானையின் துதிக்கையால் உறிஞ்சி உமிழப்படுகிற நீருக்கு விலாழி என்று பெயர். தன்மீது நீர் ஊற்றிக்கொள்வதற்காகத் துதிக்கையை அது பயன்படுத்துகிற செயல் யானைக்கு மிக அரிய செயல் ஆகிறது. அரிய செயலைச் செய்கின்ற

கையை அங்கை என்கிறோம். அழகிய கை என்பது அதன்பொருள். கடவுளை வழுத்துகிற கை அங்கை ஆகிறது. பிறர்க்குப் பணிவிடை செய்கிற கை அங்கை ஆகிறது. கெட்டவர்களைத் தண்டிக்கிற கை அங்கை ஆகிறது. தன்னை நீராட்டிக்கொள்ளும் யானையின் துதிக்கையும் அங்கை என்று அழைக்கப்படுகிறது. ஆறு திசைகளிலிருந்து ஓடிவருகின்ற ஆறுகளினின்று நீர் உறிஞ்சித் தன்னைக் குளிப்பாட்டி யானை மகிழ்வடைவது போன்று ஆறு மதங்களின் மூலமாக மெய்ப் பொருளை வழுத்தி அத்வைதமதத்தில் போகின்றவன் பெருமகிழ்வு எய்துகிறான். அவனுடைய செயல் யானையினுடைய செயலோடு ஒப்பிடப்படுகிறது. எனவே **மதம் ஆறும் ஆறாக அங்கையின் விலாழியாக்கி** என்று தாயுமானவர் இக்கோட்பாட்டை விளக்குகிறார்.

உயிர் வகைகளின் செயல்கள் சிலவற்றை நாம் ஆராய்ந்து பார்த்தால் நமக்கு உண்மை ஒன்று விளங்கும். இளம் நாய் ஒன்று ஓரிடத்தில் படுத்திருக்கிறது. அது முன்பு காணாத காட்சி ஒன்று அதற்குப் புலப்படுகிறது. அதாவது காற்றடிப்பதன் விளைவாக கடுதாசி ஒன்று அதன் முன்னிலையில் சுழன்று பறந்து வந்தால் துள்ளிக் குதித்தும் குரைத்தும் அந்த இளம் நாய் பறந்து வருகிற காகிதத்தை எதிர்க்கிறது. தனக்கு அன்னியமான மற்றொரு பொருளின் அசைவைக் காண அதற்குப் பிடிக்கவில்லை. எனவே அங்ஙனம் அது பாய்ந்து குலைக்க ஆரம்பிக்கிறது. யானை ஒன்றுக்கு நிலா வெளிச்சத்தில் தன்னுடைய

நிழல் ஒரு பாறையின்மீது தென்படுமாகில் தனக்கு நிகரான மற்றொரு யானை வந்துவிட்டது என்று அது கோபித்து ஆரவாரம் செய்யும். தனக்கு நிகரான மற்றொரு உயிர் தன் முன்னே தோன்றுவது அந்த யானைக்கும் பிடிப்பதில்லை. தனக்கு நிகராக மற்றொரு பொருள் தரணியில் இருப்பது எவ்வுயிர்க்கும் பிடிப்ப தில்லை. அந்த இயல்பே அவ்வுயிர்கள் அனைத்திடத் தும் அத்வைதமத உணர்வு மறைந்துகிடக்கிறது என் பதை விளக்கிக்காட்டுகிறது. இக்காலத்தில் மனிதன் நிழற்படம் பிடிக்கிறான். புகைப்படம் என்றும் நாம் அதைப் பகர்கிறோம். தன் சொரூபத்தின் பிரதிகள் கணக்கற்றவைகளை நிழற்படத்தின் மூலமாக மனிதன் உண்டுபண்ணிக்கொள்ள முடியும். கணக்கற்ற படங் கள் இருப்பதால் அவன் கணக்கற்ற வியக்திகள் ஆய் விட்டான் என்பதல்ல. ஒரு வியக்தியைக் கணக்கற்ற வியக்திகளாக வெறும் தோற்றத்தில் அவன் உண்டு பண்ணிக் கொண்டான். தன் சொரூபத்தை விளக்கு கின்ற அத்தனை படங்களிடத்தும் அவனுக்கு ஒரு விதமான பாசம் அல்லது பற்றுதல் இருக்கிறது. மனிதனுக்கு உலக வாழ்க்கையில் உள்ள பற்றுதலும் பாசம் எனப் பகரப்படுகிறது. அது அக்ஞானத்தால் உண்டுபண்ணப்பட்ட இருள் ஆகிறது. அக்ஞான இருள் இருக்கும் பரியந்தம் பாசமும் மனிதனுக்கு இருக்கும். அந்த அக்ஞானத்தின் விளைவாகவே பல பொருள்களின் காட்சியும் அவனுக்கு இருக்கும். பல பொருள்களைக் காண்கிற இடத்துத் தனக்கு உற்றார்

என்றும், வேற்ருர் என்றும் பாகுபாடுகள் வந்துவிடு கின்றன. அதை உலக வியவகாரம் என்கிறேம். ஒரு சிலரை விரும்பவும் இன்னும் சிலரை வெறுக்கவும் அப்பொழுது அம்மனிதன் செய்கின்ருன். அதனுல் அவனுக்கு உலக வழக்குகள் பல வந்துவிடுகின்றன. தன் நிழலைக்கண்டு பிளிறுகிற யானை போன்று அஞ்ஞானத்தால் புற உலகில் தென்படும் ஒரு பொருளின் பல காட்சிகளைக் கண்டு மனிதனும் வியவகாரங்கள் பல செய்கிருன். இக்கோட்பாட்டை **பாச இருள் தன் நிழல் எனச் சுளித்து ஆர்த்து** என்று தாயுமானவர் சொல்லுகிருர். சுளித்தல் என்பது கோபித்தல் எனப் பொருள்படுகிறது. ஆர்த்தல் என்னும் சொல்லுக்கு ஆரவாரித்தல் அல்லது ஓலமிடல் என்னும் அர்த்தம் வருகிறது.

தீனி தின்பதில் யானைக்கு நிகரான ஜந்து உலகில் இல்லை. அதைக் கட்டி வளர்க்கின்றவர்கள் வண்டி வண்டியாக அதற்கு இலை, தழைகள், புல் முதலியவைகளைக் கொண்டு வந்து போடவேண்டும். வனத்தில் சஞ்சரிக்கின்ற யானை ஆங்குள்ள செடி கொடிகளை வேண்டியவாறு புசிக்கும். யானையை வளர்க்கின்றவர்கள் அதன் உணவுக்காகவென்றே பெரிய ஏற்பாடுகளைச் செய்தாகவேண்டும். கரும்பு, வாழைப்பழம், அரிசி முதலியவைகளைக் கூடை கூடையாக ஒருயானைக்குப் படைக்கவேண்டும். அதற்கேற்ற செல்வம் படைத்திருக்கிறவர்களே யானை கட்டி வளர்க்க முடியும். யானை பெருந்திண்டி தின்பதற்கு நிகராக ஆத்ம

சாதகன் எதை அருந்தவேண்டும் என்னும் கேள்வி எழுகிறது. அவன் அருந்துதற்கான அரிய உணவு ஒன்று இருக்கிறது. புசிப்பது யாராயிருந்தாலும் புசிக்கப்பட்ட உணவு உருமாறி புசிக்கின்றவனுடைய உடல் சொரூபமாக அமைந்துவிடுகிறது. ஆத்ம சாதகன் உண்டு செமிப்பதற்கான உணவு உடல் மயமானதல்ல, அது அவனுடைய உள்ளத்தின் மயமானது. மனதையே எடுத்து உண்டு செமிக்க அவன் கற்றுக் கொள்ளவேண்டும். மனது எத்தகையது என்பதை ஆராய்வது அவசியமாகிறது. சிற்றுயிர்களிடத்து சாமான்ய உணர்வு சொரூபமாக அது இருக்கிறது. உயிர்கள் மேல் நிலைக்கு வரவர மனதின் செயலும் விரிவடைந்து வருகிறது. மனிதனிடத்து மனது நன்கு வளர்ந்து விரிவடைந்த நிலையில் இருக்கிறது. அது சங்கல்ப விகல்ப சொரூபமானது. வேண்டுமென்றே திட்டம் போட்டுப் புதியதாக எண்ணுகிற எண்ணத்துக்கு சங்கல்பம் என்று பெயர். ஏற்கனவே எண்ணி உள்ளத்தில் இடம் பெற்றிருக்கிற எண்ணத்துக்கு விகல்பம் என்று பெயர். சங்கல்பங்களும் விகல்பங்களும் ஓயாது மனதில் உதித்துக்கொண்டிருக்கின்றன. கடலில் அலைகள் உதித்து வருவது போன்று மனதில் எண்ணங்கள் இடையீடின்றி உதித்துக்கொண்டே இருக்கின்றன. எண்ணங்களுக்கு ஒப்ப மனது எப்படி விரிவடைந்துள்ளது என்பதை ஆராய வேண்டும். புறத்திலுள்ள பொருள்களைப் புலப்படுத்தும் பாங்கு மனதுக்கு இருக்கிறது. சுவை, ஒளி, ஊறு, ஓசை,

நாற்றம் ஆகிய ஐந்துவித நுகர்ச்சியைக் கொண்டு மனது புற உலகைப் புலப்படுத்துகிறது. புலப்படுத்தும் தன்மையைப் பார்த்தல் என்று பகர்வது உலக வழக்கம். பார்த்தல் என்பது தரிசித்தல் எனப் பொருள் படுகிறது. அதிலிருந்து தர்சனம் என்னும் தத்துவ ஆராய்ச்சி வந்தது. தொட்டு உணரும் தன்மை சிற்றுயிர்க்கு உண்டு. மனிதன் தொட்டு உணருங்கால் தொட்டுப் பார்த்தல் என்று அச்செயல் இயம்பப்படுகிறது. அதே விதத்தில் சுவைத்துப் பார்த்தல், கேட்டுப் பார்த்தல், முகர்ந்து பார்த்தல் இப்படிக் கண்ணின் செயலாகிய பார்வை ஏனைய புலன்கள் மீதும் வருவிக்கப்படுகிறது. பஞ்சேந்திரியங்களைக்கொண்டு புற உலகிலிருப்பவைகளை ஐந்து விதமான பாங்குகளில் மனது பார்த்துக் கொண்டிருக்கிறது. எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாக வெளியுலகில் இருக்கின்றவைகளை மனது பார்க்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு அது பரந்த பாங்குடையதாக விரிவடைகிறது. இப்படி விரிவடைந்துள்ள மனதை ஆத்மசாதகன் அருந்தி அழித்து விட வேண்டுமென்றால் அது ஆகாத காரியம். வனத்திலுள்ள செடி கொடிகளை எவ்வளவுதான் யானை அருந்தினும் புதிய செடிகொடிகள் வளர்ந்துகொண்டே இருக்கின்றன. விரிவடைந்த சங்கல்ப விகல்பங்களையுடைய மனதை ஆத்ம சாதகன் புசித்துக்கொண்டே இருந்தாலும் மேலும் அது வளர்ந்து தலையெடுக்கிறது. மனதை முற்றிலும் உண்டு ஏப்பமிட்ட மேலோனே முற்றிலும் ஞானத்துக்குத் தகுதியுடையவனாகின்றான்.

மனதற்ற தூய நிலையே அவன் நாடும் குறி ஆகும். மனதை முற்றிலும் அடக்கி ஒடுக்கிவிட அவன் பெரும் பாடுபடவேண்டும். ஆனால் அதைத் துன்பம் நிறைந்த செயல் என்று கருதலாகாது. மகிழ்வுடன் யானை உணவு உண்பது போன்று புற உலகில் ஓடும் மனதை ஞான சாதகன் ஒடுக்கிவிடவேண்டும். அவனுக்கு நல்ல உணவு ஆவது அவனுடைய மனது. இக்கோட்பாட்டை, **பார்த்துப் பரந்த மனதைப் பாரித்த கவளமாய்ப் பூரிக்கவுண்டு** என்று தாயுமானவர் இயம்புகிறார். பாரித்த கவளம் என்பது பெருந்திண்டி எனப்பொருள் படுகிறது. பூரிக்க உண்ணுதல் என்பது மகிழ்வுடன் சாப்பிடுதல் ஆகிறது. இப்படி மனதை ஆத்ம சாதகன் தனது ஆத்ம சொரூபமாக ஜீரணம் செய்துவிட வேண்டும்.

வளர்க்கின்ற யானையை அலங்கரித்து வெளியே கொண்டுவருகின்ற பொழுது அதற்கு நெற்றிப் பட்டம் கட்டுவதுண்டு: நெற்றிப்பட்டத்துக்கு முக படாம் என்ற பெயர் உண்டு. பெற்றோர் குழந்தைகளை அலங்கரிக்கிறார்கள். குழந்தைக்கு அலங்காரம் பிடிக்காவிட்டால் அதைப் பிடுங்கித் தூர எறிந்துவிடுகிறது. யானைக்கு வெறி பிடித்திருக்கின்றபொழுது சில வேளைகளில் தன்மீது அணிந்திருக்கும் நெற்றிப் பட்டத்தைப் பிடுங்கி மிதித்து நசுக்கிவிடுகிறது. ஆத்ம சாதகனும் தன்போக்கில் அத்தகைய செயல் ஒன்றைச் செய்வது அவசியமாகிறது. அவனை ஜீவ சொரூபமாக அலங்கரித்திருப்பது மாயை. இந்தச் சொல்லை சமய

வாதிகள் விதவிதமாகப் பொருள்படுத்துகின்றனர். மாயை என்னும் சொல்லுக்கு வேதாந்த தர்சனத்தின் முடிவான விளக்கம் யாது என்பதை அறிவது அவசிய மாகிறது. மெய்ப்பொருள் ஒன்று. ஐம்பொறிகளின் துணைகொண்டு அந்தக்கரணத்தால் அதைக் காணு மிடத்து அதற்கு மாயை என்று பெயர். அந்தக்கரண மாகிய மனதை அழித்தான பிறகு தெளிந்த பேரறிவு மிச்சமிருக்கிறது. அப்பேரறிவோ, யாண்டும் இருக்கிற ஒருபொருளைப் பரம்பொருளாக உணர்கிறது. எனவே எது உலகக் காட்சியாகத் தென்படுகிறதோ அது மாயை. எது வஸ்துவின் நிஜ சொரூபமாகத் தென் படுகிறதோ அது பரம். மரத்தில் யானை செய்யப் பட்டிருக்கிறது. அதை யானையாகக் காண்பது மாயை. மரத்தை மரமாக உணர்வது பரத்தின் காட்சியாகும். மாயை வடிவமாயுள்ள பிரபஞ்சக் காட்சியை நசுக்கித் தள்ளிவிட்டுப் பரம்பொருள் காட்சியைக் காண்பதே ஆத்ம சாதகனுடைய குறிக்கோள் ஆகிறது. இக் கோட்பாட்டை **முகபடாம் அன்ன மாயை நூறி** என்று தாயுமானவர் சொல்லுகிறார். முகபடாம் அன்ன என்பது நெற்றிப்பட்டம் போன்ற எனப் பொருள் படுகிறது. நூறுதல் என்பதற்கு நசுக்குதல் அல்லது அரைத்தல் என்பது அர்த்தம்.

ஒன்றிலும் அடங்காத யானையை அடக்குதற்கு ஒரே ஒரு கருவி உண்டு.. அதற்கு அங்குசம் என்று பெயர். அங்குசத்தால் யானைப்பாகன் யானையை முற்றிலும் தன் கைவசத்துக்குக் கொண்டுவந்துவிடு

கிறான். அத்வைத சித்தியடைந்துள்ள நிறைஞானி ஒருவன் எதற்கும் அடிமைப்பட்டவன் அல்லன். போற்றுகிறவன், போற்றுதலுக்கு உரியவன் என்று இரண்டு வஸ்துக்கள் இருந்தால்தானே போற்றுதல் நடைபெறும். இரண்டற்ற நிலையில் யார் யாரைப் போற்றுவது? ஆனால் அத்வைத ஞானிக்கும் குருபக்தி என்னும் துவைதநிலை சரீரம் இருக்கும்வரையில் நீடித்திருக்கிறது. ஆதி சங்கரர் படைத்திருந்த குருபக்தி அவர் விதேகமுக்தன் ஆகும்வரையில் நிலைத்திருந்தது. விவேகானந்த சுவாமிகளிடத்து அத்வைத ஞானம் ஒளிர்ந்துகொண்டிருந்தது. வேதாந்த சிங்கம்என்றே மத்தகஜம் என்றே அவரை அழைப்பது முற்றிலும் பொருந்தும். சிலவேளைகளில் ருத்திர சொரூபமாக அவர் திகழ்வார். ஆனால் அவரைப் பரமஹம்ஸருடைய சிஷ்யர் என்று சொல்லிவிட்டால் உடனே ஒரு குழந்தையின் இயல்பு அவருக்கு வந்துவிடும். குரு பக்தியில் அவருடைய சாந்தசொரூபம் மிளிரும். தாயுமான சுவாமிகளும் குரு பக்தியின் இனிமையில் அடங்கிவிடுகிறார். இக்கோட்பாட்டை, **தேசுபெற நீ வைத்த சின் முத்திரை அங்குச செங்கைக்குள்ளே அடக்கி** என்று அண்ணல் இயம்புகின்றார். தேசு பெறுதல் என்பது ஞான ஒளி வீசுதல் எனப் பொருள்படுகிறது. மேலோர் கருத்துக்களை விளக்குதற்கு கை விரல்களைக் கொண்டு அமைக்கும் முத்திரைகள் பல இருக்கின்றன. அவைகளுள் சின் முத்திரை மிக உயர்ந்தது. பெருவிரலும் சுட்டுவிரலும் ஒன்றுகூடி நடுவிரல், மோதிரவிரல்,

சுண்டுவிரல் ஆகிய மூன்றும் பிரிந்துள்ள நிலையைச் சின் முத்திரை என்கிறோம். ஞானோபதேசம் செய்கின்றவர்கள் தங்களுடைய கையில் இத்தகைய முத்திரை தாங்கியிருக்கின்றனர். சுட்டுவிரல் ஜீவாத்மனுக்குச்சின்னமாகிறது. பெருவிரல் பரமாத்மாவின் சின்னமாகிறது. ஜீவாத்மா தன்னிடத்து ஜன்மாந்திரத்தில்வந்துகொண்டிருந்த மும்மலங்களைப் புறக்கணித்துவிட்டுப் பரமாத்மாவுடன் சேர்ந்திருத்தல் என சின்முத்திரை பொருள்படுகிறது. ஞானகுரு அதைத் தாங்கியிருக்கும் செயலை நீ வைத்த சின்முத்திரை என்று அவர் இயம்புகின்றார். அது அங்குசத்துக்கு ஒப்பானது என்றும் சொல்லுகிறார். ஞானகுருவின் உள்ளங்கை செந்தாமரைபோன்று இருப்பதால் அதைச் செங்கை அல்லது சிவந்த கை என்று சொல்லுகிறார். இத்தகைய கை பூண்டுள்ள சின்முத்திரை என்னும் அங்குசத்துக்கு ஆத்மசாதகன் அடங்கியவன் ஆகிறான்.

நீரில் மூழ்கி விளையாடுவதில் யானைக்குப் பெரு விருப்பம். ஆத்மசாதகன் மூழ்கி விளையாடுதற்கான நீர்நிலை ஒன்று உண்டு. அது சுகத்தைத் தருகிற சின்மயானந்தம். ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் தமது சிஷ்யரான சுவாமி விவேகானந்தரிடம் கேள்வி ஒன்று கேட்டார். "உன்னை ஒரு தேனீயாக வைத்துக்கொள். சின்மயானந்தம் என்னும் தேன் அகன்ற வாயுடைய ஒரு பெரிய பாத்திரத்தில் விளிம்பு வரையில் வார்த்து வைத்திருக்கிறது. நீ அத்தேனை எங்கே இருந்து எப்படி அருந்துவாய்?" இக்கேள்விக்கு விவேகானந்

தர் விடைகொடுத்தார். "நான் பாத்திரத்தின் விளிம்பில் எச்சரிக்கையாக அமர்ந்துகொண்டு தேனைச் சிறிது சிறிதாக உறிஞ்சி அருந்துவேன்."

"ஏன்? தேனினுள் மூழ்கி அருந்தினால் என்ன?" என்று மேலும் பரமஹம்ஸர் கேட்டார். "தேனீக்கு உணவு தேன் எனினும் அதனுள் மூழ்கினால் ஈ செத்துப் போய்விடும்" என்ற விடை மேலும் விவேகானந்தரிடமிருந்து வந்தது. "ஆனால் சின்மயானந்தம் என்னும் தேன் அமிர்த சொரூபம். அது சாகா மருந்து. சாகா மருந்தினுள் மூழ்கி செத்துப் போய் விடுதல் என்பது கிடையாது. அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சு என்கிற கொள்கைக்கு ஆங்கு இடமில்லை. நீ வேண்டியவாறு அதனுள் ஆழ மூழ்கித் திளைத்திருக்கலாம்" என்றார் பரமஹம்ஸர். இக்கருத்தினை, **சின்மயானந்த சுகவெள்ளம் படிந்து** என்று அண்ணல் இயம்புகின்றார். படிந்து என்னும் சொல் மூழ்கி எனப் பொருள்படுகிறது.

அதன் விளைவு என்ன ஆகிறது என்று கேட்கலாம். ஆத்ம சாதகன் திருவருளுக்குப் பாத்திரமாகிறான். ஞான அனுபவத்தில் அவன் நிறைவு அடைந்து விடுகின்றான். கடலுக்குள் வீழ்தற்கு முன்பு ஒரு சொட்டு மழைநீர் மிக அற்பமானதாய் இருக்கிறது. ஆனால் கடலுக்குள் வீழ்ந்த பிறகு அது தனது அற்ப வடிவை இழந்துவிட்டு நிறைபொருள் ஆகிய கடல் ஆய்விடுகிறது. பரத்தினை அடையும் ஞானி பரம்பொருள் மயமாய் விடுகிறான். இக்கருத்தினை, **நின் திருவருள் பூர்த்தியான** என்று அவர் இயம்புகின்றார்.

மதயானைக்கு வலிவு மிக உண்டு. ஆயினும் அது அங்குசத்துக்கு வசப்பட்டு ஒரு பெரும் கூட்டத்துக் குள்ளே நடந்து செல்லுமாகில் அதனிடத்து ஒருவித மான அழகும் மகிமையும் பொலிந்துகொண்டிருக்கும். கூட்டத்தில் இருக்கும் அனைவரும் அத்தகைய யானை யைக் கண்ணுறக் காமுறுவர். சான்றோர்கள் அதே பாங்கில் நிறைஞானியைக் காண விரும்புவார்கள். நிறைஞானியின் தரிசனமே அவர்களுக்குப் பரம் பொருளின் தரிசனமாகிறது. நிறை ஞானியின் கூட்டுறவே அவர்களுக்குப் பரம்பொருளோடு கூடி யிருக்கிற நிலையாகிறது. இக்கோட்பாட்டினை, **வாச முறு சற்சார மீது என்னை ஒரு ஞான மத்தகஜமென வளர்த்தாய்** என்கிறார் அண்ணல். வாசம் உறுதல் என்பதற்கு வசித்தல் பொருளாகிறது. சற்சாரமீது என்றால் பொருந்திய கூட்டம் என்பதாம். அறிவு கெட்ட நிலையை மதம் பிடித்த நிலை என்று சொல்லுவ துண்டு. இங்கே பேரறிவு நிறைந்த நிலை மதம்பிடித்த நிலை என இயம்பப்படுகிறது.

தம் குரு இடத்திலிருக்கின்ற மூன்றுவிதமான சிறப்புக்களைத் தாயுமானவர் பெரிதும் பாராட்டுகின் றார். அந்த மூன்றுவிதமான சிறப்புக்கள் அமையப் பெற்றிருக்குமளவு சமயம் ஒன்று நல்ல சன்மார்க்கம் ஆகிறது. மூவிதச் சிறப்புக்களுக்கு நல்ல பாங்கில் மூன்று சொற்கள் அமைந்திருக்கின்றன. அவைகளை முறையே மந்த்ரம், யந்த்ரம், தந்த்ரம் என்கிறோம். ஓர் உபமானத்தைக்கொண்டு இம்மூன்றின் மாண்பு

களை நன்கு விளக்கலாம். மோட்டார் வண்டி ஒன்று இருக்கிறது. அதை யந்த்ரம் என்கின்றோம். குறைபாடு ஒன்றும் அதனிடத்தில்லாது அது முறையாகப் பொருத்தப்பட்டிருக்கிறது. தங்குதடையின்றி இயங்கும் பாங்கு அதனிடத்திருக்கிறது. அதை யந்த்ரம் என்றே இயம்புகிறோம். கருவி என்பது அச்சொல்லின் பொருள். அதற்கு விசை தருவதற்கு அதனுள் பெட்ரோல் என்னும் மண்ணெண்ணெயைப் போடுகிறோம். அந்த எண்ணெயிலுள்ள விசை மோட்டார் வண்டியை இயக்கவல்லதாகிறது. அந்த மோட்டார் வண்டிக்கு மந்த்ரமாக அமைந்திருப்பது மண்ணெண்ணெய். பிறகு நல்லபாதையிலே முறையாக அந்தவண்டியைச்சாரதி ஒருவன் செலுத்துகிறான். நல்ல பாதையும் சாரதியின் திறமையும் சேர்ந்து தந்த்ரம் என்னும் பெயர் பெறுகின்றது. இங்ஙனம் யந்த்ரம், மந்த்ரம், தந்த்ரம் ஆகிய மூன்று கோட்பாடுகளும் முறையே அமையுமாயின் அவ்வண்டிப் பயணம் இனிது நிறைவேறும். சாதகன் புரிகின்ற ஆத்ம சாதனத்தில் இம்மூன்று தத்துவங்களும் நன்கு அமைந்திருக்கின்றன. மானுட உடல் அரியதொரு யந்த்ரமாகிறது. இறைவன் என்னும் குறிக்கோளைப் போய்ச் சேர்வதற்கு இது நல்ல கருவி. பழுதுபட்டுப் போகும்படி இதை விட்டுவிடலாகாது. இறைவனுக்குரிய ஆலயமாகவே இதை இனிது காத்து வைத்திருக்க வேண்டும். குரு உபதேசித்திருக்கிற இறைவனுடைய திருநாமம் மந்த்ரமாகிறது. இறைவன்வேறு அவனுடைய திருநாமம் வேறு

அல்ல. மோட்டார் வண்டியை இயக்குதற்கு எண்ணெய்ச் சக்தி இருப்பது போன்று சாதகனைத் தெய்வத்தினிடத்துக் கொண்டு செலுத்துதற்கு மந்த்ரத்தில் சக்தியிருக்கிறது. சத்குரு ஒருவருடைய வாயினின்று வருகிறபொழுது மந்த்ர சக்தியும் மிகப் பெரியதாகி விடுகின்றது. அடுத்தபடியாகச் சாதகன் வாழ்கின்ற பெருவாழ்வும் அவன் கடைப்பிடிக்கின்ற யோக சாதனங்களும் சேர்ந்து நல்ல தந்த்ரம் ஆகி விடுகிறது. சாதகன் இம்மூவிதப் பேரியல்புகளையும் முறையாகக் கையாண்டு இறைவனை அடைவது திண்ணம். இம்மூவிதக் கோட்பாடுகளை, **மந்த்ரகுருவே யோக தந்த்ர குருவே மூலன் மரபில் வரு மௌன குருவே** என்று அண்ணல் இயம்புகிறார். சத்குருவுக்கேற்ற நல்ல சிஷ்யனைத் தாமே அமைந்திருப்பதில் யந்த்ரம் என்னும் கோட்பாடு தொக்கி நிற்கிறது. இக்கருத்துக்கள் யாவற்றையும் மேற்கூறிய பாடலின்கண் தாயுமானவர் தொகுத்து அமைத்திருக்கிறார்.

## மௌனகுரு வணக்கம் - 2

ஐந்துவகை யாகின்ற பூதமுதல் நாதமும்
அடங்கவெளி யாகவெளிசெய்(து)
அறியாமை யறிவாதி பிரிவாக அறிவார்கள்
அறிவாக நின்றநிலையில்
சிந்தையற நில்லென்று சும்மா இருத்திமேல்
சின்மயா னந்தவெள்ளந்.
தேக்கித் திளைத்துநான் அதுவாயிருக்கநீ
செய்சித்ர மிகநன்றுகாண்
எந்தைவட வாற்பரம குருவாழ்க வாழஅரு
ளியநந்தி மரபுவாழ்க
என்றடியர் மனமகிழ வேதாக மத்துணி
பிரண்டில்லை யொன்றென்னவே
வந்தகுரு வேவீறு சிவஞான சித்திநெறி
மௌனோப தேசகுருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

*வீடு ஒன்று இருக்கிறது. அதனுள் தட்டுமுட்டுச் சாமான்கள் ஏராளமாய் இருக்கின்றன. உள்ளே சென்று பார்த்தால் எல்லாம் ஒழுங்காக அமைக்கப் பெற்றவைகளாய் இருக்கின்றன. அவ்வீட்டினுள் வசிக்கிற மனிதனுக்கு வசதிகள் எல்லாம் அமைந் திருக்கின்றன. அப்படி அமைக்கப் பெற்றுள்ள வீட்டி னுள் பிறகு திடீரென்று காட்சி மாறுகிறது. உள்ளே வைக்கப்பட்டிருந்த சாமான்கள் எல்லாம் விரைவில்*

அப்புறப்படுத்தப்பட்டன. பிறகு வெறும் வீடு மிச்சம். அதைத் தொடர்ந்து வீடும் கலைக்கப்பட்டது. கூரை போய்விட்டது. சுவர்கள் தகர்க்கப்பட்டன. இடிந்துபோன குட்டிச் சுவர்கள் எல்லாம் அப்புறப் படுத்தப்பட்டன. பூமியைத்தோண்டி உள்ளே இருந்த அஸ்திவாரமும் நீக்கப்பட்டது. பூமியும் நிரவி உழுது சமப்படுத்தப்பட்டது. அதன்மீது புல் முளைத்து வந்தது. பண்டங்கள் பல நிறைந்திருந்த வீடு இப்பொழுது இருக்குமிடம் தெரியாது மறைந்து போய் விட்டது. ஆகாசம் அல்லது வெட்டவெளியின் எப் பகுதியை அந்த வீடு அடைந்திருந்ததோ அந்த வெட்டவெளி மட்டும் மிச்சம். அதை அகற்றிவிட யாருக்கும் இயலாது.

நம் உடல் வாழ்க்கை அந்த வீட்டுக்கு ஒப்பானது. வீடு ஒரே இடத்தில் இருந்தது. இடம் மாறி நடமாடும் தன்மையுடையது நம் உடல் என்னும் வீடு. இது பஞ்சபூதங்களால் ஆனது. நிலம், நீர், நெருப்பு, காற்று, வெளி என இவ் ஐம்பூதங்களும் பெயர் பெறுகின்றன. ஒவ்வொரு பூதத்துக்கும் உரிய தனிச் செயல் ஒன்று உண்டு. அந்தச் செயலுக்கு அந்த பூதத்தினுடைய தன்மாத்திரை என்று பெயர். நிலம் அல்லது பிருதிவியினுடைய தன்மாத்திரை மணம். நீரின் தன்மாத்திரை சுவை. நெருப்பின் தன்மாத் திரை ஒளி. பூதங்கள் ஒளியின் வாயிலாக விளங்கு கின்றன. காற்றின் தன்மாத்திரை ஊறு அல்லது ஸ்பரிச உணர்ச்சி. ஆகாசத்தின் தன்மாத்திரை ஓசை

அல்லது சப்தம். ஐம்பூதங்கள் அடிபட்டுப் போகின்ற இடத்து அவைகளின் தன்மாத்திரைகளும் அடிபட்டுப் போய்விடுகின்றன. ஐம்பூதங்களையும் நீக்கிவிட்டால் பிறகு உடல் என்னும் குடியிருக்கும் வீடு இல்லாது போய்விடுகிறது. அவைகள் எல்லாம் ஒடுங்கியவிடத்து நாதம் முதலிய தன்மாத்திரைகள் எல்லாம் செயலற்றுப் போய்விடுகின்றன. உடல் என்பதைப் பிறகு காணமுடியாது. இக்கோட்பாட்டை, **ஐந்துவகையாகின்ற பூதம் முதல் நாதமும் அடங்க வெளியாக வெளி செய்து** என்று தாயுமானவர் இயம்புகின்றார். வெளியாக வெளி செய்து என்னும் சொல் தொடரின் பொருள் யாவரும் அறிய அப்புறப்படுத்தி என்பதாம். ஒரு வீட்டை இடித்து அழிக்கின்ற பொழுது ஊரே கூடி அதை வேடிக்கை பார்க்கமுடியும். உடல் வாழ்வு மரணத்தின்மூலம் ஒடுக்கப்படுங்கால் ஊரெல்லாம்கூடி அக்காட்சியைக் காண்கிறது. வீடு அழிந்துபோனபிறகு அது அமைந்திருந்த ஆகாசம் எஞ்சியிருந்தது. மானுட உடல் வாழ்வு மறைந்துபட்டுப் போன பிறகு ஏதேனும் எஞ்சியிருக்கிறதா என்னும் கேள்வி எழக்கூடும். ஆம்; உடல் கூறுகள் அனைத்தும் ஒடுங்கிய பிறகும் எஞ்சியிருக்கும் பொருள் ஒன்று உண்டு. அதை அறிந்து கொள்ளுதற்கு உடல் வாழ்க்கையைப் புறக்கணிக்கவும் உடல் வாழ்க்கையின் மூலம் நிகழ்கின்ற பல அரிய செயல்களைப் புறக்கணிக்கவும் பழகுகின்ற மனிதனுக்கு அப்படி எஞ்சியிருக்கின்ற பொருளை அறிந்து கொள்ள முடியும்.

உடல் வாழ்க்கை நடைபெற்றுக் கொண்டிருக்கின்றபொழுது மனிதனால் அறியப்படு பொருள்கள் பல இருக்கின்றன. அவைகளை யெல்லாம் ஒருவாறு அறிந்துகொள்ளவும் மனிதனுக்கு இயலுகிறது. சில பொருள்களை அறிந்து கொள்ளாத நிலைமையிலும் மனிதன் இருக்கின்றான். அறிந்து கொள்ளக்கூடியவைகள் எவை, அறியப்படாதவைகள் எவை என்று பாகுபடுத்தவும் மனிதனுக்கு இயலுகிறது. மனிதன் அயர்ந்து தூங்குகிறான். நாள்தோறும் அது அவனுக்கு உண்டாகிற அனுபவம் ஆயினும் அதனுடைய உண்மை நிலையை அறியாதவனாக அவன் இருக்கிறான். உணவைச் சுவைத்துச் சுவையை அறிகின்றான். ஆனால் சுவைக்கும் தன்மை தனக்கு எப்படி வந்ததென்று அவனால் அறிய முடியாது. மனிதன் மகப்பேறு பெறுகிறான். தனக்கு வாய்க்கப்போம் பேறு ஆண் ஆகுமா அல்லது பெண் ஆகுமா என்பதை அறிந்துகொள்ள அவனுக்கு இயலாது. அடுத்த நாள் சூரியன் உதயமாகும் என்பதை அவன் யூகிக்கிறான். அதில் உறுதியும் கொள்ளுகிறான். ஆனால் அடுத்த நாள் தனக்கு நிகழப் போகின்றவைகளை யெல்லாம் இன்றைக்கு அவென் அறிந்து கொள்ள முடியாது. அறிவு படைத்துள்ள மனிதன் சிலவற்றை அறிந்துகொள்ளுகின்றான்; இன்னும் சிலவற்றை அறிந்துகொள்ள அவனுக்கு இயலுவதில்லை. மனிதன் தன்னையே முழுதும் அறிந்துகொள்ள முயலுகின்றபோது அம்முயற்சிக்கு ஆத்ம சாதனம் என்று பெயர் வருகிறது. தன்னை ஓரளவு அறிந்தவனாகவும்

அறியாதவனாகவும் மனிதன் இருக்கிறான். இக்கோட்பாட்டை **அறியாமை அறிவாதி பிரிவாக அறிவார்கள்** என்று தாயுமானவர் இயம்புகிறார். பிரிவு ஆக அறிதல் என்பதற்கு அர்த்தம் வேறு வேறாக வகைப்படுத்தி அறிதல் என்பதாம். இக்கோட்பாடு மிகக் கடினமானது. இயற்கையில் சில சான்றுகளை எடுத்துக் கொண்டே இதை நாம் அறிய முயலவேண்டும். இரவும் பகலும் மாறி மாறி அமைகின்றன. பகல் வேளையில் பல பொருள்களை உள்ளபடி அறிகிறோம். இரவு வேளைகளில் அப்பொருள்களை உள்ளபடி அறிந்து கொள்ள முடியாது. கால வேற்றுமையினால் அறிவும் அறியாமையும் மாறிமாறி வருகின்றன. தூரத்தில் மானுட வடிவம் ஒன்று தென்படுகிறது. அது மனிதனா, அல்லது மானுடன் போன்று அமைக்கப்பெற்றுள்ள பதுமையா என்று விளங்குவதில்லை. இடவேற்றுமையினால் ஆங்கு அறிவு தடைப்படுகிறது. முட்டை ஒன்றில் பொரிக்கப்போம் பறவை எத்தகையது என்பது விளங்குவதில்லை. செயல் வேற்றுமையினால் அது முழுதும் விளங்காதிருக்கிறது. காலதேச வர்த்தமானத்தை ஒட்டி உலகிலுள்ள பொருள்களை மனிதன் சிறிது அறிந்தும் அறியாமலும் இருக்கிறான்.

சூரிய வெளிச்சத்தை நாம் நேரில் பார்க்கிறோம். ஆனால் இடையில் ஒரு மேகம் வந்து கட்டிக்கொண்டால் பூமியைவிட அவ்வளவு பெரியதாக இருக்கிற சூரியன் நமக்குக் கட்புலனாவதில்லை. சூரியனை அறிந்து கொள்ளாத நிலையை மேகம் பண்ணிவைத்து விடு

கிறது. சூரியனை அறிந்துகொள்கிற நிலை எது, அறிய முடியாத நிலை எது என்பதைப் பிரிவாக உணர்வது நமக்குச் சாத்தியமாகிறது. இனி சூரியனைப்பற்றிய மற்றொரு உண்மை உண்டு. சூரிய வெளிச்சம் பூமியில் வந்து படிவதற்குள் மாறுதல் அடைந்துவருகிறது. அந்த மாறுதலுக்குக் காரணம் பூமியைச் சுற்றிலும் உள்ள காற்று என்னும் திரையினால் உண்டாகிறது என்று வானநூல் நிபுணர் சொல்லுகின்றனர். பூமியைச் சுற்றிலும் சுமார் இருநூறுமைல் உயரத்துக்குக் காற்று சூழ்ந்திருக்கிறது. அது பூமியைவிட்டு மேலே போகப்போக இலேசானதாக இருக்கிறது. இருநூறு மைலுக்கு அப்பால் காற்று இல்லை என்பது அவர்களுடைய கொள்கை. இலேசான துணியின் மூலமாக சூரிய வெளிச்சம் வரும்போது அதன் இயல்பு சிறிது தடைப்பட்டு வருகிறது. இருநூறுமைல் கனமாக இருக்கிற காற்றினுள் நுழைந்து பூமிக்கு வருகின்ற பொழுது அதன் மூலநிலை பெரிதும் மாறிவிடுகிறது. ஆதலால் சூரிய வெளிச்சத்தை மூலத்தில் உள்ளபடி நாம் யாரும் காண்பவர்களும் அல்லர்; பயன்படுத்துபவர்களும் அல்லர். சூரிய வெளிச்சத்தை உள்ளபடி நாம் பெறுகிறோம் என்றும், பயன்படுத்துகிறோம் என்றும் எண்ணிவருகிறோம். அது முற்றிலும் உண்மையன்று. காற்றுத்திரையில் வடிகட்டி வருவதைத் தான் நாம் அறிந்தும் பயன்படுத்தியும் வருகிறோம். அதேபாங்கில் இவ்வுலகை நாம் காண்பதைப்பற்றிய கோட்பாடு ஒன்று இருக்கிறது. மனது என்னும் கண்

ணாடியை நாம் அணிந்திருக்கிறோம். புற உலகை அது இருக்கிறபடி நாம் காண்பவர்கள் அல்லர். நம்முடைய மனதுக்கு ஏற்றவாறு நாம் அதைக் கண்டறிந்து வரு கிறோம். கண்ணுக்குப் பச்சைக்கண்ணாடி போட்டிருக் கின்றவனுக்கு உலகமெல்லாம் பச்சை. சிவப்புக் கண் ணாடி போட்டிருக்கிறவனுக்கு உலகமெல்லாம் சிவப்பு. வளைந்து வளைந்து கோணலாயிருக்கிற கண்ணாடி போட்டிருக்கிறவனுக்கு உலகத்திலுள்ள பொருள் களும் கோணலாகத் தென்படும். நேர்மையான மனம் என்கிற கண்ணாடிகொண்டு பார்க்குமிடத்து இவ்வுலகி னுடைய மெய்க்காட்சி நமக்கு ஏகதேசம் தென்படும். மெய்ஞானிகள் இக்கோட்பாட்டை நமக்குப் பல விதங் களில் ஞாபகப்படுத்தியிருக்கின்றனர். கண்ணாடி போடாது பொருள்களைப் பார்ப்பது போன்று மனதை யும் ஒதுக்கி வைத்துவிட்ட பிறகு காண்போனுக்குக் காணப்படுபொருளின் அனுபவம் மெய்யான அனுபவம் ஆகும் என்கின்றனர். காற்றுத்திரையை நீக்கிவிட் டால் சூரிய வெளிச்சத்தின் மூலநிலை உள்ளபடி நமக்கு எட்டுவது போன்று மனதை நீக்கியான பிறகே மெய்ப்பொருள் காட்சி நமக்கு உள்ளபடி வருகிறது என்பதுவே மெய்ஞானிகளின் முடிவு.

இனி, மனது என்கிற பதத்துக்குச் சரியான பொருளை நாம் எடுத்துக்கொள்ள வேண்டும். அந்தக் கரணம் என்பது பொதுப்பெயர். அது புரிகின்ற செயலுக்கு ஏற்ப அதை மனம், புத்தி, சித்தம், அகங் காரம் என நான்காகப் பிரிக்கின்றோம். ஈண்டு மனதை

ஒதுக்கி வைத்தல் என்று சொல்லுகின்ற இடத்து அந்தக்கரணம் முழுதையுமே ஒதுக்கிவைத்தாக வேண்டும் எனப் பொருள்படுத்துதல் அவசியம். மெய்ஞானிகளுடைய கோட்பாட்டின்படி அந்தக்கரணத்தினுடைய துணைகொண்டு காண்கிற காட்சியும் அறியாமை அல்லது அக்ஞான நிலையாம். அந்தக்கரணம் அல்லது மனது எவ்வளவுதான் சுத்தியடைந்திருந்தாலும் அந்த மனது என்கின்ற கண்ணுடி போட்டுக்கொண்டு மெய்ப்பொருள் காட்சி காண்கின்ற இடத்து அது குறைபட்ட அல்லது திரிவுபட்ட காட்சி ஆகின்றது. ஆதலால் அதை அறியாமை என்கின்ற நிலையிலேயே சான்றோர்கள் ஒதுக்கி வைத்துவிட்டனர். மேகத்தை நீக்கிவிட்டு சூரியனைப் பார்ப்பது போன்றும் காற்றுத் திரையைக் கடந்த நிலையில் சூரியனைப் பார்ப்பது போன்றும் மனது என்னும் திரையை ஒதுக்கிவைத்து விட்டுக் காண்கிற காட்சிதான் மெய்யறிவு தருகிற காட்சி என்று அவர்கள் பகர்ந்திருக்கின்றனர். அப்படிக் காண்கின்றவர்களைத்தான் மெய்ஞானிகள் என்று அவர்கள் அங்கீகரிக்கின்றனர். மெய்ப்பொருள் காட்சிக்கு நம்மை ஆயத்தப்படுத்துவதே வாழ்க்கையின் குறிக்கோள். அதற்காக மனதைத் தூயதாக்குவதும், பிறகு அதை ஒதுக்கிவைப்பதும் நாம் செய்யக்கிடக்கும் கடமைகள் ஆகும். இக்கோட்பாட்டை நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொண்டால் தாயுமானவர் மேலும் பகர்வது நமக்குப் புலனுகும்.

மெய் ஞானிகள் யார் என்கின்ற கேள்விக்கு விளக்கம் வருகிறது. கட்டியிருக்கிற வீட்டை அடியோடு தகர்த்தெடுத்தான பிறகு வெட்ட வெளி எஞ்சி நிற்கிறது. சூரியனுடைய யதார்த்தநிலை சூரியனிடத்திலேயே இருக்கிறது. சூரிய வெளிச்சம் காற்றுத் திரையைத் தாண்டி நம்மிடத்து வரும்பொழுது சற்று மாறுதலடைந்து வருகிறது. மனிதனுடைய அமைப்பில் பஞ்ச பூதங்கள், அவைகளினுடைய தன்மாத்திரைகள், பிறகு அவைகளைப் புலப்படுத்துதற்கென்று அமைந்துள்ள மனம், சித்தம், புத்தி, அகங்காரம் ஆகிய இவைகளை எல்லாம் ஒதுக்கிவிட்டால் போக்கு வரவற்று எஞ்சியிருப்பது பேரறிவு. அந்தப் பேரறிவு நிலையில் இருப்பவர்களே அறிஞர் அல்லது மெய் ஞானிகள். அந்த நிலையை எட்டுவது ஆத்ம சாதனத்தின் குறிக்கோள். தாயுமான சுவாமிகளுக்குத் தமது குருவிடமிருந்து வந்த ஆணை எது என்பதை அவருடைய வாக்கினின்றே எடுப்போம். பேரறிஞர்கள் **அறிவாக நின்ற நிலையில் சிந்தையற நில் என்று** அவர் உபதேசித்தருளினுர். இந்த உபதேசத்துக்கு இப்பொழுது பொருள் காண்போம். அறிவாக நின்ற நிலை என்பது ஆத்ம சொரூபம். தன்னில் தானாய் இருப்பது. **स्वात्मारामः** ஸ்வாத்மாராம: என்று இந்நிலையை சம்ஸ்கிருதத்தில் பகர்வதுண்டு. தக்ஷிணாமூர்த்தியாக எழுந்தருளியுள்ள சிவபெருமான் இந்த நிலையில் தாமே இருந்து காட்டுகிருர். அதைக் காணவுற்ற சனகன், சனந்தனன், சனாதனன், சனத்குமா

ரன் ஆகிய நான்கு சிஷ்யர்களுக்கும் அந்த மௌனுபதேசத்தின் உட்கருத்து விளங்கிவிட்டது. அவர்களும் தன்னில் தானுய் இருந்துவிட்டார்கள். அக்கோட்பாடு

**गुरोस्तु मौनं व्याख्यानं शिष्यास्तु छिन्नसंशयाः ।**

**குரோஸ்து மௌனம் வ்யாக்யானம்**
**சிஷ்யாஸ்து சின்னஸம்சயா: ।**

என்று தக்ஷிணுமூர்த்திஸ்தோத்திரத்தில் பகரப்பெற்றிருக்கிறது. கிட்டத்தட்ட இதே பாங்கில் தாயுமான சுவாமிகளின் குரு ஆகிய மௌன குருவும் அவருக்கு உபதேசித்தருளினூர். சிந்தையற நில் என்பது அந்த உபதேசத்தின் சாரம். மனதை முற்றிலும் அகற்றி விட்டால் எஞ்சியிருப்பது அந்த நிலையாகிறது. மனதோ எளிதில் அடங்குவதன்று. நாம் புரிகின்ற ஆத்ம சாதனங்கள் அனைத்தும் மனதை அடக்குதல் பொருட்டேயாம். அடங்காத மனதை உடனே நிறுத்திவிட முடியாது. அது என்ன செயலைச் செய்கிறதோ அந்த செயலிலேயே அதைச் செலுத்தி சாதகனுடைய வழிக்குத் திருப்பவேண்டும். வேலை செய்துகொண்டிருக்கும் பாங்கு அதனிடத்து இருக்குமாகில் கடவுளுக்கென்றே தொண்டுபுரியும்படி அதைப் பணிக்க வேண்டும். பாட்டுக்கள் பாடி நைந்துருகுகிற தன்மை அதனிடத்து இருக்குமாகில் கடவுள் பக்தி பண்ணி கடவுளைக் குறித்தே பாடி கடவுள் பெருமையில் நைந்துருகியிருக்கும்படி அதைப் பழக்கவேண்டும். ஓயாது எண்ணங்களை எண்ணிக்கொண்டிருக்கும் இயல்பு அதனிடத்து இருக்குமாகில் அந்த எண்ணங்களையெல்லாம் முதலில்

பாராட்டுதற்குரிய நல்ல எண்ணங்களாக மாற்றவேண்டும். எடுத்த எடுப்பில் எண்ணங்களை நிறுத்திவிட முடியாது. கணக்கற்ற எண்ணங்களைக் கடவுளுக்குரிய எண்ணங்களாக மாற்றியமைப்பது அவசியமாகிறது. அதன் பொருட்டே கடவுளின் ஒவ்வொரு சொரூபத்துக்கும் சஹஸ்ரநாமம் என்னும் ஆயிரம் திருநாமங்கள் அமைக்கப்பெற்றுள்ளன. கணக்கற்ற தூய எண்ணங்களை எண்ணிப்பழகியான பிறகு அந்த எண்ணங்களின் எண்ணிக்கையை விரைவில் குறைத்துக் கொண்டுவரவேண்டும். கடைசியில் அது தனித்த ஒரு எண்ணமாக இருக்கவேண்டும். அந்த ஒரு எண்ணத்துக்கு வந்துவிடுகின்றபொழுது அது மந்த்ரமாய் விடுகிறது. நெஞ்சத்தின் நிகழ்ச்சி அந்த ஒரு எண்ணத்திலேயேமூழ்கிவிடுமாகில் அது பக்தி பரவசமாகிறது. அத்தகைய நிலையை எட்டுகின்றபொழுது ஸ்தூலமாகச் செய்த செயல்கள் எல்லாம் நின்றுவிடுகின்றன. உள்ளத்தின் நெகிழ்ச்சியும் சித்தத்தின் சிந்தனையும் ஒன்றுபட்டுவிடுகின்றன. அதை வேறொரு பாங்கில் பகருமிடத்து பராபக்தியும் சுத்த ஞானமும் ஒன்றே என்னும் கோட்பாடு ஆகிறது. இத்தனை விருத்திகள் எல்லாம் கடவுள் சொரூபம் என்னும் ஒற்றை விருத்தியாகிறது. அதையும் அகற்றி விடுங்கால் அந்தக் கடவுளின் குணம் குறியற்ற நிலை ஆகிய பேரறிவு எஞ்சியிருக்கிறது. அப்பேரறிவின்கண் தோற்றமில்லை, வளர்ச்சியில்லை, மாறுதல் இல்லை, தேய்வு இல்லை. நிர்விகல்ப சமாதி என்னும் பெயர் அப் பெருநிலைக்கு யோகியர்களால் தரப்பட்டிருக்கிறது. ஜீவன்

இறைவனிடத்து இரண்டறக் கலத்தல் என்று அந்நிலையைப் பக்தி மார்க்கமும் ஞான மார்க்கமும் உரைக்கின்றன. மனதை ஒதுக்கிவிட்டு அந்நிலையில் இருக்கும்படி தாயுமான சுவாமிகளுக்குக் குருமூர்த்தி உபதேசித்தருளினார்.

பிராரப்த கர்மத்தின் வசப்பட்டிருக்கும் உடல் பின்பு நிழல் போன்று அந்த நிறைஞானியின் சொரூபத்தைச் சார்ந்திருக்கிறது. பிராரப்த கர்மம் முடிந்தான பிறகு அந்தச் சரீரம் ஒடுங்கிவிடுகிறது. அது இருந்ததும், ஒடுங்கியதும் ஞானிக்குத் தெரியாது. பேரறிவில் இருப்பதுதான் ஞானியின் நிலை. அதில் தம்மை ஊக்குவித்ததினால் **சும்மா இருத்தி** என்று அவர் பகர்ந்தருளுகின்றார்.

சும்மாவிருப்பதால் ஜடம் போன்று அத்தகைய நிறைஞானி ஆய்விடுகின்றானோ என்னும் கேள்வி பிறக்கலாம். அதற்கும் விடைவருகிறது. அறிவும் ஆனந்தமும் உச்சநிலையில் ஒன்றுபட்டுவிடுகின்றன. அறிவை சித்சொரூபம் என்றும் சின்மயம் என்றும் பகர்கிறோம். அதனிடத்துப் பேரின்பம் பொங்கித் ததும்பிக்கொண்டிருப்பதால் அது சின்மயானந்தம் என்று சொல்லப்படுகிறது. சித்தம் அல்லது மனதின்மூலம் வடிகட்டி வருகின்ற ஆனந்தத்துக்கு வரையறை உண்டு. அது மாறி மாறி இன்ப துன்பமாக அமைவதும் உண்டு. உயர்வு தாழ்வு முதலியன அதனிடத்து நிகழ்கின்றன. காற்றுத் திரையையும் மேகத்தையும் தாண்டி வருகிற சூரிய வெளிச்சத்துக்கு எப்படித் தோற்றமும் மறைவும்

இருக்கின்றனவோ அங்ஙனம் அந்தக்கரணத்தில் வடி கட்டி வருகிற ஆனந்தம் பலதரப்பட்டதாய் விடுகிறது. அந்தக்கரணத்தை ஒடுக்கியான பிறகு எஞ்சியிருக்கிற ஆனந்தம் ஒன்றிலும் தட்டுப்படாத ஆனந்தம். பெரு வெள்ளத்தோடு அது ஒப்பிடப்படுகிறது. எனவே நிறைஞானி ஒருவன் பேரறிவு சொரூபமாக, பேரா னந்த சொரூபமாக இருக்கிறான். அதனால் உலகுக்கு என்ன லாபம் என்னும் கேள்வி வரலாம். உலகத்தைப் பற்றிய எண்ணம் ஒன்றுமில்லாது அவன் உலகுக்குப் பேருதவி புரிகிறான். அந்த ஞானியின் சன்னிதி சாரு கின்றவர்களுக்கெல்லாம் படிப்படியாக அறிவு தெளி வடைகிறது; பிரபஞ்சத்தில் கட்டுப்படாத ஆனந்த மும் ஓங்குகிறது. நெல்லுக்கு இறைத்த நீர் வாய்க் கால் வழியோடிப் புல்லுக்கும் ஆங்கே பொசிவது போன்று நிறைஞானி ஒருவன் அடைகின்ற சின்மயா னந்தத்தில் உலகத்தவர்களுக்கும் பங்கு உண்டு. இக் கோட்பாட்டை, **மேல் சின்மயானந்த வெள்ளம் தேக்கித் திளைத்து** என்று அண்ணல் இயம்புகின்றார்.

உலகில் கணக்கற்ற உயிர்கள் இருக்கின்றன. ஓர் உயிர் முயற்சி பண்ணுவது போன்று மற்றோர் உயிர் முயலுவதில்லை. கணக்கற்ற நோக்கங்களும் அவைகளுக்கு வாழ்க்கையில் அமைந்திருக்கின்றன. இத்தனை விதமான போக்குகளிலே உயிர்கள் போகும் படி இறைவன் விட்டுவைத்திருக்கின்றாரா அல்லது இத்தனை உயிர்களுக்கும் உண்மையில் வாழ்க்கைத் திட்டம் ஒன்றுதானா என்னும் கேள்வி எழக்கூடும்.

இக்கேள்வி மிகமிகப் பழையது. எக்காலத்திலும் ஆராய்ச்சியாளர்கள் இக்கேள்வியைக் கிளப்பி வந்திருக்கின்றனர். கேள்வி ஒன்று எனினும் அது பல வடிவங்களில் தென்படுவதுண்டு. சிருஷ்டியின் நோக்கம் யாது? உலகில் துன்பம் இருப்பானேன்? உயிர்கள் ஏன் ஒன்றோடொன்று ஓயாது போராடிக்கொண்டிருக்கின்றன? இந்தப் பாங்குகளில் எல்லாம் அக்கேள்வி வடிவெடுக்கிறது. இறைவனுடைய பெருந்திட்டம் ஒன்றேயாம். அதை ஓர் அரிய வாக்கியத்தில் தாயுமானவர் எடுத்து இயம்பிவிடுகிறார். **நான் அதுவாயிருக்க நீ செய் சித்ரம் மிக நன்று காண்** என்பது அவ்வாக்கியம். இப்பொழுது இதற்கு விளக்கம் கண்டுபிடிப்போம். கடவுள் தம்மைச் சிவமாகவும் சக்தியாகவும் விளக்கிக் காட்டிக் கொண்டிருக்கிறார். பிரபஞ்ச சொரூபமாக அவர் தம்மை விளக்குகின்ற இடத்து சக்தி என்கிறோம். பிரபஞ்சத்துக்கு அப்பாற்பட்டுள்ள பேரறிவுப் பேரானந்த சொரூபமாக அவர் தம்மை விளக்குங்கால் சிவம் என்று சொல்லுகிறோம். சிவமும் சக்தியும் இரண்டு பொருள்கள் அல்ல. இரண்டும் ஒன்று என்பதை அத்வைதம் என்னும் சொல்லே விளக்கிவிடுகிறது. அர்த்தநாரீசுவரர் என்றும் இக்கோட்பாடு உருவகம் பெறுகிறது. சக்தியின் விளையாட்டில் இக்கோட்பாடு முறைபிறழாது அமைந்திருக்கிறது. அம்பிகையைக் கோல்வளையாள் என்று இயம்புகிறோம். அதாவது அவள் செலுத்துகிற செங்கோல் கோர்மையை விட்டுப் பிசகிப் போய்விடுவதில்லை.

அந்தச் செங்கோலின் செயல் அம்பிகை எடுத்துள்ள காளிகா சொரூபத்தில் வேறு ஒரு பாங்கில் விளங்கு கிறது. நான்கு கரங்கள் படைத்தவளாக அவள் தாண்டவம் புரிகிருள். தரையிலே சவம் போன்று சிவம் படுத்துக்கிடக்கிருர். சவம் போன்று தென்படு கிருர் என்ருலும் சிந்தையற்று சும்மா இருக்கிற நிலேக்கு அது எடுத்துக்காட்டாகிறது. அம்பிகையோ இரண்டு விதச் செயல்களேச் செய்து வருகிருள். அவளுடைய இடது கரங்கள் இரண்டும் அவளுடைய செயலில் உள்ள பயங்கரத்தை விளக்குகின்றன. வலதுகரங்கள் இரண்டும் அவளுடைய செயலிலுள்ள இனிமையை யும் நலத்தையும் விளக்குகின்றன. இதற்கு மேலும் விளக்கம் கொடுப்பதற்கு முன் உலக நடைமுறையி லுள்ள ஒரு விளேயாட்டைச் சான்ருக எடுத்துக்கொள் வோம். கண்ணும்பூச்சி விளேயாட்டில் ஏதேனும் ஒரு சிறுவனுடைய கண்களே நன்ருக மூடிக் கட்டிவிடுவார் கள். பிறகு வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு சிறுவர்கள் உட்கார்ந்து விடுவார்கள். அவர்களுக் கிடையில் ஏதேனும் ஒரு சிறுவன் கையில் தின்பண் டம் ஒன்று இருக்கும். கண் மூடி விடப்பட்டிருக்கிற சிறுவன் இங்குமங்கும் தேடி தின்பண்டம் வைத்திருக் கிற சிறுவனேத் தொட்டுவிட வேண்டும். தொட்ட பிறகு தின்பண்டம் அவனுக்குக் கிடைக்கிறது. கண் தெரியாத நிலேயில் அவன் தின்பண்டம் வைத்திருக் கும் சிறுவனேத் தொடுவது எங்ஙனம்? அதற்கு மற்ற எல்லாச் சிறுவர்களும் மறைமுகமாகத் துணேபுரிகின்

ளுர்கள். கண் மூடி விடப்பட்டிருக்கும் சிறுவன் இங்கு மங்கும் நடந்து செல்லுகிறபொழுது குறி ஆகிய தின் பண்டம் வைத்திருப்பவனை விட்டு எட்டிப் போகின்ற போது மற்றவர்கள் ஓலமிடுவார்கள். அதுவே அவனுக்கு வரும் போதனை. தின்பண்டம் வைத் திருக்கிற சிறுவனைத் தொட்டவுடனே விளையாட்டு பூர்த்தியாகிறது. தின்பண்டம் பெற்று அவன் இன்ப மடைகிறான். இந்த விளையாட்டை அன்னை பராசக்தி தன் குழந்தைகளாகிய உயிர்களோடு விளையாடுகிறாள். எப்பொழுதெல்லாம் உயிர்கள் நெறி தவறிப்போய் விடுகின்றனவோ அப்பொழுதெல்லாம் அவள் துன் பத்தை விளைவிக்கிறாள். நெறி தவறுதல் மிகைபடு கின்ற அளவு துன்பமும் அதிகரிக்கிறது. நெறி நிற்றல் அதிகரிக்குமளவு துன்பம் குறைகிறது. அம்பிகை தனது இடது கரங்களுள் ஒன்றில் வாளை ஏந்தியிருக் கின்றாள். மற்றொன்றில் வெட்டிய தலையைத் தூக்கிப் பிடித்துக்கொண்டிருக்கின்றாள். கோல்வளையாள் என் னும் கோட்பாடு இதில் அடங்கியிருக்கிறது. வாள் பிடித்து விரட்டி உயிர்களை அம்பிகை செப்பனிட்டு வருகின்றாள். உயிர்கள் நல்வழிக்கு வந்து விடுங்கால் அதற்கு அறிகுறியாக உலக வாழ்க்கையிலுள்ள அச் சங்கள் எல்லாம் அகன்று விடுகின்றன. நல்வாழ்வு வாழுகின்றவர்களுக்கு மண்ணுலகில் ஆனாலும் சரி, விண்ணுலகில் ஆனாலும் சரி, வேறு எவ்வுலகில் ஆனாலும் சரி எவ்விதமான பயமும் இல்லை. அதற்கு அறிகுறியாகத் தனது வலக்கரங்களில் ஒன்றை அபய

கரமாக அம்பிகை உயர்த்தி வைத்திருக்கின்றாள். நல் வழியில் செல்கின்றவர் எதற்கும் அஞ்சவேண்டிய தில்லை என்பது அதன் கோட்பாடு. வாழ்க்கையில் அனுபவ பூர்வமாக நாம் அனைவரும் அதைக் காண லாம். எதற்கும் அஞ்சாத நிலை ஒன்று மட்டுமல்ல நாம் பெறும்பேறு. அதிலும் உயர்ந்த பேறு ஒன்று உண்டு. அம்பிகையின் வலது கரங்களுள் மற்றது வரம் தந்து கொண்டிருக்கிறது. கீழே சவம் போன்றி ருக்கும் சிவத்துக்கு அது வழிகாட்டி விடுகிறது. ஜீவர் களாகிய நாம் பெறும் வரங்களுள் சிவனை அடைதலே முடிவான வரம். அதற்கு ஒப்பானது வேறு ஒன்றும் இல்லை. இங்ஙனம் பிரகிருதித்தாய் உயிர்களுக்கு நலம் கேடுகள் வாயிலாகப் பெரிய பாடங்களைப் புகட்டிப் பண்படுத்துகிறாள். துக்கத்துக்கு ஏதுவான கேடுகளி லிருந்து விலக வேண்டுமென்று காட்டியருள்கின்றாள். நலத்துக்கு ஏதுவான நல்வினைகளையே செய்யவேண்டும் என்றும் புகட்டியருளுகின்றாள். இறுதியில் சிவனாரிடம் கொண்டு சேர்த்து விடுகின்றாள். இக்கோட்பாட்டைத் தான் தாயுமானவர் நான் அதுவாயிருக்க நீ செய் சித்ரம் மிக நன்றுகாண் என்கிறார். சித்ரம் என்னும் சொல் விசித்திரம் என விரிவடைகிறது. இறைவி அல்லது இறைவனுடைய பெரும் செயல் பாராட்டுதற் குரியதாகிறது. உயிர்களைப் பண்படுத்துதல் ஒன்றே பிரபஞ்சமெங்கும் யாண்டும் நிகழ்ந்துவருகின்ற பெரிய விளையாட்டு ஆகிறது. ஜீவர்கள் சிவனாரிடத்து ஒன் றித்து விடுவதற்காகவே இச்செயல்கள் யாவும்நிகழ்ந்து வருகின்றன.

உலகிலுள்ள ஆத்ம சாதகர்கள் அனைவருக்கும் குரு ஆக இருப்பவர் கடவுள் ஒருவரே. அவர் அருள் குருவாக உள்ளத்தினுள் ஒளிர்ந்திருந்து உயிர்களைப் பக்குவப்படுத்துகிறார். புறத்தில் முற்றிலும் மனபரி பாகம் அடைந்துள்ள சான்றோர்களைக் கருவியாக வைத்துக்கொண்டு அவர்களின் மூலமாகவும் ஆத்மாக் களைச் சாதனத்தில் பக்குவப்படுத்தி வருகின்றார். அத் தகைய சிவகுரு கல் ஆலமரத்தின்கீழ் தென்முகமாக எழுந்தருளியிருக்கிறார் என்பது ஐதிகம். அவருடைய நல்லுபதேசம் சான்றோர்கள் மூல்மாக உலகுக்கு வரும் கோட்பாட்டை ஒரு உபமானத்தைக்கொண்டு ராம கிருஷ்ண பரமஹம்ஸர் விளக்குகிறார். வானத்தினின்று கீழே விழுகிற மழைநீர் கூரையின்மீது விழுந்து ஒரு பசுவினுடைய வாயினின்று வெளியேவருவதுபோன்று குழாய் வாயிலாகத் தரைக்கு வருகிறது. பசுவின் வாயி லிருந்து வருவதுபோன்று தென்படுகிற நீர் உண்மை யில் வானத்திலிருந்து வந்தது. அங்ஙனம் சான்றோர் கள் வாயிலாக வெளியாகும் நல்லுபதேசங்கள் எல் லாம் சர்வேசுவரனிடத்திருந்தே வருபவைகள் ஆகின் றன. அவர் ஒருவர்தான் சாதகர்கள் அனைவருக்கும் தந்தையாய் இருக்கின்றார். குரு ஆக வருகின்றவர் களுக்கெல்லாம் அவரே குருவாக இருப்பதால் பரம குரு என்று அவர் அழைக்கப்படுகிறார். அவரைப் போற்றுவதுதான் சாதகர்களின் இயல்பு. இக்கருத் துக்களை யெல்லாம் **எந்தை வடவாற் பரமகுரு வாழ்க** என்ற சொற்களில் தாயுமானவர் அடக்கிவைத் துள்ளார்.

சிவபெருமானிடத்திருந்தே கிளம்பி வந்துள்ள குரு பரம்பரைகளுள் நந்தி தேவரின் பரம்பரை மிக முக்கியமானது. சிவனுருடைய சான்னித்தியத்திலேயே இருக்கின்ற சிறப்பு அவருக்குண்டு. குரு பரம்பரைக்கு மரபு என்பது மற்ெருரு பெயர். உயிர்கள் எல்லாம் உய்வு அடைதற்பொருட்டே குரு பரம்பரைகள் நில வுலகில் நிலேத்திருக்கின்றன. அவைகளைப் போற்றிப் புகழ்வது சாதகர்களின் இயல்பு. நந்தீஸ்வரரின் மரபில் வந்தவர் தாயுமான சுவாமிகளின் குரு. எனவே அதைச் சிறப்பாகக் குறிப்பிட்டு **வாழ அருளிய நந்தி மரபு வாழ்க** என்று அவர் போற்றுகிருர். அடியார் கள் எல்லாரும் இங்ஙனம் குரு சிஷ்ய பரம்பரைகளை மனமுவந்து போற்றி வருகிருர்கள். அப்படி அதைப் போற்றுவதே சிறந்த ஆத்ம சாதனமாகிறது. சாதகன் ஒருவனுக்கு குருபக்தி அதிகரிக்குமளவே சாதனத்தில் அவன் மேல் நோக்கிப் போகின்ருன். குரு சிஷ்ய பரம் பரைகள் பலப்பலவாகப் பிரிதலில் குற்றமில்லை; ஒரு விதத்தில் குணமே இருக்கிறது. ஏனென்ருல் விதவித மான குரு சிஷ்ய பரம்பரை இருக்கின்ற இடத்து விதவிதமான சாதகர்களுக்கு அவைகள் துணைபுரிய முடியும். கணக்கற்ற உணவு வகைகள் இருப்பதால் எல்லாருடைய சுவைக்கும் பொருந்திய உணவு அமை வதற்கு ஒப்பானது அது. பரம்பரைகள் பல இருப் பினும் அவைகள் புகட்டும் கோட்பாடு மெய்ப்பொரு ளைப் பற்றியதாக இருக்கவேண்டும். மிக மிகப் பண்டைக்காலத்தில் அமைந்த நூல் வேதம் என்பது.

அதற்குச் சற்று பின்வந்தது ஆகமம் என்னும் நூல். ஆகமம் என்பதற்கே புதிதாக வருவிக்கப்பட்டது என்பது பொருள். மிக மிகப் பழையதாகிய வேதத்தின் துணிபும் அதற்குப்பின் வந்துள்ள ஆகமத்தின் துணிபும் ஒன்றோடொன்று முரண்படுகிற இரண்டு அல்ல, ஒன்றை ஒன்று அனுசரித்துள்ள ஒரே கோட்பாடாம். இக்கருத்துக்களை **என்று அடியர் மனமகிழ வேத ஆகமத் துணிபு இரண்டில்லை ஒன்று** என்று அவர் இயம்புகிறார். தாயுமானவருக்குக் குருவாக வாய்த்த மௌனியும் இக் கோட்பாட்டையே அவருக்கு உபதேசித்தருளினார். மேன்மை தங்கிய நூலாகிய சிவ ஞான சித்தி என்னும் நூலின் கோட்பாட்டையும் அவர் தாயுமானவருக்கு உபதேசித்தருளினார். இக்கருத்துக்களை யெல்லாம் தொகுத்து அவர் மேற் கூறிய பாடலில் பகர்ந்திருக்கிறார்.

---

## மௌனகுரு வணக்கம் - 3

ஆதிக்க நல்கினவ ராரிந்த மாயைக்கென்
அறிவின்றி யிடமில்லையோ
அந்தரப் புட்பமுங் கானலின் நீருமோர்
அவசரத் துபயோகமோ
போதித்த நிலையையும் மயக்குதே அபயம்நான்
புக்கஅருள் தோற்றிடாமல்
பொய்யான வுலகத்தை மெய்யா நிறுத்தியென்
புந்திக்குள் இந்த்ரசாலஞ்
சாதிக்கு தேயிதனை வெல்லவும் உபாயம்நீ
தந்தருள்வ தென்றுபுகல்வாய்
சண்மத ஸ்தாபனமும் வேதாந்த சித்தாந்த
சமரசநிர் வாகநிலையும்
மாதிக்கொ டண்டப் பரப்பெலாம் அறியவே
வந்தருளு ஞானகுருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

*மெய்ப்பொருள் ஆராய்ச்சியில் மாயை என்னும் சொல்முக்கியமான இடம்பெற்று வருகிறது. இச்சொல் எதைக் குறிக்கிறது என்பதை உள்ளபடி அறிந்து கொள்வது அவசியமாகிறது. இதற்கு விளக்கங்கள் பல இருக்கின்றன. அத்தனைவிதமான விளக்கங்களும் இதற்கு அவசியமாகின்றன. குறிப்பிட்ட ஒரு விளக்கத்தை ஈண்டு இதற்குக் கொடுப்போம். இப்பிரபஞ்ச வாழ்க்கைக்கு மாயை என்று பெயர். பிரபஞ்ச வாழ்க்*

கையை உள்ளபடி அறிந்துகொள்ள சான்றோர்களுக்கே முற்றிலும் இயலுவதில்லை. பின்பு மற்றவர்கள் அதை அறிந்துகொள்ளாமையில் வியப்பு யாது உளது? "இறைவா, உமது மாயைக்கு விளக்கம்தந்து அருள்வீர்களா" என்று நாரதமஹரிஷி ஒரு தடவை கிருஷ்ணபகவானிடம் கேட்டார். அதற்கு விளக்கம் கொடுப்பதாகவும் அவர் இசைந்துகொண்டார். பிறகு காலம் கொஞ்சம் கழிந்து போயிற்று. மற்றும் ஒரு முறை நாரதமஹரிஷி கிருஷ்ணபகவானை வந்து சந்தித்தார். இருவரும் ஒரு வழியே நடந்து போய்க் கொண்டிருந்தனர். போகின்ற போக்கில் என்னென்னவோ விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தனர். நெடுந்தூரம் சென்றுவிட்டனர். தமக்குத் தாகம் மிக உண்டாய்விட்டதென்று கிருஷ்ணபகவான் நாரதரிடம் தெரிவித்தார். சற்று அமர்ந்திருங்கள், பருகுதற்கு நன்னீர் கொண்டு வருகிறேனென்று சொல்லிவிட்டு நாரதர் விரைந்து சென்றார். சிறிது தூரத்தில் குக்கிராமம் ஒன்று தென்பட்டது. ஆங்குச் சென்றார். ஒரு குடிசையின் எதிரே நின்றார். வீட்டுக்குள் யாரம்மா என்று அழைத்தார். இளம் நங்கை ஒருத்தி புன்னகை பூத்தவளாக வெளியே வந்து நின்றாள். அவளைப் பார்த்ததும் பருகுதற்கான நீரைக் கேட்க நாரதர் மறந்துவிட்டார். அவள்மீது காதல் கொண்டார். இதற்குள் அந்தக் கன்னிகையின் தந்தையும் ஆங்குவந்து சேர்ந்தான். இருவர் கருத்தையும் குறிப்பால் அறிந்த அம்மனிதன் அவர்களுக்கு மணம்

முடித்துவைத்துவிட்டுப் போய்விட்டான். நாரதருக்குக் குடும்பவாழ்க்கை துவங்கிற்று. ஆண்டுகள் சில சென்றன. மூன்று புதல்வர்களை அக் குடும்பத்தார் பெற்றெடுத்துவிட்டனர். பிறகு அண்மையில் ஓடிக் கொண்டிருந்த ஆறு பெருக்கெடுத்தது. அது கரையில் அடங்காத பிரவாகம் ஆயிற்று. வீடுகளை யெல்லாம் இடித்துத் தள்ளிக்கொண்டு அது எங்கும் பரவியது. நாரதரும் அவர் குடும்பமும் தப்பிப் பிழைக்க வெளியே கிளம்பினர். நடந்து செல்லச் செல்ல நீர்ப்பெருக்கு அதிகரித்தது. தோளின்மீது உட்கார்ந்து கொண்டிருந்த குழந்தை நழுவித் தண்ணீருக்குள் விழுந்து மறைந்துபோயிற்று. அவர் கையைப் பிடித்துக் கொண்டு வந்த குழந்தை அடுத்தபடியாக ஆற்றுக்கு இரையாயிற்று. இன்னும் சிறிது நேரத்திற்குள் இடுப்பில் தாங்கிக்கொண்டிருந்த குழந்தையுடன் மனைவியையும் நீர்ப்பெருக்கானது அபகரித்துக்கொண்டு போய்விட்டது.எப்பக்கம் காலைத் திருப்பிவைத்தாலும் தரை காலுக்கு எட்டவில்லை. அந்த நெருக்கடியில் நின்றுகொண்டு நாரதர் தமது பரிதாபகரமான நிலையைக் குறித்துத் தேம்பித் தேம்பி அழுதுகொண்டிருந்தார். அச்சமயம் அவர் தோளின்மீது யாரோ கைவைத்துக்கூவிஅழைப்பதுபோன்றுஉணர்ந்தார்.திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார். "பருகுதற்கு நீர் எங்கே" என்று கிருஷ்ணபகவான் அவரைக் கேட்டார். அவர் வியப்படைந்து வெட்கத்துடன் நின்றார். இவை யாவும் நிகழ்ந்தது ஐந்து நிமிஷத்திற்குள்ளாக. ஆனால் அக்

குறுகிய நேரத்திலே நாரதர் குடும்ப வாழ்க்கை ஒன்றைப் பன்னீராண்டு வாழ்ந்து விம்மி அழுதவர் ஆய் விட்டார்! இதுதான் மாயை என்றார் கிருஷ்ண பகவான். "பிரபோ, இனி உங்களுடைய மாயை என்னை வந்து பற்றிக்கொள்ளாதிருக்கும்படி அருள் புரிவீராக" என்று நாரதர் விண்ணப்பித்தார். நம் அனைவருடைய வாழ்க்கையும் மாயையின் விதவித மான காரியங்கள் ஆகின்றன. இதை நாம் அறிந்து கொள்ளாது இந்த மாயைக்கு வசப்பட்டவர்களாகவே இருந்துவருகிறோம். இக்கருத்தை **இந்த மாயைக்கு என்னறிவன்றி இடமில்லையோ** என்று தாயுமானவர் கேட்கின்றார்.

மாயை எத்தகையது என்று வினவுமிடத்து அதற்கு ஆதிக்கம் மிக உண்டு. ஞானிகளும் அதன் வசப்பட்டிருக்கின்றபொழுது படாதபாடுபடுகின்றனர். துன்பத்திற்கு ஆளாகின்றனர். அதைக் குறித்துத் தாயுமானவர் கேள்வி ஒன்று கேட்கின்றார். இந்த மாயைக்கு **ஆதிக்கம் நல்கினவர் யார்** என்பது அக் கேள்வி. நல்குதல் என்னும் சொல் கொடுத்தல் எனப் பொருள்படுகிறது.

பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வொன்றுக்கும் இருப்பிடம் ஒன்று வேண்டும். பிரபஞ்சத்துக்கே இருப்பிடம் தேவையாயிருக்கின்றது. பரம்பொருளின்மீது பிரபஞ்சம் இடம் பெற்றிருக்கின்றது. அங்ஙனம் மாயையானது மக்களுடைய மனதில் அல்லது அறிவில் இடம் பெற்றிருக்கின்றது. ஆங்கு அது உறுதியாகக் குடி

யிருந்துகொண்டு வாழ்க்கையை விதவிதமான பாங்கு உடையதாக மாற்றியமைத்து வருகிறது. எண்ணிக்கையில் அடங்காத பிறவிகள், எண்ணிக்கையில் அடங்காத மரணங்கள். அத்தனைவித ஜனன மரணங்களுக்கிடையில் அளப்பரிய இன்ப துன்பங்கள். நாரதரே பெருந்துன்பத்துக்கு ஆளானார். ஏன் அவர் அப்படி ஆளானார் என்று கேட்டால் மாயைக்கு அவர் தமது அறிவில் இடங்கொடுத்துவிட்டார். அதனால் அவர்க்கு வில்லங்கம் வந்தது. நாம் அனைவரும் நமது அறிவிலே மாயைக்கு இடம் கொடுத்திருக்கிறோம். அது ஆட்சி புரிகிறது. அதன் ஆதிக்கத்தின் கீழ் இருக்கின்ற பொழுது வேறு கதி ஒன்றும் இல்லாது நாம் இன்ப துன்பங்களுக்கு ஆளாகின்றோம். ஒரு நொடிப்பொழுதில் அந்த மாயையினின்று நாரதர் விழித்துக் கொண்டார். பிறகு அது போன இடம் தெரியவில்லை. ஆனால் அதன் வசப்பட்டிருக்கும் பரியந்தம் அதன் விளைவையும் நாம் அனுபவித்தே ஆகவேண்டும். தமது அறிவை விட்டு அது அகன்று போய்விடமாட்டாதா என்று தாயுமானவர் வருந்திக்கேட்கின்றார்.

வெட்ட வெளியில் மலர்கள் தோன்றுவதுண்டு. அதற்குக் காரணங்கள் இரண்டு இருக்கின்றன. வானத்தில் அலைகின்ற மேகம் போன்ற காற்றின் வேறுபாடு ஒன்று. அதன்மீது சூரிய கிரணம் படியும் பொழுது தாமரைப் பூ வானிலே தோன்றுகிறது. அது தோன்றுதற்கு மற்றொரு காரணம் அதைக் காண்பவனுடைய மனநிலை. நக்ஷத்திரங்கள் இல்லாத இடத்தில் அவை

கள் இருப்பதுபோன்றும், பூக்கள் இல்லாத வெறும் வெளியில் அவைகள் இருப்பது போன்றும் காட்சிகள் கிடைக்கின்றன. அப்படித் தென்படுகின்ற புஷ்பங்கள் மாலை தொடுப்பதற்கு உதவமாட்டா. கடவுள் வழி பாட்டுக்கும் அவைகள் பயன்படமாட்டா. பூக்களைக் கொண்டு மருந்து வகைகள் ஆயத்தப்படுத்துவது முண்டு. அதற்காகவாவது அவைகள் உதவுமா என் றால் அதுவுமில்லை. இனி, கானல் நீர் என்பது ஒன் றுண்டு. பரந்த மணல் பிரதேசத்தில் சூரிய வெளிச்சம் படும்பொழுது கொஞ்ச தூரத்துக்கப்பால் தடாகமும் அதனருகில் மரங்களும் தென்படும். பாலைவனத்தில் நடக்கின்றவர்கள் ஆங்குச் சென்று நீர் அருந்தலாம் என்ற ஆசையுடன் போய்க்கொண்டே இருப்பார்கள். ஆனால் அவர்களுக்கு ஒருநாளும் நீர் அகப்படுவதில்லை. கானல் நீரைக் காண்கின்ற மான் தாக சாந்தியின் பொருட்டு நெடுந்தூரம் ஓடி அதை அடையப்பெறாமை யினால் மாண்டுபோய் விடுவதுண்டு என்கின்றனர். கானல் நீர்க்கொப்பான காட்சி ஒன்றை இக்காலத்தில் தார் அமைந்துள்ள பாதையில் நாம் காணலாம். வெயில் நேரத்தில் பாதையில் போகும்பொழுது சிறிது தூரத்துக்கப்பால் அதில் நீர் நின்றுகொண்டிருப்ப தைக் காணலாம். பக்கத்தில் நிற்கும் கம்பங்களின் பிம்பங்களும் அந்த நீரில் தென்படும். ஆனால் நாம் அருகில் செல்லச் செல்ல அந்த நீரின் தோற்றமும் பின் வாங்கிக்கொண்டே போகும். நீரில்லாத இடத்தில் நீர் இருப்பது போன்று தென்படுவது கானல் நீர்

என்று அழைக்கப்படுகிறது. அது தாகத்தைப் போக்கு வதற்கும் உதவாது. நிலத்தில் பாய்ச்சிச் சாகுபடி செய்வதற்கும் உதவாது. இருப்பது போன்று தோன்று கிறதேயொழிய அதில் பயனொன்றுமில்லை. இக் கருத்தை, **அந்தரப் புட்பமும் கானலின் நீரும் ஓர் அவ சரத்து உபயோகமோ** என்று தாயுமானவர் கேட் கின்றார்.

மக்களாகிய நாம் கண்டுவரும் மாயையின் காட் சியும் எந்தவிதமான அவசரத்துக்கும் உபயோகமாவ தில்லை. அது எப்படி என்று ஆராய்ந்து பார்ப்போம். நாம் ஒவ்வொருவரும் நமக்கேற்ற உற்றார் உறவினரை மாயையின் துணைகொண்டு நமக்கு நாமே அமைத்துக் கொள்கிறோம். நமக்கு வராத துன்பம் வந்துவிடுகின்ற பொழுது இந்த உற்றார் உறவினர் நமது துன்பங்களில் ஒரு சிறிதளவையாவது எடுத்துக் கொள்வார்களா என்பது கேள்வி. நாம் மாண்டுபோய் விடும்பொழுது நமது உற்றார் உறவினர் நம்முடன் வந்துவிடுகின்றார் களா என்பதும் கேள்வி. மற்று, இம்மண்ணுலகி லேயே வாழ்ந்திருக்கின்றபொழுது அறிவுத் துறையில் நாம் ஏதேனும் முன்னேற்றம் அடைந்து மகிழ்வுறுங் கால் நமது உற்றார் அதில் கலந்துகொள்ள முடியுமா? நம்மில் யாரோ சிலர் பாரமார்த்திகப் பெருவாழ்வில் தீவிரமாகச் செல்லுகிறோம். உற்றார் உறவினர் அதற் குத் துணைபுரியும் பாங்கில் இருக்கின்றார்களா? அவர் கள் அதற்குப் பெருந்தடையாகவே இருப்பதைக் காணலாம். இவ்வுண்மைகளை ஆராயுங்கால் எந்த

மாயையின் வசப்பட்டவர்களாக நாம் இருக்கின்றேமோ அந்த மாயை நாம் மேல்நிலைக்குப் போவதற்குச் சிறிதேனும் உதவாது.

கானல் நீர் ஒன்றை இன்று நாம் காண்கின்றேம். அதைத் துருவி ஆராய்ந்தான பிறகு அது உண்மையல்ல என்கின்ற உறுதி நமக்கு வருகின்றது. ஆனுல் அந்தக் கானல் நீரின் காட்சி நாளைக்கு நமக்கு வந்தமைகிறது. சிறிது நேரத்திற்கு அது உண்மை என்கின்ற மயக்கத்தையும் அது செய்துவைத்து விடுகிறது. மெய்ப்பொருள் ஆராய்ச்சி பண்ணுகின்றவர்களுக்கு மாயாகாரியங்களனைத்தும் பொய்யென்று யுக்தியைக் கொண்டு நிரூபிக்கப்படுகிறது. விசாரித்துப் பார்க்குங்கால் இவ்வுலகிலே நமக்கு நாம்உண்டுபண்ணிக் கொண்டிருக்கின்ற பந்த பாசங்களெல்லாம் நிலையற்றவைகள் என்பது விளங்கும். நிலையற்றவைகளிடத்துப் பற்றுதல் வைக்கலாகாதென்பதும் விளங்குகிறது. உடல் நிலையற்றவைகளில் ஒன்று. உடலின் மூலம் பெறுகின்ற இன்பங்களும் நிலையற்றவைகளேயாம். அவைகளை ஒழித்துவிடுகின்றவளவு ஒருவன் ஆத்மசாதனத்தில் மேல்நோக்கிப் போகின்முன். ஆயினும் பெரும்பாலோரது வாழ்க்கை எத்தகையது? உடல் நிலையற்றதென்று எவ்வளவுதான் போதித்த போதிலும் அதை நிலைபேறுடையதாகவே எண்ணி அதன் மூலம் பெறுகின்ற இன்பத்தை நாடிச் செல்கின்றனர். இக்கருத்தை **போதித்த நிலையையும் மயக்குதே** என்று அண்ணல் இயம்புகின்முர். இதைவிரித்து விளக்குங்

கால் இறைவா, நீ எனக்கு போதித்த நித்திய அநித்திய வஸ்து விவேகத்தைப் பற்றிய நிலையையும் இந்த மாயையானது மயக்குதே எனப் பொருள்படுகிறது.

மரம், செடிகொடிகள் அடர்ந்த காடு ஒன்று இருந்தது. அதில் அண்ணனும் தங்கையும் விளையாடிக்கொண்டிருந்தார்கள். பயப்படும் தன்மையுடையவள் தங்கை. ஆனால் அண்ணன் அருகில் இருந்தமையால் அவளுக்கு அபயம் கிட்டிற்று. மூத்தவனுடைய ஆதரவு இருக்கின்றபொழுது அவள் எதற்கும் அஞ்சவேண்டியதில்லை. அப்படி அவன் தருகிற ஆதரவை ஒருவிதத்தில் அவன் வழங்கும் அருள் என்று இயம்பலாம். விளையாடிக்கொண்டிருந்த பொழுது சிறிது நேரத்துக்குத் தமையன் தென்படவில்லை. அப்பொழுது புதருக்குள்ளிருந்து கரடி ஒன்று தென்பட்டு வெளியே வந்தது. அண்ணனைக் காணவில்லையே யென்று அவள் கதறியழுதாள். அவளுடைய பரிதாபகர நிலையைக் கண்டதும் மேலே போர்த்திருந்த கரடித் தோலைக் கழற்றிவிட்டு அண்ணன் தென்பட்டான். ஆ! இப்படிப் பயமுறுத்தியது அண்ணன்தானா என்று அவள் திரும்பவும் அபய நிலையைப் பெற்றாள். இப்பிரபஞ்சத்தின் காட்சி அஞ்ஞான நிலையிலிருக்கும் நமக்குப் பயத்தை யூட்டுகிறது. ஈசன் தான் இத்தனை வடிவங்களில் விளையாடுகிறான் என்பதை அவனுடைய அருள் நோக்கம் கிட்டுகின்ற பொழுது நாம் அறிந்துகொள்கிறோம். ஆனால் மாயையின் வசத்தில் நாம் முற்றும் அகப்பட்டுக்கொண்டிருக்

கின்றபொழுது அந்த அருளின் தோற்றம் நமக்குச் சிறிதேனும் விளங்குவதில்லை. இக்கருத்தை **அபய நான் புக்க அருள் தோற்றிடாமல்** என்று அண்ணல் இயம்புகின்றார்.

சிறுமிக்குக் கரடியாகத் தென்பட்ட காட்சி எவ்வளவு நேரம் நிலைத்திருந்தாலும் அது உண்மையில் கரடியல்ல. ஆனால் அதைக் கரடியாக எண்ணிய எண்ணம் சிறுமியினுடைய உள்ளத்தில் உதித்ததேயாகும். அவள் மனதுக்குள் கரடியைப்பற்றிய எண்ணம் குடிகொண்டிருக்கும் வரையில் அவள் பெரும் வேதனைக்கு உட்பட்டேயாக வேண்டும். உலகம் வேறு தெய்வம் வேறு அல்ல. அப்படி இரண்டு பொருள்களில்லை. உள்ளது ஒரே பொருள். நாம் மாயையின் வசப்பட்டிருக்கின்ற பொழுது அப்பொருள் உலகமாகக் காட்சி கொடுக்கிறது. அத்தகைய காட்சி நம் அனுபவத்திலிருக்கின்றபொழுது அதை மெய்க்காட்சியெனவே பொருள்படுத்துகிறோம். அதை அங்ஙனம் பொருள்படுத்தும் தன்மை நமது உள்ளத்திலிருக்கிறது. இந்த்ர ஜாலம் என்பது ஒருவகை வித்தை. இல்லாத பொருள்களை இருப்பவைகள் போன்று காட்டக்கூடியது அந்த ஜாலவித்தை. இல்லாத கரடியை இருக்கிறதாக சிறுமி எண்ணிக்கொண்டாள். ஆதலால் அவள் விதவிதமான துன்பத்துக்காளானாள். உண்மையிலிருப்பது மெய்ப்பொருளாகிய கடவுள். மாயையின் ஆதிக்கத்தால் கடவுள் உலகமாகத் தென்படுகிறார். எவ்வளவு காலம் உலகமாகத் தென்பட்டுக்

கொண்டிருந்தாலும் அது பொய்யான காட்சியே யாகும். பொய்க்காட்சியைப் பல ஜன்மாந்தரங்களில் மெய்க் காட்சியாக நாம் பொருள்படுத்தி இன்பதுன் பங்களுக்கு ஆளாய்வருகிறோம். மாயையின் வல்லமை நிலைபெற்றிருக்கும் வரையில் மெய்ப்பொருளை நாம் திரிவுபட்டுக் காண்பதும் அதன் விளைவாக வரும் இன்பதுன்பங்களுக்கு உட்பட்டிருப்பதும் விலக்க முடியாத காரியங்களாம். இத்தகைய விபரீதங்களை மாயை செய்துவைத்து விடுகிறது. இக்கருத்துக்களை, **பொய்யான உலகத்தை மெய்யா நிறுத்தி யென் புந்திக்குள் இந்த்ரசாலஞ் சாதிக்குதே** என்று தாயுமானவர் சொல்லு கின்றார்.

பெரியவர் ஒருவர் இளைஞன் ஒருவனுக்கு அருந்து தற்குக் குளிகை ஒன்று தந்தார். வீட்டிற்குப் போய் அதை அருந்தவே அவன் மாண்டுபோய் விட்டான். தாய் தந்தையர் கதறிப் பதறிக் கொண்டிருந்தனர். பெரியவர் அங்கு வந்துசேர்ந்தார். பிணத்தை பரீக்ஷை செய்தார். அவன் சாகவில்லை, அவனுக்கு உயிர்தர முடியுமென்று உறுதி கூறினார். ஆனால் அவன் பொருட்டு வேறு யாராவது தனது உயிரைக்கொடுக்க ஆயத்தமா என்று கேட்டார். தாய் தந்தையர் அதற்கு இணங்கவில்லை. எனினும் பெரியவர் செத்த வன் போன்று கிடந்த இளையவன் மூக்கில் ஏதோ பொடியைப் போட்டு ஊதினார். உடனே அவன் விழித்துக்கொண்டான். செத்தவன் போன்று கிடந்த வன் தாய் தந்தையர் தனக்கு உயிர் கொடுக்க மறுத்

தைப் பார்த்துக்கொண்டிருந்தான். உலகத்தவர் ஒரு வருக்காக ஒருவர் வாழ்வதில்லை என்பதையும் அறிந்து கொண்டான். இதுதான் மாயை.

ஒரு மனிதன் படுத்து உறங்குகிறான். அப்பொழுது என்னென்னவோ கனவுகள் அவனுக்குத் தோன்றி விடுகின்றன. விதவிதமான சுகங்களை அனுபவிப்பது போன்ற கனவுகள் உண்டு. பயங்கரமான துன்பங்களை அனுபவிப்பது போன்ற கனவுகளும் உண்டு. கனவு கண்டுகொண்டிருக்கும் பரியந்தம் அதில் வருகிற சுக துக்கங்களைத் தவிர்க்க யாருக்கும் இயலாது. கனவில் ஒருவன் துன்பத்தில் தவித்துக் கொண்டிருக்கின்றான் என்று வைத்துக்கொள்வோம். அத்துன்பத்தினின்று அவனை விடுவிப்பதற்கு உபாயம் ஒன்றே உளது. தட்டி யெழுப்பி அவனுடைய தூக்கத்தைக் கலைத்துவிட வேண்டும். விழித்துக் கொண்டவுடன் கனவு மாயை யென மறைந்து போய்விடுகிறது. அதன் பிறகுதான் துக்கப்பட்டதைக் குறித்து அம்மனிதன் வருந்துவ தில்லை. அதையெல்லாம் வெறும் கனவு என்று அவன் களைந்து விடுகின்றான். சுகத்தை அனுபவிப்பதும் அதே பாங்கில் வெறும் கனவேயாம். நல்ல விவேகி ஒருவன் சுகத்தை நிலையற்றதென்று களைவதும் அவனுக்கு எளி தாய் விடுகின்றது. கனவினின்று விழிப்படைவ தொன்றே நிலையற்ற சுகதுக்கத்தை அகற்றுதற்கு உபாயமாகின்றது. நாம் விழித்திருந்து இவ்வையக வாழ்வை நடாத்துவதும் ஒருவிதக் கனவேயாம். ஆத்ம போதம் என்னும் விழிப்பு நமக்கு வந்துவிடுங்கால்

மாயையின் விளையாட்டு ஆகிய இவ்வையக வாழ்வு நமக்கு முற்றுப்பெற்று விடுகிறது. ஆனால் இதற்குள் அகப்பட்டுக்கொண்டிருக்கின்ற பொழுது இதினின்று விடுதலையடைய நாம் முயற்சி யெடுத்துக்கொள்ள வேண்டும். அதற்கு இறைவனுடைய அருளையும் உற்ற உபாயமாக நாம் நாடியாகவேண்டும். இக்கருத்துக்களை யெல்லாம், **இதனை வெல்லவும் உபாயம் நீ தந்தருள்வது என்று புகல்வாய்** என்று அவர் வினவுகின்றார். உன்னுடைய அருளை நான் எப்பொழுது பெற்று இந்த மயக்கத்தினின்று விடுதலை பெறுவேன், அதை எனக்குப் பகர்ந்தருள வேண்டுமென்பது இதன் கருத்து.

வேதத்துக்கு உடன்பாடான மதங்கள் ஆறு இருக்கின்றன. அவைகளுக்கு முறையே சைவம், வைஷ்ணவம், சாக்தம், காணபத்யம், கௌமாரம், சௌரம் என்று பெயர்கள் அமைந்திருக்கின்றன. இந்த ஆறு மதங்களுள் ஆத்ம சாதகன் ஒருவன் எந்த மதத்தை உறுதியாக அனுஷ்டித்தாலும் அதன் மூலம் அவன் ஆத்மபரிபாகம் அடைவதும், இறைவனுடைய அருளுக்குப் பாத்திரமாவதும் சாத்தியம். இந்த உண்மையை அறிந்திருக்கிற ஆத்ம சாதகன் மதபேதம் கொள்வதில்லை. ஒன்று உயர்ந்தது, மற்றது தாழ்ந்தது என்று வாதாடுவதில்லை. மெய்ப்பொருளைக் கண்டறிந்துள்ள சான்றோர்களுக்கு இந்த ஆறுவித மதங்களும் உடன்பாடாகின்றன. அவைகளை நன்னெறிகளென்று நிலைநாட்டுவதே அவர்கள் வாழ்க்கையில் செய்யும் அரும்பெரும் செயலாகும். இக்கருத்தை, **ஷண்மத**

**ஸ்தாபனமும்** என்று அவர் பகர்கின்றார். ஷண்மதம் என்பதற்கு ஆறு மதங்கள் என்று பொருள்.

ஆறு மதங்களுக்கும் பொதுவாயுள்ள கோட்பாடு களின் தொகைக்கு வேதாந்தம் என்று பெயர். வேதத் தின் அந்தம் அல்லது மறைமுடி என அது பொருள் படுகிறது. எல்லா மதங்களுக்கும் பொதுவாயுள்ள கோட்பாடுகளுக்கே வேதாந்தம் என்னும் பெயர் வந் துள்ளது. இந்த வேதாந்தத்துக்கு நிகராகத் தமிழ் நாட்டில் சைவ சித்தாந்தம் என்னும் கோட்பாடு வந்துள்ளது. முடிவு செய்யப்பட்டது அல்லது தேர்ந் தெடுக்கப்பட்டது என சித்தாந்தம் என்கிற பதம் பொருள்படுகிறது. உண்மையில் ஆறு மதங்களும் ஆறு சித்தாந்தங்கள் ஆகின்றன. இங்கு சைவமே சித்தாந்தம் எனச் சிறப்பித்துச் சொல்லப்பட்டிருக் கிறது. நல்ல ஆத்மசாதகன் ஒருவன் வேதாந்தக் கோட்பாடுகளை முறையாக அனுஷ்டித்தாலும் சரி அல்லது சைவ சித்த்ராந்தக் கோட்பாடுகளை முறையாக அனுஷ்டித்தாலும் சரி அதன் மூலம் ஆத்ம பரிபாகம் அடைகிறான். இவ்விரண்டு மார்க்கங்களும் ஒன்றோ டொன்று முரண்படுபவைகளல்ல என்று நிரூபித்துக் காட்டுகின்ற செயலுக்கு சமரச நிர்வாக நிலை என்னும் பெயர் வந்துள்ளது. இரண்டையும் ஒன்றுபடுத்தி நிர் வகிக்கத் தக்க நிலையானது மெய்ஞானி ஒருவனிடத் துள்ளது. இக்கருத்தை, **வேதாந்த சித்தாந்த சமரச நிர் வாக நிலையும்** என்று அவர் இயம்புகின்றார்.

*சூரியன் உதயமாகி வருகின்றபொழுது அது ஒரு வருக்கும் தெரியாது இரகசியமாக நிகழ்கின்ற நிகழ்ச்சி யல்ல. எல்லாத் திக்குகளிலும் அது தென்படுகிறது. அண்டத்தின் எப்பகுதியிலிருந்து பார்த்தாலும் அது புலனுகிறது. சூரியன் தோன்றுதற்கு ஒத்த நிலையி லிருக்கிருர் ஞான குரு ஒருவர். அவரடைந்துள்ள பரி பாகத்தை எவ்விதத்திலும் மறைத்துவைக்கமுடியாது. உதயமாயுள்ள சூரியனைக் குருடன் காண்பதில்லை. ஆனுல் ஏதேனும் ஒருவிதத்தில் சூரியனுடைய தோற் றத்தை அவன் உணர்ச்சியில் அறிந்து கொள்கிருன். ஞான குருவின் பெருமையை அஞ்ஞானக் குருடன் ஒரு வன் அறிந்து கொள்வதில்லை. ஆனுல் அவர் மக்களைப் பண்படுத்துகிற பாங்கினின்று அவர் பெரியவராக இருக்கவேண்டுமென்று யூகித்து அறிந்துகொள்கிருன். எனவே ஞான குருவின் பெருமை தன்னைத்தானே விளக்கிக்கொண்டிருக்கிறது. அவர் செய்கின்றசெயற் கரிய செயலே அதற்குக் காரணமாகிறது. இக்கோட் பாட்டை,* **மா திக்கொடு அண்டப்பரப்பெலாம் அறியவே வந்தருளு ஞான குருவே** *என்று அவர் இயம்புகின்ருர். மா திக்கொடு என்பது பெரிய எட்டுத் திசைகளோடு கூடிய எனப் பொருள்படுகிறது. அண்டப் பரப் பெலாம் அறியவே என்பதை நாம் வசித்துவரும் மண் ணுலகெங்கும் கீர்த்திபெற என்று பொருள் படுத்த வேண்டும். இக்கருத்துக்கள் யாவையும் தாயுமானவர் மேற்கண்ட பாடலில் வைத்துப் பாடியிருக்கிருர்.*

---

## மௌனகுரு வணக்கம் - 4

மின்னனைய பொய்யுடலை நிலையென்றும் மையிலகு
விழிகொண்டு மையல்பூட்டும்
மின்னார்க ளின்பமே மெய்யென்றும் வளர்மாட
மேல்வீடு சொர்க்கமென்றும்
பொன்னையழி யாதுவளர் பொருளென்று போற்றிஇப்
பொய்வேட மிகுதிகாட்டிப்
பொறையறிவு துறவீ தல்ஆதிநற் குணமெலாம்
போக்கிலே போகவிட்டுத்
தன்னிகரி லோபாதி பாழ்ம்பேய் பிடித்திடத்
தரணிமிசை லோகாயதன்
சமயநடை சாராமல் வேதாந்த சித்தாந்த
சமரச சிவாநுபூதி
மன்னவொரு சொற்கொண் டெனைத்தடுத் தாண்
வாழ்வித்த ஞானகுருவே [டன்பின்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

'எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு' என்பது வேதவாக்கு. பொருள் ஒன்றை உள்ளபடி அறியும் பாங்கு உலகத்தவரிடத்து இல்லை. மக்கள் எல்லாரும் ஒன்றுகூடிச் செய்கின்ற முடிவை ஈசனுடைய வாக்கு என்று ஏற்றுக்கொள்ளவேண்டும் என்ற கோட்பாடு மக்களுக்கிடையில் இலங்கிவருகிறது. ஆனால் அக் கொள்கை பொருளற்றது. மக்கள் எல்லாருமே நிலை

யற்ற உடல் வாழ்க்கையை நிலைபேறு உடையதென்று கருதிவருகின்றனர். இக்கொள்கை பெரும்பாலோர்க் குரியதென்று சொன்னால் போதாது. மக்கள் எல்லார்க் குமே இது பொதுவாயிருந்து வருகிறது. ஆயினும் யுக்தி யைக்கொண்டு விசாரித்துப் பார்க்குமிடத்து இந்த நம்பிக்கைக்குச் சிறிதேனும் ஆதரவு இல்லையென்பது வெளியாகும். காலத்தின் இயல்பையே முதலில் சிறிது ஆராய்ந்து பார்ப்போம். ஒரு பாங்கில் பார்க்குமிடத்து காலத்துக்கு ஆதியுமில்லை, அந்தமுமில்லை. அது யாண் டும் நிலைத்திருக்கிறது. மற்றொரு பாங்கில் பார்க்கு மிடத்து காலம் என்பது ஒன்று இல்லவே இல்லை. காலத்தை அளவையாக வைத்துக்கொண்டு நமது வாழ்க்கையை நாம் பொருள்படுத்துகிறோம். இத்தனை ஆண்டுகள்வாழ்ந்தாய்விட்டது. இன்னின்ன அனுபவங் களையெல்லாம் பெற்றிருக்கிறோம் என்றமுடிவுக்குவருகி றோம். நாம் மண்ணுலகில் வாழ்ந்திருந்த ஐம்பது அல்லது அறுபது ஆண்டுகளை முறையாக விமர்சனம் செய்து பார்த்தால் நொடிப்பொழுது போன்று அந்த நெடுங் காலம் மறைந்துபோய்விட்டது. அண்டங்கள் பல தோன்றியிருந்ததும், நிலைபெற்றிருந்ததும், ஒடுங்கிப் போனதும் நொடிப்பொழுதுக்கு ஒப்பானது ஆய்விட் டது. அளப்பரிய நெடுங்காலம் என்பதும் அல்பமான நொடிப்பொழுது என்பதும் இறந்தகாலமாகக் கருதப் படும்பொழுது பொருளற்றவைகளாய் மறைந்துபோன வைகளாம். உண்மையில் கல்பகாலமும் கணப்பொழு தும் ஒன்றேயாம். வெறும் நம்முடைய அனுபவத்தை

ஆதாரமாக வைத்துக்கொண்டு காலத்தை மதிப்புப் போடுகிறோம். நமது உடல்வாழ்க்கையையும் அளவையாக வைத்துக்கொண்டு வாழ்வு என்னும் நிகழ்ச்சியை மதிப்புப் போடுகிறோம். இந்த உடல்தான் எத்தகையது! நூறு வருஷங்களுக்கு முன்பு இவ்வுடல் தோற்றத்திலிருந்ததா? இன்னும் நூறு வருஷங்களுக்குப் பின்பு இவ்வுடல் தோற்றத்திலிருக்குமா? இப்பொழுது இருப்பதாகக் காட்சிகொடுத்துக் கொண்டிருக்கும் இவ்வுடல் முன்பு இருந்ததில்லை. பின்பு இருக்கப் போவதில்லை. இடையில் இருப்பதுபோன்று தென்படுகிறது. கல்பகாலமே கணப்பொழுதாக மறைந்து பட்டுப் போகக்கூடிய மாயமான தோற்றத்தில் இந்த உடலுக்கு நிலைபேறு யாது உளது? காலத்தின் துவக்கமே தென்படுவதில்லை யாதலால் காரிருள் போன்றது அது. அதன் முடிவு தென்படாதிருப்பதால் இறந்தகாலமும், எதிர்காலமும் காரிருளுக்கு ஒப்பானவைகள். அமாவாசை இரவில் கார் மேகம் இருளைப் பன்மடங்கு அதிகப்படுத்தி விடுகிறது. பிரளயம் போன்றது அக்காட்சி. அதில் திடீரென்று மின்னல் ஒன்று கிளம்புகிறது. 'அதோ மின்னல்!' என்று அதைச் சுட்டிக்காட்டுவதற்கு முன்பு அது மாயமாய் மறைந்துபோகிறது. காலம் என்னும் ஆதியந்தமில்லாத இருளுக்குள்ளே நாம் படைத்துள்ள உடல் அம்மின்னலுக்கு ஒப்பானது. இது நிலைத்துள்ளதென்று மயக்கத்தால் நாம் நினைக்கிறோம். ஆனால் மின்னலுக்கு ஒப்ப இது காரிருளில் மறைந்துவிடுகிறது.

ஆயினும் இது நிலைபேறு உடையதென்று கருதுவது மதிமயக்கமாகும். இக்கோட்பாட்டை **மின்னனைய பொய்யுடலை நிலை என்றும்** எனத் தாயுமானவர் பகர்கிறார்.

நிலையற்ற இவ்வுடலின் மூலம் மனிதன் நுகரும் இன்பம் எத்தகையது என்பதை ஆராய்ந்து பார்ப்போம். பெற்றுள்ள இவ்வுடல் வடிவத்தில், சிசுவாயிருக்கின்ற பொழுது இது இன்பத்தை நுகருவதற்கு தகுதியற்றது. ஆண் உடல் என்கின்ற எண்ணமோ பெண் உடல் என்கின்ற எண்ணமோ அப்பொழுது உண்டாவதில்லை. அது ஆணாயிருப்பதும் பெண்ணாயிருப்பதும் ஒன்றேயாம். இனி வயோதிகம் வந்து உடலெல்லாம் சுருங்கிப்போய், கண் மங்கி, காது அடைத்து, பல்போய், நரை திரை தோன்றி அது நடுக்கமுற்றிருக்கின்றபொழுதும் இன்ப நுகர்ச்சிக்குத் தகுதியற்றதாம். ஆண் பெண் என்கின்ற வேற்றுமை அந்த நிலையிலும் பொருளற்றதாம். இடைநிலையில் வளர்ந்து வருகிற உடலுக்கு மனிதன் கொடுக்கிற வெளி வேஷத்துக்கு ஒப்ப அது ஆண் எனவோ, பெண் எனவோ கருதப்படுகிறது. வேண்டுமானால் நெடு நாளைக்கு ஆண் உடலத்துக்கு பெண் உடலம் போன்ற வேஷம் கொடுத்து அதன் காட்சியை மாற்றியமைக்க இயலும். அதே பாங்கில் பெண் உடலத்துக்கு ஆண் உடலம் என்னும் வெளித் தோற்றத்தை அமைத்து வைப்பதும் சாத்தியம். ஆணைப் பெண்ணாகவும் பெண்ணை ஆணாகவும் நினைக்கக்கூடிய சூழ்நிலையை

உண்டுபண்ணி விடலாம். இனி அத்தகைய எண்ணத்திலும் சூழ்நிலைக்கு ஒப்ப மனதில் உதிக்கும் கருத்தில் வேற்றுமை உண்டாகிறது. பெண்பால் ஒருத்தியை அவளுடைய தந்தை ஒரு போக்கில் பொருள்படுத்துகிறன். அவளுடைய சகோதரன் இன்னொரு போக்கில் பொருள்படுத்துகிறன். கணவன் தனது மனப்பாங்குடன் அவளைக் காண்கிறன். அவளுக்கு மகவாக வாய்த்த சிறுவன் தன் போக்கில் அவளோடு இணக்கம் கொள்கிறன். காமநோய் பிடித்துள்ள தூர்த்தன் ஒருவன் தனது தன்மைக்கு ஒப்ப அவளைக் கருத்தில் வைக்கிறன். இனி ஞானி ஒருவனுக்கு அவள் அன்னை பராசக்தியின் சொரூபமாகத் தென்படுகிறள். விதவிதமான மனப்பான்மை விதவிதமான இணக்கத்தை உண்டுபண்ண வல்லது என்பது இதினின்று வெளியாகிறது. பொதுவாகப் பெண்பால் ஒருத்தியைப் போகத்துக்கு உரியவளாகப் பொருள்படுத்துவதே உலகத்தவரியல்பு. அத்தகைய மனப்பான்மையே மக்களுக்கிடையில் ஊட்டப்படுகிறது. கண்ணுக்கு மை தீட்டுவது நிலையற்ற உடலை அழகு படுத்துதல் பொருட்டேயாம். ஆடை, ஆபரணங்களால் அவளை அலங்கரிப்பதும் உடல் பற்றையும், உடல் ஆசையையும், உடல் இன்பத்தையும் பெருக்குதல் பொருட்டேயாம். வளரும் பருவத்திலிருப்பவர்களுக்கு அத்தகைய ஆசை வந்துவிடும்பொழுது வாழ்க்கையில் வேறு லக்ஷியம் எதனிடத்தும் நாட்டம் உண்டாவதில்லை. உடலின் மூலமாக நுகரும் இன்பமே உண்மையான இன்

பம் என்கிற எண்ணம் வந்துவிடுகிறது. இக்கருத்தை **மையிலகு விழிகொண்டு மையல் பூட்டும் மின்னூர்கள் இன்பமே மெய்யென்றும்** எனத் தாயுமானவர் பகர்கிறார். மையிலகு விழி என்பதன் கருத்து மை தீட்டி அதன் மூலமாகக் கவர்ச்சியை உண்டுபண்ணும் கண் விழி எனப் பொருள்படுகிறது. மையல் பூட்டுதல் காம மயக்கத்தை உண்டுபண்ணுதல் எனப் பொருள் படுகிறது. மின்னூர்கள் என்னும் சொல் மின்னல் கொடி போன்று அழகு நிறைந்த மாதரைக் குறிக்கிறது.

மனம்கொண்டது மாளிகை என்பது பழமொழி. மனிதன் எந்த இடத்தில் வேண்டுமானாலும் இன்புற்று வாழ்ந்திருக்கலாம். அந்த மனப்பான்மைக்குச் சான்றாக தசரத ராமனை எடுத்துக்கொள்ளலாம். சுக போகம் நிறைந்த அயோத்தி வாழ்க்கையைவிட இயற்கையாக அமைந்திருந்த வனவாசமே அவனுக்குப் பெருமகிழ்வு ஊட்டியது. ராமன் காட்டிய வழியைப் பின்பற்ற மக்கள் ஆயத்தமாயில்லை. வசதிகள் பல நிறைந்த வீடுகள் கட்டுவதிலேயே அவர்கள் கண்ணுங் கருத்துமாயிருக்கின்றனர். நல்லவீடு கட்டி அதில் சுகஜீவனம் பண்ணுவதையே வாழ்க்கையின் உயர்ந்த லக்ஷியம் என மக்களில் பெரும்பாலர் கருதி வருகின்றனர். வீட்டை வசதியுடையதாக அமைத்துக்கொள்வதற்கு விதவிதமான முயற்சிகள் எடுத்துக்கொள்கின்றனர். நவீன மக்கள் அத்தகைய முயற்சியில் பெரிதும் வெற்றியடைந்திருக்கின்றனர். குளிர் வெப்

பம், வெளிச்சம் காற்று முதலியன வீட்டுக்குள்ளே அளவெடுத்து வரும்படியான உபாயங்களை யெல்லாம் கையாண்டு வருகின்றனர். மாடிக்குமேல் மாடியாக அவைகளை மிக உயரமாகவும் அமைக்கின்றனர். தாங்கள் விரும்புகின்ற சுகங்களையெல்லாம் வீட்டுக்குள் இருந்தவாறே அனுபவிப்பதற்கான ஏற்பாடுகளையும் செய்து வைத்திருக்கின்றனர். எதை சொர்க்கம் என்று மனிதன் கற்பிக்கின்றானோ அதை அந்த மாளிகைக் குள்ளேயே அமைத்துக் கொள்ளுதலில் மனிதன் வெற்றி மிகப் பெற்றிருக்கிறான். இக்கருத்தை, **வளர் மாடமேல்வீடு சொர்க்கமென்றும்** எனத் தாயுமானவர் சொல்லுகிறார். வளர் என்னும் பதம் உயர்ந்த எனப் பொருள்படுகிறது.

போகம் ஒன்றில் மட்டும் மக்கள் பற்றுதல் வைத்திருப்பவர்களல்லர். பொருளிலும் அவர்கள் பெரும் பற்று வைத்திருக்கின்றனர். பொருளுக்கு அறிகுறியாயிருப்பது பொன். அது வெவ்வேறு நாடுகளில் வெவ்வேறு நாணயமாக வடிவெடுக்கிறது. அந்த நாணயம் மனிதனுடைய மனதிலே எவ்வளவு பெரிய மாறுதலை உண்டுபண்ணக் கூடியது என்பதை மாந்தர் பொதுவாக எண்ணிப் பார்ப்பதில்லை. திடீரென்று ஒரு மனிதனுக்குச் செல்வம் சேர்ந்து விட்டால் அவன் புதிய ஆளாக மாறிவிடுகின்றான். அவனுடைய நெறியான வாழ்க்கையைச் செல்வம் பெரிதும் கெடுத்து விடுகிறது. பொருந்தாத போகங்களைப் பணம் மிகக் கொடுத்து விலைக்கு வாங்கப் பணக்காரன் ஒருவன்

முந்துகிறான். ஒருவனுக்குப் பணப்பற்று அதிகரிக்கு மளவு மக்களிடத்து அன்பும் அருள் நாட்டமும் குறைந்து போய்விடுகின்றன. பொன்னைச் சேகரிப்பதிலேயே வாழ்க்கை முழுதும் ஒப்படைக்கப்படுகிறது. இனி, திடீரென்று ஒருமனிதனுக்குச் சொந்தமாயுள்ள செல்வமெல்லாம் கை நழுவிப் போய்விட்டால் தன் உயிரே போய்விட்டது போன்று அவன் உணர்கிறான். அந்த உணர்வின் வேகத்தைத் தாங்கமுடியாது செத்துப்போய் விடுபவர்களும் உலகில் உளர். பொருளை இழந்த பிறகு உயிரையும் இழந்துவிடாது வைத்திருப்பவர்களில் பெரும்பாலோர் மனப்பண்பை இழந்துவிடுகின்றனர். தாங்கள் அற்பர்கள் ஆகிவிட்டதாகவே அவர்கள் கருதுகின்றனர். அதற்குமேல் செல்வம் படையாதவனை மதியாது புறக்கணித்து விடுவதே உலகத்தின் போக்காக இருந்துவருகிறது. செல்வம் படைத்திருப்பவன் வாழ்க்கையில் அனைத்தையும் சாசுவதமாகப் பெற்றிருப்பவனாகவே உலகம் கருதுகிறது. உலகத்தவரிடத்துள்ள இப்போக்கை, **பொன்னை அழியாது வளர் பொருள் என்று போற்றி** என்று அண்ணல் இயம்புகிறார்.

ஜீவன்கள் பல பிறவிகள் எடுக்கின்றன. துன்பத்தினின்று தப்பித்துக் கொள்வதற்கும் இன்பத்தைப் பெருக்குதற்கும் பிறவிதோறும் ஜீவன்கள் முயன்று வருகின்றன. பல பிறவிகளுக்கிடையில் உடலமைப்பையே மாற்றிவிடுவது அவைகளின் இயல்பு ஆகிறது. கல் நிலை, புல் நிலை, புழுவின்

நிலை, நீந்துவன, பறப்பன, நடப்பன ஆகிய வெவ்வேறு உயிர்களின் நிலைகளை ஜீவாத்மாக்கள் எடுத்திருக்கின்றன. ஜங்கம நிலைக்கு வந்துவிடுகின்றபொழுது ஸ்தாவர வடிவங்கள் பொய்வேடங்கள் ஆகிவிடுகின்றன. ஜங்கமங்களுக்கிடையில் பறவை நிலையைத் தாண்டி விலங்கு நிலைக்கு வருகின்றபொழுது பழைய வடிவங்கள் பொய்வேடங்கள் ஆகிவிடுகின்றன. இங்ஙனம் ஜீவாத்மாக்கள் எடுக்கின்ற கணக்கற்ற வடிவங்கள் நாளடைவில் பயன்படாது போய்விடுகின்றபொழுது பொய்வேடங்கள் ஆகிவிடுகின்றன. ஏனைய பிறவிகளையெல்லாம் தாண்டி மானுடப்பிறவிக்கு ஜீவாத்மாக்கள் வந்துசேருகின்றன. மானுடப் பிறவியில் வடிவத்தில் மானுடர்போன்று தென்படுகிற ஜீவர்கள் எல்லாரும் உண்மையில் மானுடர்களல்லர். மானுட வடிவெடுத்துள்ள துஷ்ட விலங்குகளிருக்கின்றன. மானுட வடிவெடுத்துள்ள பாம்பு, தேள் முதலியன இருக்கின்றன. மானுட வடிவெடுத்துள்ள பசு, மான் முதலியன இருக்கின்றன. இனி, மானுட வடிவெடுத்துள்ள மக்களும் இருக்கின்றனர். எனவே வடிவத்தில் மானுடராகத் தென்படுகிறவர்களெல்லாரும் உண்மையில் மானுடர்கள் அல்லர். அவர்களுள் பொய் வேஷக்காரர்கள் ஏராளமாக இருக்கின்றனர். மானுட வடிவத்தை எடுத்தான பிறகு அதற்கேற்ற பாங்கும் அவர்களிடத்து அமைவது அவசியமாகிறது. மானுடர்க்கென்றே அமையவேண்டிய சிறப்புக்கள் இல்லாது போய்விட்டால் அதைக்

குறையிலை என்றே கண்டிக்கவேண்டும். இக்கோட் பாட்டை, பொய்வேடம் மிகுதிகாட்டி என்று தாயுமான வர் பகர்கிறார்.

மானுட வடிவமெடுத்துள்ள ஜீவர்களிடத்து அமைந்திருக்கவேண்டிய சிறப்புக்கள் எவை என்னும் கேள்வி எழுகிறது. அதற்கு விடை கண்டுபிடிப்பதில் சிரமம் ஒன்றுமில்லை. எதிர்பாராது வாழ்க்கையில் வந்தமைகின்ற விபத்துக்களையும் கஷ்ட நஷ்டங்களை யும் அச்சமின்றி ஆவலின்றி பதைபதைப்பின்றி அமைதியோடு ஏற்றுக்கொள்வது பொறையுடைய நன்மகன் ஒருவனது இயல்பு ஆகும். அடுத்தபடியாக அறிவு படைத்தவனாக இருப்பதே மனிதனுடைய சிறப்பியல்பாகும். இக்கட்டுரையின் துவக்கத்தில் சொல்லியுள்ளபடி பொருள்களை உள்ளபடி பொருள் படுத்துகின்றவனே அறிவாளன் ஆகின்றான். நல்லறிவு ஓங்கப்பெற்று இருப்பவனையே மகான் என்று மொழி கிறோம். துறவு என்பது அலாதியாக யாரோ சிலர்க் குரிய அறமென பெரும்பாலர் பொருள்படுத்துகின் றனர். அது பொருந்தாது. நன்மக்கள் எல்லார்க்கும் துறவு மனப்பான்மை முற்றிலும் அவசியமானது. துறவின் உட்கருத்தை அறிந்து கொள்ளுதலும் அவ சியமாகிறது. ரயில்வண்டித் தொடரில் நாம் பிரயா ணம் பண்ணுகிறோம். அந்த வண்டியில் உள்ள வசதி களை யெல்லாம் வேண்டியவாறு பயன்படுத்திக் கொள் ளலாம். ஆனால் அந்த வண்டியில் பற்று வைக்கலா காது. பிரயாணம் முடிந்ததும் மகிழ்வுடன் வண்டியி

னின்று வெளியேருகிறோம். வண்டியைவிட்டுப் பிரிந்து போகிறேனே என்று வருந்துவார் யாருமில்லை. அது போன்று இவ்வுலக வாழ்வு என்னும் பயணத்தில் நாம் ஈடுபட்டிருக்கிறோம். நமது பெரும் பயணத்தில் வேறு பகுதிகளும் பல அமைந்திருக்கின்றன. இவ்வுலக வாழ்வு என்னும் பகுதி முற்றுப் பெறுகின்றபொழுது மகிழ்வுடன் இதை விட்டு விலகிக் கொள்கிறவர்களே துறவு மனப்பான்மை படைத்தவர்களாகிறார்கள். ஐயோ இவ்வுலகை விட்டுப் பிரிந்து போகின்றேனே என்று வருந்துகிறவர்கள் வாழ்க்கைத் தத்துவத்தை அறியாதவர்கள். சரியான துறவு மனப்பான்மை அவர்களிடத்து அமையவில்லை. அறிவு படைத்த நன்மக்கள் இவ்வுலகில் நன்கு வாழ்ந்திருக்கலாம். ஆனால் உலகப்பற்று அவர்களுடைய மனதைப் பற்றிக் கொள்ளலாகாது. மண்ணுலகில் பற்றற்று வாழ்ந்திருக் கத்தெரிந்து கொண்டவர்களே மானுடப் பிறவியின் குறிக்கோளை அறிந்தவர்கள் ஆகின்றனர். இனி, பற் றற்று உலகில் வாழ்தல் என்பதன் கருத்து இவ்வுல கம் தருகிற வசதிகளையும் செல்வங்களையும் பயன்படுத் தலாகாது என்பதல்ல. அவ்வரவருடைய திறத்துக்கேற் பப் பொருளை வேண்டியவாறு சேகரிக்கலாம். ஆனால் சேகரிக்கிற பொருள் எல்லாம் அலாதியாகத் தனது சொந்த சுக ஜீவனத்துக்காக அல்ல என்பதை மறந்து விடலாகாது. ஒவ்வொரு மனிதனும் தான் தேடிய பொருளில் ஒரு பகுதியை மற்றவர்களுடைய நலத்துக் காகவென்று மனமுவந்து வழங்கி விடுதல் வேண்டும்.

அப்படிக் கொடுத்துப் பழகுதலையே ஈதல் என்று இயம்புகிறோம். இவையும் இவைபோன்ற ஏனைய நல்ல இயல்புகளும் மக்களுக்கென்றே அமைந்துள்ளவைகள் ஆகும். இந்த நல்ல குணங்களைச் செயலில் கொண்டு வருகிறவர்களையே மக்கள் என்று கருதவேண்டும். இக் கோட்பாடுகளை யெல்லாம் தாயுமானவர் தொகுத்து, **பொறை அறிவு துறவு ஈதல் ஆதி நற்குணமெலாம் போக்கிலே போகவிட்டு** என்று இவைகளைப் புறக்கணிக்கின்றவர் களைக் குறித்துப் பகர்கின்றார்.

வெளிச்சமில்லாத இடம் தானாகவே இருள் சூழ்ந் ததாகி விடுகிறது. நற்குணம் படைக்கப்பெறாத மனி தனிடத்து துர்க்குணம் இயல்பாக அமைந்துவிடுகிறது. துர்க்குணங்களில் ஒன்று தனக்கு ஒப்பாரோமிக்காரோ இல்லையென்று தன்னையே பெருமைப்படுத்திக் கொள் ளுதலாம். பிறகு தனக்கு வாய்க்கும் செல்வங்களை யெல்லாம் தன்னுடைய சுகஜீவனத்தின் பொருட்டே பயன்படுத்திக்கொள்ளும் பாங்கு துர்க்குணம் படைத் தவனுக்குப் பெருமிதமாக வந்துவிடுகிறது. சேரச்சேர செம்பொன்னில் ஆசை மிக வந்துவிடுகிறது. பொரு ளைத் தனக்கென்றே கட்டிப் பிடித்து வைக்கும் பாங்கை உலோபம் என்கிறோம். உலோபம் பிடித்த மனிதனையே பேய்பிடித்தவன் என்று சொல்லவேண் டும். மக்களிடத்து இருக்கவேண்டிய நல்லியல்பும், நல்லொழுக்கமும் யாரிடத்திலையோ அவனையே பேய் பிடித்தவன் என்று உலகத்தவர் கூறுகின்றனர். அத் தகைய மனநிலை அவனைக் கீழ்மையில் தள்ளுவதால்

அது பாழான நிலையாகும். இத்தகைய பாங்குடையவர்களைத் தரணிமிசை காணலாம். உலகத்துக்குத் தரணி என்று மற்றொரு பெயர். சேகரிக்கின்ற பொருள் மனிதனுக்கு என்னதான் நல்லது செய்கிறது என்பதையும் சிறிது விசாரித்துப் பார்க்கவேண்டும். வீடு வாசல், ஆடை ஆபரணம், அன்னபானம் போன்ற உடல் வாழ்க்கைக்குத் தேவையானவைகளை மட்டும் பணத்தைக்கொண்டு பெறலாம். நல்ல மனப்பான்மையைப் பெறுதற்கு அது சிறிதும் உதவாது. உடல் வாழ்க்கை ஒன்றில்மட்டும் நம்பிக்கை வைக்கின்ற மனிதனை நாம் லோகாயதன் என்கிறோம். கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்னும் கோட்பாட்டுக்கு ஒப்ப லோகாயதன் உலக வாழ்க்கையை நடாத்துகிறான். அவன் கொண்டுள்ள கொள்கையையே உலோகாயத சமயம் என அழைக்கிறோம். பொருந்தாத அந்த சமயத்தில் நன்மக்கள் போகலாகாது. சிறுநெறி என்று லோகாயதன் போகின்ற போக்குக்குப் பெயரிடலாம். இத்தகைய கீழ்மைகளினின்று தாம் ஆட்கொள்ளப் பட்டிருப்பதாகத் தாயுமானவர் பரிவுடன் பகர்கிறார். செந்நெறியில் செல்லாது சிறுநெறியில் செல்லுகின்றவர்களுடைய பாங்கினின்று தாம் காப்பாற்றப்பட்டுள்ள செயலை, **தன்னிகரில் உலோபாதி பாழ்ம் பேய் பிடித்திடத் தரணிமிசை லோகாயதன் சமயநடை சாராமல்** என்று பகர்கிறார்.

என்ன பாங்கில் தாம் ஆட்கொள்ளப்பட்டுள்ளார் என்பதையும் இனி, தெளிவாக அவர் எடுத்து இயம்பு

கிறார். மானுடப் பிறவியெடுத்து வாழுகின்ற வாழ்வு கடவுளை அறிந்து அவரை அடைதற்பொருட்டேயாம். கடவுள் தத்துவத்தை உள்ளபடி அறிகின்றவர்கள் கடவுளை அடைந்துவிடுகின்றனர். அவரை அறிதலும் அடைதலும் ஒன்றேயாம். அப்படிக் கடவுளை அடைதற்கு அனுபூதி என்று பெயர். பருகுகின்ற நீருக்கு வேண்டுமென்கின்ற பெயரிட்டு அழைக்கலாம். அதே விதத்தில் பரம்பொருளுக்கு வெவ்வேறு சமயங்கள், வெவ்வேறு பெயரிட்டு அழைக்கின்றன. பெயர்கள் பல எனினும் பொருள் ஒன்றேயாம். மெய்ப்பொருளை ஈண்டு சிவம் எனத் தாயுமானவர் சொல்லுகிறார். அப்பொருளை அடையும் நிலைக்கு சிவானுபூதி என்னும்பெயர்வந்துள்ளது. சிவானுபூதியைப்பெறுதற்கு வழிகாட்டித் தரும் சாஸ்திரங்கள் பல இருக்கின்றன. அவைகளைப் பொதுவாகத் தொகுத்து வேதாந்த சாஸ்திரங்கள் என்றும் சைவசித்தாந்த சாஸ்திரங்கள் என்றும் பகர்ந்துவருகிறோம். இவ்விரண்டுசாஸ்திரங்களும் ஒன்றோடொன்று முரண்படுகின்றன என்று பொருள்படுத்துகிறவர்கள் உண்டு. இவைகளில் ஏதேனும் ஒன்றை அல்லது இரண்டையுமே தவறுதலாகப் பொருள்படுத்துகின்றவர்களே அவைகளுக்கிடையில் முரண்பாட்டைக் காண்பார்கள். இரண்டு சாஸ்திரங்களையும் நேராகப் பொருள்படுத்தத் தெரிந்துகொள்கிறவர்கள் அவைகளுக்கிடையில் ஒற்றுமையையே காண்பார்கள். சாஸ்திரங்கள் யாவும் ஒரே உண்மையைத்தான் சொல்லியிருக்கின்றன என்கின்ற தெளிவு பெறுவதே மானுட

வாழ்க்கையில் கிடைக்கின்ற பெரிய பேறு ஆகும். மக்களில் பலபேர் துர்க்குணங்களை யெல்லாம் போக்கி விட்டு நற்குணத்தைப் பெற்ருன பிறகும் சமயச் சழக்கிலே அகப்பட்டுக்கொண்டு ஒரு சமயம் பெரியது மற்றது சிறியது என்னும் குழப்பத்தை அடைந்து விடுகின்றனர். தாம் அத்தகைய சழக்கிலே அகப்பட்டுக்கொள்ளாததை, **வேதாந்த சித்தாந்த சமரச சிவானுபூதி மன்ன** என்று தாயுமானவர் இயம்புகிருர். மன்னுதல் என்னும் சொல் பொருந்துதல் எனப் பொருள் ப்டுகிறது.

இந்த சமரச நிலையைப் பெறுதற்கான மனபரிபாகம் தாயுமானவரிடம் இருந்தது. அதற்குமேல் அவரை ஆட்கொண்ட மௌனகுரு அதை ஒரு சொல்லால் அவருக்கு எடுத்து உபதேசித்தார். சன்மார்க்கம் ஒன்றைத்தான் எல்லோரும் அனுஷ்டிக்கின்றனர் என்னும் தெளிவு வரும்போது எல்லோரையும் உள்ளபடி நேசிக்கின்ற அன்பு வருகிறது. அன்பில் ஊறி வாழுகின்றவர்களே பெருவாழ்வு வாழ்கின்றனர். அன்பு இல்லாதவர்கள் வாழ்ந்திருந்தும் வாழாதவர்களேயாம். இக்கோட்பாட்டை, ஒரு **சொற்கொண்டு எனைத் தடுத்தாண்டு அன்பின் வாழ்வித்த ஞான குருவே** என்று அவர் இயம்புகிருர். இக்கருத்துக்கள் யாவும் மேற்கண்ட பாடலில் அமைந்துள்ளன.

---

## மௌனகுரு வணக்கம் - 5

போனகம் இருக்கின்ற சாலையிடை வேண்டுவ
புசித்தற் கிருக்குமதுபோல்
புருடர்பெறு தர்மாதி வேதமுடன் ஆகமம்
புகலுமதி னலாம்பயன்
ஞானநெறி முக்யநெறி காட்சியனு மானமுதல்
நானவி தங்கள்தேர்ந்து
நான்நான்எனக்குளறு படைபுடைபெயர்த்திடவும்
நான்குசா தனமும்ஓர்ந்திட்
டானநெறி யாஞ்சரியை யாதிசோ பானமுற்
றணுபட்ச சம்புபட்சம்
ஆமிரு விகற்பமும் மாயாதிசேவையும் •
அறிந்திரண் டொன்றென்னுமோர்
மானத விகற்பமற வென்றுநிற் பதுநமது
மரபென்ற பரமகுருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

*ஒரு மனிதனுக்கு வறுமை உண்டாவது அவனுடைய மனநிலை, அவன் வசித்துவரும் சூழ்நிலை ஆகிய இரண்டையும் அடிப்படையாகக் கொண்டது. இவ்விரண்டினுள் சூழ்நிலையை ஆராய்ந்து பார்ப்போம். உடல் வாழ்க்கைக்கு உணவு இன்றியமையாதது. உணவை உண்ணாது உடலைப் பாதுகாத்து வைக்க யாருக்கும் இயலாது. உணவுப் பொருள் வேண்டும் பொழுது வேண்டிய அளவுக்கு அகப்படுமாகில் அதைக்*

குறித்து யாரும் கவலைப்பட மாட்டார்கள். எல்லாக் காலத்திலும் விரும்பிய அளவுக்கு உணவுப் பொருள் அகப்படாது என்றால் அது அகப்படும் காலத்தில் தேவைக்குமேல் அதைத் தேடிப் பாதுகாத்து வைக்க அனைவரும் முயலுகின்றனர். விதவிதமான உணவு வகைகள், பக்ஷண வகைகள், பான வகைகள் அடங் கப்பெற்றுள்ள போஜனசாலை ஒன்று இருக்கிறது என்று வைத்துக்கொள்வோம். அதனுள் சென்றுதான் வேண்டுகிறபொழுது விரும்புகிற உணவு வகைகளை வேண்டியவாறு உண்பதற்கு ஒரு மனிதனுக்கு உரிமை இருக்கிறது என்றும் வைத்துக் கொள்வோம். பிறகு அவனுக்கு உணவைப் பற்றிய வறுமை நோய் உள்ளத் தில் ஒரு பொழுதும் உண்டாகாது. மிகைபட உண் பதை அவன் அறவே நிறுத்தி விடுவான். தேவையான தைக் குறிப்பிட்ட வேளையில் மட்டும் அவாவுக்கு அடி மைப்படாது அவன் அருந்துவான். அத்தகைய பேறு மண்ணுலக வாழ்க்கையில் யாரோ சிலர்க்குத்தான் அமைகிறது. இக்கோட்பாட்டை, **போனகம் இருக் கின்ற சாலையுடை வேண்டுவ புசித்தற்கு இருக்கும் அது போல்** என்று தாயுமானவர் பகர்கிறார். போனகம் என்னும் சொல் உணவு எனப் பொருள்படுகிறது. உபமானத்துக்கு எடுத்துக்கொண்ட இக்கோட்பாடு ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய வாழ்க்கையில் அவர் விதவித மான ஆத்ம சாதனங்களில் ஈடுபட்டிருந்தபொழுது உண்மையாகவே நிகழ்வதாயிற்று. அவருக்கு மனதில் வறுமை நோய் ஒருநாளும் வந்தது கிடையாது. ஆனால்

சாதன வகைகள் சிலவற்றைச் செய்துகொண்டு வந்த பொழுது அவருடைய உடல் ஒருவிதமான பசிப் பிணிக்கு உட்பட்டது. எவ்வளவு உண்டாலும் அவருடைய பசிப்பிணி தணிவதில்லை. அப்பொழுது அவருக்குக் குருவாக வாய்த்தவர் அதைக் கவனித்தார். அந்த நோயை நீக்குதற்கான முறை ஒன்றையும் அவர் கையாண்டார். விதவிதமான தின்பண்ட வகைகள் அமையப்பெற்றிருந்த போஜனசாலை ஒன்றை ஸ்ரீராம கிருஷ்ணருக்காகவென்றே அவர் நியமித்தார். அதற்குள்ளேயே அவர் நெடிது வசித்திருப்பதற்கும் அவர் ஏற்பாடு செய்து வைத்தார். அந்த அற்புதமான ஆத்ம சாதகரும் விதவிதமான பக்ஷணங்களை இடையிடையே அருந்திக் கொண்டிருந்தார். அவையாவும் எப்படிச் செமித்து எங்குச் சென்றது என்று கூற யாருக்கும் இயலவில்லை! மனதின் வேகம் உடல்கூறைவிட உயர்ந்தது என்கின்ற ஒரே முடிவுக்குத்தான் அந்த நிகழ்ச்சி ஆராய்ச்சிக்காரர்களைக் கொண்டு செலுத்தும். இங்ஙனம் இரண்டொரு மாதங்கள் உண்டு களித்த பிறகு பரமஹம்ஸர் அந்த மனநிலையைத் தாண்டியவர் ஆய்விட்டார். உலகத்தவர்களுக்கு எல்லாவிதமான உணவுப் பொருள்களும் அடங்கப்பெற்ற போஜன சாலைகள் முற்றிலும் தேவையானவைகள் என்பது தேற்றம்.

மனிதன் வெறும் உணவை உண்டு வாழ்ந்திருப்பவனல்லன் என்பது ஒரு வேதவாக்கு. அதாவது உணவை உண்டு வாழ்ந்திருப்பதைவிட உயர்ந்த

குறிக்கோள்கள் பல மனிதனுக்கு உள என்பது சொல்லாமலேயே விளங்குகிறது. அத்தனை விதமான குறிக்கோள்களையும் தொகுத்து நான்கினுள் அடக்கலாம். அந்த நான்குக்கு புருஷார்த்தங்கள் என்று பெயர். புருஷன் அல்லது மனிதனால் நாடப்படுபவைகள் என்பது அதன்கருத்து. தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என அந்த நான்குக்கும் பெயர்கள் அமைந்திருக்கின்றன. நான்கு உறுதிப் பொருள்கள் என்றும் நான்கு பால்கள் என்றும் சதுர்வர்க்கங்கள் என்றும் அவைகளுக்கு வெவ்வேறு பெயர்கள் அமைந்திருக்கின்றன. அறம் பொருள் இன்பம் வீடு என்பன செந்தமிழில் அவைகளுக்கு அமைந்துள்ள பெயர்கள் ஆகும். மனிதன் தேடுகின்ற தேட்டைகள் எல்லாம் இந்த நான்கினுள் அடங்கிவிடுகின்றன என்பது முறையாக ஆராய்ச்சி பண்ணுகிறவர்களுக்குப் புலனாகும். இந்தப் புருஷார்த்தங்கள் நான்கைப்பற்றிப் பகர்கின்றநூல்கள் எவை என்னும் கேள்வி அடுத்தபடியாக எழலாம். உண்மையில் புருஷார்த்தங்களை விளக்குகின்றவைகளையே நூல்கள் என்றும் சாஸ்திரங்கள் என்றும் ஆன்றோர்கள் அங்கீகரித்து வந்திருக்கின்றனர். அத்தகைய நூல்கள் எண்ணிக்கையில் அடங்காதவைகள்; பலப்பல மொழிகளிலே அவைகள் அமைந்திருக்கின்றன. அவை யாவிலும் மிகப்பழைய நூல்களாக இருப்பவைகள் நான்கு வேதங்கள். நான்கையும் வேதம் என்று பொதுவாகத் தொகுத்து மொழிவது முறை. வேதங்களுக்கு அடுத்தபடியில் வருபவைகள்

ஆகமங்கள். வேதங்களுக்குப் பின்பு வருவிக்கப்பட்டவைகள் என அவைகள் பொருள்படுகின்றன. சைவ ஆகமங்கள், தேவி ஆகமங்கள், வைஷ்ணவ ஆகமங்கள் எனப் பலதரப்பட்ட சமயங்களுக்கு ஏற்ப ஆகமங்கள் பல இருக்கின்றன. இந்த நூல்கள் எல்லாம் வெவ்வேறு விதங்களில் புருஷார்த்தங்களைப் பற்றியே பகர்ந்து வருகின்றன. இக்கருத்தை, **புருஷர்பெறு தர்மாதி வேதமுடன் ஆகமம் புகலும்** என்னும் அடியிலே தாயுமானவர் அடக்கி வைத்துள்ளார்.

புருஷார்த்தங்கள் நான்கினுள் முக்கியமானது எது என்னும் கேள்வி அடுத்தபடியாக எழுகிறது. அறம் பொருள் இன்பம் என்னும் முப்பால்கள் அலாதியாக இவ்வுலக வாழ்க்கைக்கென்றே அமைந்தவைகள் ஆகின்றன. மக்களுள் கோடானுகோடி பேர் இவ்வுலக வாழ்க்கையிலேயே கண்ணுங்கருத்துமாய் இருக்கின்றனர். இதற்கப்பாலுள்ள பாரமார்த்திகப் பெருநிலையைப்பற்றிக் கருத்துவைப்பாரைக்காண்பது அரிதிலும் அரிது. 'வீடுபெறநில்' என்பது ஆன்றோர் வாக்கு. ஆனால் வீட்டைப்பெற முயலுகின்றவர்கள் மிகச் சிலரே. வீடுபெறுவதும் முக்தியடைவதும் கடவுளிடத்து லயமாவதும் ஒன்றே. இத்தனைவிதச் சொற்களைக்கொண்டு அந்த ஒரு கருத்தை விளக்குகிறோம். அதற்காக நாம் எடுத்துக்கொள்ளும் முயற்சிக்கு முக்தி நெறி என்று பெயர். முக்தி நெறி என்றால் என்ன என்பதை முதலில் அறிவைப் பயன்படுத்தி ஓர்மைப் படுத்தவேண்டும். நித்திய அநித்திய வஸ்து விவேகம்

என்றும் இம்முயற்சிக்குப் பெயர் வந்துள்ளது. கடவுள் ஒருவரே நித்தியப் பொருள். அழிந்துபட்டுப் போகாது யாண்டும் முழுமுதற் பொருளாக நிலைத்திருப்பவர் அவர் ஒருவரே. ஏனைய யாவும் தோன்றி மறையும் பாங்குடையவைகள். எனவே அவைகள் அநித்தியமானவைகள். அறிவைக்கொண்டு நித்தியப் பொருளையும் அநித்தியப் பொருள்களையும் பாகுபடுத்துங்கால் அதற்கு ஞானநெறி என்று பெயர். நெறி என்னும் சொல்லுக்குப் பாதை, வழி, ஆறு என வேறுபல சொற்களும் இருக்கின்றன. மனிதன் நாடிச் செல்லுகின்ற நெறிகளுள் முக்கியமானது ஞானநெறி. சூரியன் உதயமானதும் பொருள்களையெல்லாம் உள்ளபடி காண்கிறோம். அக்ஞான இருளில் திரிவுபட்ட காட்சிகொடுத்தவைகள் எல்லாம் சூரியவெளிச்சத்தில் உள்ளபடி காட்சிகொடுக்கின்றன. துன்பங்களனைத்துக்கும் மூலகாரணம் அக்ஞானம். அத்துன்பங்களினின்று தெளிவு அடைதற்கு ஏதுவாயிருப்பது ஞானநெறி. எனவே அது முக்ய நெறி என மொழியப்படுகிறது. இக்கருத்துக்களை, **அதில் நாலாம் பயன் ஞானநெறி முக்யநெறி** என்று தாயுமானவர் இயம்புகிறார்.

ஞான நெறியை முக்யநெறி என்று மொழியுமிடத்து முக்கியமல்லாதவைகள் பல நெறிகள் இருக்கின்றன என்பதும் வெளியாகிறது. உண்மையில் ஆத்ம சாதனங்கள் எண்ணிக்கையில் அடங்காதவைகள். சிறந்த போஜனசாலை ஒன்றில் கிடைக்கக்கூடிய உணவுப் பொருள்கள் எல்லாவற்றையும் வைத்திருப்

பது போன்று வேத ஆகம சாஸ்திரங்களில் எல்லாவித மான ஆத்ம சாதனங்களும் அடங்கியிருக்கின்றன. உணவுப் பொருள்கள் பல இருப்பினும் மனிதன் ஆனு லும் சரி, மற்ற உயிர்வகைகள் ஆனுலும் சரி அவரவர்க் குத் தேவையான உணவு வகைகளை மட்டும் உயிர் வாழ்பவர்கள் தேடியெடுத்துக் கொள்கிருர்கள். அதே பாங்கில் ஆத்ம சாதனங்கள் எல்லாவற்றையும் பற்றி நூல்களில் ஆராய்ந்திருப்பவர்கள் மிகச் சிலரே. தாங் கள் அனுஷ்டித்து வரும் சாதன வகைகளைப்பற்றி மட்டும் விரிவாகப் படித்தும் கேட்டும் வருகின்றனர். மற்றவைகளையெல்லாம் கருத்தில் வாங்காது விட்டுவிடு கின்றனர். அத்தனைவிதமான ஆத்ம சாதன வகை கள் அடங்கப்பெற்றிருப்பது வேதங்களுக்கும் ஆகமங் களுக்கும் உள்ள சிறப்புக்களை நிரூபிக்கின்றன.

ஏதேனும் ஓர் அனுஷ்டான முறையை நல்ல ஆத்ம சாதனம் என்று எப்படித் தெரிந்துகொள்வது? அதற் கான உபாயங்களையும்இந்நூல்கள் பகர்ந்திருக்கின்றன. மூன்று முக்கியமான உபாயங்களிருக்கின்றன. அவை களுக்குப் பிராமணங்கள் என்று பெயர். சாஸ்திரப் பிரமாணம், யுக்திப்பிரமாணம், பிரத்யக்ஷப் பிரமா ணம் என்று அம்மூன்று உபாயங்கள் அழைக்கப்படு கின்றன. ஆத்மசாதனம் என்று இயம்பப்படுகிற கோட்பாடு ஒன்று வேத ஆகம சாஸ்திரங்களில் அடங் கப் பெற்றிருக்கிறதா என்று பார்க்க வேண்டும். அப் படி சாஸ்திரத்தில் அது இருந்தால் சுருதிப்பிரமாணம் அல்லது சாஸ்திரப் பிரமாணம் அந்த சாதனத்துக்கு

ஆதாரமாகிறது. இனி, சாஸ்திரப் பிரமாணம் என்று சொல்லப்படுவதில் மற்றொரு பேரிடைஞ்சல் இருக்கிறது. சாஸ்திரப் பிரமாணம் ஒன்றுக்குக் கணக்கற்ற வியாக்கியானங்களை அறிஞர் பகர்கின்றனர். ஒருவர் கொடுக்கிற வியாக்கியானம் மற்றொருவர் கொடுப்பதோடு முரண்படுவதும் உண்டு. முரண்பாடுடைய இரண்டு கோட்பாடுகள் உண்மையாகமாட்டா. இவைகளுள் பொறுத்தமானவியாக்கியானத்தைப் பாகுபடுத்துவது எப்படி? அதற்கு யுக்திப் பிரமாணம் ஒன்றே உற்ற உபாயமாகிறது. யுக்திப்பிரமாணத்தை அனுமானப் பிரமாணம் என்றும் அழைப்பதுண்டு. யுக்தியை அல்லது அனுமானத்தை முறையாகக் கையாளுவதே இந்தப் பிரமாணத்தின் நோக்கமாகும். அறிவின் உச்சநிலை மனிதனுக்கே சொந்தமானது. உலகில்வாழும்உயிர் வகைகளிடத்து வெவ்வேறு படித்தரங்களில் அறிவு அமைந்திருக்கிறது. அதன் உச்சநிலையைப் பரிபாகமடைந்துள்ள மக்களிடத்தே காணலாம். தற்பாதுகாப்புக்கும் பிற உயிர்கள்மீது ஆக்கிரமிப்பதற்கும் ஆயுதங்கள்பல வாய்க்கப் பெற்றவைகளாக மற்ற உயிர்கள் இருக்கின்றன. மனிதனுக்கோ அத்தகைய ஆயுதம் ஒன்றும் பிறவியில் அமையவில்லை. எனினும் தோற்றத்திலில்லாத ஆயுதம் ஒன்று அவனுக்கே உரியதாக அமைந்திருக்கிறது. அதைத்தான் பகுத்தறிவு என்கின்றோம். பாதுகாப்புக்கும் முன்னேற்றத்துக்கும் மனிதனுக்கு உதவுவது அறிவு. 'எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு'

என அந்த அறிவுக்கும் விளக்கம் தரப்பட்டிருக்கிறது. ஆராய்ச்சியின் வாயிலாக மெய்ப்பொருளைக்காண்கின்ற செயல் மனிதனுக்கே உரியது. ஓரம் சாராது நடுநிலையிலிருந்து கொண்டு மெய்ப்பொருள் எதுவாயினும் அதை அறிந்தே ஆகவேண்டும் என்கின்ற நோக்கத்துடன் மனிதன் ஒருவன் தனது யுக்தியைக் கையாளுவானாகில் அவனுடைய அறிவுத்திறன் பன்மடங்கு வலுத்துக்கொண்டே போகும். மெய்ப்பொருளாகிய கடவுளையே அறிந்து கொள்ளுதற்கு அந்த யுக்தி அல்லது அனுமானப் பிரமாணம் பயன்படுகிறது. பொருள்களை எடைபோடுவதற்கு நல்ல பாங்கில் அமைக்கப்பட்டுள்ள தராசு பயன்படுவதுபோன்று மெய்ப்பொருள் ஆராய்ச்சிக்கு யுக்தி அல்லது அனுமானம் முற்றிலும் பயன்படுகிறது. அதன் உபயோகத்துக்குச் சான்று ஒன்றை ஈண்டு எடுத்துக்கொள்வது அவசியமாகிறது. நிரீசுவரவாதிகள் பலர் கடவுள் இல்லையென்று நிரூபிக்க யுக்தி பூர்வமாக முயன்றனர். அவர்கள் கையாண்ட அதே யுக்தியைப் பயன்படுத்திக்கொண்டு கடவுள் ஒருவர்தான் யாண்டும் இருக்கிறார் என்று ஜகத்குரு ஆதிசங்கரர் நிரூபிக்கிறார். நடுநிலையிலிருந்து கொண்டு மெய்ப்பொருள் ஆராய்ச்சி செய்த அறிவாளர் அனைவரும் சங்கரர் கையாண்ட யுக்திக்கு உட்பட்டு அவர் வழிக்குத் திரும்புவாராயினர். யுக்தியை முறையாகக் கையாளுதல் மானுடவாழ்க்கையில் நாம் செய்யக்கிடக்கும் கடமைகளுள் மிகமுக்கியமானதாகும். யார் ஒருவன் நேர்மையாக அனுமானத்தை உபயோகிக்கின்றானோ அவன் கடவுளை

யறிய வல்லவனுகின்றுன். பிறகு அந்த அனுமானப் பிர மாணத்திலும் உயர்ந்த மற்றொரு பிரமாணம் உண்டு. அதற்கு பிரத்தியக்ஷப்பிரமாணம் என்றும் காட்சிப் பிர மாணம் என்றும் பெயர்கள் வந்துள்ளன. சாதனத்தை முறையாக அனுஷ்டிக்கின்றவனுக்கு சுவானுபவம் வரு கிறது. அந்த சுவானுபவத்துக்கே காட்சிப் பிரமாணம் என்னும் பெயர் வந்துள்ளது. அதைவிட உயர்ந்த பிர மாணம் ஒன்றுமில்லை. ஆத்மசொரூபம் அழியாதது என்று நூல்கள் சொல்லுகின்றன. அந்த நூல்களில் நம் பிக்கை வைப்பது சாஸ்திரப் பிரமாணம். பிறகு மனி தன் யுக்தியைக் கையாண்டு பார்க்கிறுன். தன்னிடத்து அழியும் பாங்குடையவை எவை, அழியாததாக யாண் டும் நிலைத்திருப்பது எது என யுக்திபூர்வமாக அவன் ஆராய்ச்சி பண்ணுகிறுன். உடல் உள்ளம் போன்ற வைகள் ஓயாது மாறியமைகின்றன. பின்பு மறைந்து பட்டுப் போகின்றன. அத்தகைய அநித்தியப் பொருள் களுக்கு அடிப்படையாக ஆத்ம சொரூபம் என்கின்ற பேருணர்வு எல்லா நிலைகளிலும் அழிந்துபட்டுப் போகாததாக இருப்பதை யுக்தியைக்கொண்டு முடிவு கட்டுகிறுன். அது ஓரளவு சாஸ்திரப் பிரமாணத்தை விட உயர்ந்ததாக அவனுக்கு உதவுகிறது. பிறகு தான் உடல் சொரூபம் அல்ல, ஆத்மசொரூபம் என் பதை சுவானுபவத்தில் ஆத்ம சாதகன் உணர்கிறுன். அதுவே காட்சிப்பிரமாணம். அதை அடைந்தான பிறகு மரணம் முதலிய மாறுபாடுகள் எல்லாம் தன்னை வந்து தாக்குபவைகள் அல்ல என அவன் அறிந்து

கொள்கிறான். அப்பெரு நிலையைப் பெறுதற்கே ஆத்ம சாதகன் முயன்று வருகிறான். இக்கோட்பாட்டை **காட்சி அனுமானம் முதல் நானுவிதங்கள் தேர்ந்து** என்று தாயுமானவர் மொழிகின்றார். மூன்று பிரமாணங்களுள் இரண்டைச் சொல்லி மூன்றாவதை முதல் என்னும் சொல்லில் அடக்கி வைத்துவிடுகிறார். முதல் என்னும் சொல்லுக்கு முதலிய என்பது அர்த்தம். கையாளுகிற உபாயங்கள் எல்லாம் இந்த மூன்று பிரமாணங்களுள் அடங்கி விடுவதால் நானுவிதங்கள் தேர்ந்து எனவும் அவர் சொல்லியிருக்கிறார்.

மனிதன் செய்கின்ற விசாரங்களுள் தலையாயது 'நான் யார்' என்பது. அதாவது நான் என்னும் சொல்லுக்கு இலக்காயிருப்பது எது? இக்கேள்விக்கு ஆத்ம சாதகன் தக்கவிடை கண்டுபிடிக்கவேண்டும். கடைக்குச்சென்று பலாப்பழம் ஒன்று வாங்கிவருகிறோம். அதன் வடிவம் முழுவதுக்கும் பலாப்பழம் என்று பெயர். ஆனால் உண்ணுதற்கு அது முழுதும் உதவாது. முள்மயமாயிருக்கும் மேல் தோலை உண்பதற்குரியது இது அல்ல என்று புறக்கணிக்கிறோம். அடுத்தபடியாக உள்ளிருக்கும் நரம்புபோன்றவைகளையும் உண்பதற்குரியன இவை அல்ல என்று புறக்கணிக்கிறோம். தசைக்குள்ளேயிருக்கும் கொட்டையையும் அதை மூடிக்கொண்டிருக்கும் தோலையும் புறக்கணிக்கிறோம். சுளையில் உள்ள சதைப்பற்று ஒன்றையே உண்பதற்கு உரியது என்று எடுத்துக்கொள்கிறோம். அதே பாங்கில் 'நான்' என்னும் சொல்

லுக்கு இலக்காயிருப்பவைகளுள் நிலைத்திருப்பது எது என்னும் கேள்வி பிறக்கிறது. உடல்கள் பலவற்றை நான் எடுத்திருக்கிறேன் என்று சொல்லுங்கால் உடல்கள் நான் அல்ல என்பது தேற்றம். மனநிலை நமக்கு ஓயாது மாறியமைந்து வருவதால் மனம் 'நான்' என்னும் சொல்லுக்கு இலக்கு ஆகாது. இப்படியே ஆராய்ந்துகொண்டு போனால் 'நான்' என்னும் சொல்லுக்கு இலக்காயிருப்பது இருபத்து நான்கு தத்துவங்களுள் எதுவும் அல்ல. கடலில் அலைகள் பல இருக்கின்றன. அந்த அலைகளை ஆராய்ந்து பார்த்தால் அவைகள் படைத்துள்ள வடிவங்கள் நிலைபேறு உடையவைகள் அல்ல. வடிவத்தை நீக்கிவிட்டால் பிறகு அலை என்கின்ற பெயரும் போய்விடுகிறது. அலை என்னும் வியக்தி வெறும் தோற்றம். கடல் என்னும் சொரூபம் யாண்டும் உள்ளது. அதேவிதத்தில் 'நான்' என்னும் சொல்லுக்கு இலக்காயிருக்கின்ற பஞ்ச பூதத்தின் வடிவங்கள், மனம், புத்தி, அகங்காரம் முதலிய அந்தக்கரண விருத்திகள் ஆகிய யாவும் அடிபட்டுப்போய் விடுகின்றன. அவைகளுக்குத் தோற்றத்தளவில் வியக்தியைக் கொடுத்துக்கொண்டிருந்த ச்சச்சிதானந்தம் ஒன்றுதான் எஞ்சியிருக்கிறது. பரமானந்தப் பெருநிலையை உள்ளபடி அடைந்து விடுங்கால் 'நான்' என்னும் வியக்தி மறைந்து போய்விடுகிறது. இந்த ஜீவபோதத்தை அழித்துவிட்டுப் பரபோதத்தில் நிலைத்திருப்பதே வாழ்க்கையின் குறிக்கோள் ஆகும். இக் கோட்பாட்டை **நான் நான் எனக்குளறு படை புடை**

**பெயர்த்திடவும்** என்று தாயுமானவர் சொல்லுகிறார். குளறுபடை என்பதற்கு குளறுபாடு அல்லது சொல் தடுமாற்றம் என்பது அர்த்தம். புடை பெயர்த்திடல் என்னும் சொல் இருக்கும் இடம் தெரியாது அறவே தகர்த்தெறிதல் என்பதாகிறது. மனிதன் தனது ஜீவ வியக்தியைக் கட்டவிழ்த்து விடுவதே ஆத்ம சாதனத்தின் குறிக்கோள் எனப் பகரப்பட்டுள்ளது.

'நான்' என்னும் ஜீவபோதத்தை அகற்றுதற்கு சாதனங்கள் பல இருக்கின்றன. அவைகளுள் ஞான நெறிக்கே உரியவைகள் சில. **நான்கு சாதனமும் ஓர்ந்திட்டு** என்று அந்த நான்கையும் தாயுமானவர் வகைப்படுத்துகிறார். அந்த நான்கு சாதனங்களுக்குச் சாதனச் சதுஷ்டயம் என்று பெயர். நித்திய அநித்திய வஸ்து விவேகம் நான்கு சாதனங்களுள் முதலானது. மக்களுள் விவேகம் படைத்தவன் யார் என்னும் கேள்விக்கு ஈண்டு விடை கிடைக்கிறது. கடவுள் ஒருவர்தான் யாண்டும் நிலைத்துள்ள நித்திய வஸ்து என்றும் ஏனைய யாவும் காலதேச வர்த்தமானத்தில் அடிபட்டுப் போய்விடுகின்றன என்றும் யார் ஒருவன் மனத்தெளிவை அடைகிறானோ அவனே விவேகம் படைத்தவன் ஆகிறான். நூல்கள் பல கற்றிருப்பவனை வாசா ஞானி என்று சொல்லலாம்; விவேகி என்று சொல்லலாகாது. இந்த விவேகம் யாருக்கு வந்திருக்கிறதோ அதற்கேற்றவாறு அவனுடைய வாழ்க்கையே மாறியமைந்து விடுகிறது. அது எப்படி மாறியமைகிறது என்று பார்ப்போம். இம் மண்ணுலகில் எப்

பொருளிடத்திலும் எப்பதவியினிடத்திலும் அவன் மோகம் கொள்ளுவதில்லை. விண்ணுலகம் என்று சொல்லப்படுகின்ற சொர்க்க வாழ்க்கையில் அமைந்துள்ள சுகங்களிலும் அவன் பற்றுதல் வைப்பதில்லை. அதற்காகவென்று அவன் முயற்சி எடுத்துக்கொள்ளுவதும் இல்லை. 'வானேயும் பெறில் வேண்டேன், மண்ணுள்வான் மதித்துமிரேன்' என்று மாணிக்க வாசகர் பகர்கிறார். இத்தகைய மனநிலைக்கு இகாமுத்திர பலபோகவிராகம் என்று பெயர். இம்மையிலும் மறுமையிலும் வினைப்பயனாக அமையும் இன்பத்தில் பற்றற்றநிலை என அது பொருள்படுகிறது. எனவே நல்ல விவேகமுடையவனுக்கு வைராக்கியம் அல்லது பற்றற்றநிலை தானாக வந்து அமைகிறது. நான்கு சாதனங்களுள் இது இரண்டாவது சாதனமாகிறது. ஸம தமாதி ஷட்குண சம்பத்தி என்பது மூன்றாவது சாதனம். ஷட்குண சம்பத்தி என்பதற்கு சிறந்த ஆறு நல்ல இயல்புகள் என்பது பொருள். அந்த ஆறும் வருமாறு: ஸமம் என்பது மனதை நடுநிலையில் வைத்திருப்பதாம். தமம் என்பது புறவுலகிலுள்ள பொருள்களை நாடி மனது போகாது இருக்கும் நிலையாம். மூன்றாவது பேரியல்புக்கு உபரதி என்று பெயர். வினைப்பற்று எதும் உண்டாகாத நிலையைப் பெற்றுள்ள ஆத்ம சாதகன் உபரதியில் நிலைத்திருப்பவன் ஆகிறான். நான்காவது நல்லியல்பு திதிக்ஷை. இயற்கை நடைமுறையின் விளைவாக வந்தமைகின்ற விலக்கமுடியாத சில துன்பங்களைப் பொறுமையுடன்

எவன் சகித்துக்கொள்கிறானோ அவன் திதிக்ஷையில் நிலைபெற்றவன் ஆகிறான். ஐந்தாவது சம்பத்து சமாதானம் என்னும் பெயர் பெற்றுள்ளது. மனது நடு நிலை பிறழாது இருக்குமிடத்து அது சமாதானம் அடையப்பெற்றதாம். ஆறாவது சம்பத்துக்கு சிரத்தை என்று பெயர். யார் ஒருவனுக்குத் தனது நல்வாழ்வி லும் தான் புரிகின்ற ஆத்ம சாதனத்திலும் தனக்கு வழிகாட்டி வருகிற குரு இடத்தும் பூரண நம்பிக்கை யும் ஊக்கமும் இருக்கிறதோ அவன் சிரத்தையை அடையப் பெற்றவனாகிறான். இந்த ஆறு விதமான நல்லியல்புகளும் மனதைப் பண்படுத்துவதற்கு உதவு கின்றன. இவையாவும் சேர்ந்து அமையப் பெற்றிருக் கிற சாதகன் ஞான நெறியில் மூன்றாவது சாதனத்தை நன்கு நிறைவேற்றுபவன் ஆகிறான். இனி, நான்கா வது சாதனமாக அமைந்திருப்பது முமுக்ஷுத்வம். முக்தி அல்லது மோட்சத்தில் நாட்டம் கொண்டிருப் பது என இது பொருள்படுகிறது. முமுக்ஷுத்வத்துக்கு நல்ல விளக்கம் ஒன்றைப் பெரியார் ஒருவர் பகர்ந் துள்ளார். தண்ணீருக்குள்ளே ஒரு மனிதனை அமிழ்த் திப் பிடித்துக்கொண்டால் மூச்சுக்காக அவன் திணறு கிறான். அப்பொழுது வேறு எதையும் அவன் நாடுவ தில்லை. அத்தகைய தீவிரமான நாட்டம் முக்தியில் ஒருவனுக்கு வந்துவிட்டால் அது தலைத்தரமான முமு க்ஷுத்வம் ஆகிறது. பிறகு இடைத்தரம் கடைத்தரம் என்று முமுக்ஷுத்வத்தில் வேறு படித்தரங்களும் இருக்கின்றன. இந்த நான்கு வகைச் சாதனங்களை

முறையாக அனுஷ்டித்து வருகின்றவர்களுக்கு ஞான அனுபூதியைப் பெறுவதற்கான மனபரிபாகம் தானுக வந்தமைகிறது.

படகு ஒன்றைச் செலுத்துதற்கு மாலுமிகள் துடுப்புப்போட்டு அதை உந்தித் தள்ளுகின்றனர். இனி, தங்களுக்கு அனுகூலமாகக் காற்றடிக்கும்போது பாயை விரித்துக் கட்டுவதும் படகைக் கடத்துதற்கு உற்ற உபாயமாகும். அதே பாங்கில் ஆத்ம சாதனங்கள் ஒன்ருெடொன்று முரண்படுபவைகளல்ல ; ஆனுல் அவைகள் ஒன்றுக்கொன்று துணை புரிகின்றன. அப்படித் துணைபுரிகின்ற இன்னும் நான்கு விதமான சாதனங்களைப் பற்றிப் பகரலாம். சரியை, கிரியை, யோகம், ஞானம் என அவைகள் பெயர்பெற்றுள்ளன. முறையான வாழ்க்கை வாழ்கின்ற மனிதன் ஒருவன் நல்லொழுக்கமே வடிவெடுத்தவனுக இருக்கவேண்டும். ஒழுக்கம் ஒன்றே மனிதனுக்கு விழுப்பம் தருகிறது. ஆதலால் மற்ற ஜந்துக்கள் தம் உயிரைக் காப்பாற்றுவது போன்ருே அல்லது உயிரைக் காப்பாற்றுவதைவிட அதிகமாகவோ நன்மகன் ஒழுக்கத்தில் நிலைநிற்க வேண்டும். யார் ஒருவன் ஒழுக்கத்தில் சிறந்து விளங்குகின்ருனே அவன் சரியை என்கின்ற சாதனத்தை முறையாக அனுஷ்டிப்பவன் ஆகிருன். கிரியை என்பது அதற்கு அடுத்தபடியாக நிற்கிறது. தனக்கென்றே கர்மம் செய்வது ஜீவர்கள் அனைவர்க்கும் பொதுவானது. ஆனுல் இது விஷயத்தில் ஆத்ம சாதகன் தனது கருத்தை அறவே மாற்றிக்கொள்ள வேண்டும்.

கடவுளுக்கென்று தொண்டுபுரிகின்றவனே உண்மையாகக் கர்மம் செய்கின்றவன் ஆகிறான். அது அவனைப் பந்த பாசத்தில் ஆழ்த்துவதில்லை. அதற்கு மாறாக உயர் நிலைக்கு அது அவனை எழுப்புகிறது. கடவுளுக்கென்றே கர்மம் செய்தவர்கள் எல்லாம் நல்ல தொண்டர்கள் ஆனார்கள். அந்தச் சாதனத்தை உறுதியாக அனுஷ்டிக்கின்றவன் கிரியையில் மேல்நோக்கிப் போபவன் ஆகின்றான். யோகம் என்னும் சாதனம் அதற்கடுத்தபடியாக வருகிறது. அதற்கு ராஜயோகம் என்பதும் சிவராஜயோகம் என்பதும் மற்ற பெயர்களாம். எட்டு அங்கங்கள் அதில் இருக்கின்றன. ஆதலால் அஷ்டாங்க யோகம் என்றும் அதை அழைப்பதுண்டு. யோகத்தில் உறுதி பெறுமளவு ஒரு மனிதன் தெய்வீகத்தில் நிலைபெறுபவன் ஆகிறான். அதற்கடுத்தபடியாக வருவது ஞானம். தன்னையும் தன் தலைவனையும்பற்றி ஜீவன் உள்ளபடி அறிந்து கொள்ளுமிடத்து அவன் ஞானத்தில் மேல்நிலைக்கு வருகிறான். ஜீவாத்மன் பரமாத்மன் ஆகிய இவ்விரண்டினுள் ஏதேனும் ஒன்றை நன்கு அறிவதே மற்றதை அறிந்துகொள்ளுதற்கு உபாயமாகிறது. படிப்படியாகக் கடவுளை அறிதலே அவரை அடைதற்கு நல்ல சாதனமாகிறது. வீடு ஒன்றில் மாடியை யடைய விரும்புகின்றவன் ஒன்றன்பின் ஒன்றாகப் படிகளில் ஏறி மேலே செல்லுகிறான். படிகளுக்கு சோபானம் என்று பெயர். இக்கருத்துக்களை, **ஆன நெறியாம் சரியையாதி சோபனமுற்று** என்று தாயுமானவர் சொல்லுகிறார்.

அறிந்தோ அறியாமலோ ஜீவர்கள் எல்லோரும் பரத்தை நோக்கிப் பெரும் பயணம் போய்க்கொண் டிருக்கிறார்கள். அதில் அவர்கள் எடுத்துக்கொள்கிற முயற்சியும் மிகப் பெரியது. ஜீவர்கள் எடுத்துக்கொள் கிற முயற்சிக்கு அணுபக்ஷம் என்று பெயர். அதற்குக் கடவுளிடத்திருந்து வருகிற அனுக்கிரகத்துக்கு சம்பு பக்ஷம் என்று பெயர். ஜீவப்பிரயத்தனமும் ஈசுவர கிருபையும் என இரு பகுதிகளாக இவை வகுத்துப் பகரப்படுகின்றன. ஜீவப் பிரயத்தனத்தைச் சிறப் பித்துக் கூறுவார் உளர். அதைப் பொருள்படுத்தாது கடவுளின் கிருபையைச் சிறப்பித்துச் சொல்லுபவர் களும் உளர். இவ்விரண்டுக்குமிடையில் முரண்பாடு காண்கிறவர்களுமிருக்கிறார்கள். இவ்விரண்டையும் ஆங்கிலத்தில் Self help என்றும் Self surrender என்றும் பகர்கிறார்கள். ஒன்று மற்றொன்றோடு முரண் படுகிறது என்பதற்குத் தக்க காரணத்தையும் அவர் கள் எடுத்து இயம்புகிறார்கள். தனக்குத்தானே உதவி செய்துகொள்வதும் தன்னைத் தெய்வத்திடத்து ஒப் படைத்து விடுவதும் எப்படி ஒன்றாகும் என்பது அவர் களுடைய கேள்வி. ஆனால் உண்மையில் இவ்விரண் டுக்குமிடையில் முரண்பாடு கிடையாது. தங்கள் பய ணத்தின் ஆரம்பதசையில் நெடுந்தூரத்துக்கு ஜீவர்கள் சுயப்பிரயத்தனத்தையே உபாயமாகக்கொண்டு மேல் நோக்கிப் போகின்றனர். கல், புல் முதலிய நிலைகளி லிருந்து மானுடர் தேவர் போன்ற நிலைகளுக்கு வரும் பரியந்தம் அவரவர் முயற்சிகளே முகாமைகளா

யிருந்தன. பிறகு ஜீவன் நல்லறிவுபெற்று தனக்கும், தன் தலைவனுக்குமுள்ள தொடர்வை உணர்கின்ற பொழுது தன் முயற்சியெல்லாம் அவன் தன் தலைவனிடம் ஒப்படைக்கிறான். அதற்கு அடைக்கலம் என்று பெயர். ஜீவன் செய்கின்ற முயற்சிகளில் உயர்ந்ததும் ஒப்பற்றதுமாயிருப்பதும் அடைக்கலம். பிஞ்சு இறுதியில் கனியாவதுபோன்று அணுபக்ஷம் என்னும் ஜீவப்பிரயத்தனம் இறுதியில் சம்புபக்ஷம் என்னும் ஈசுவரானுக்கிரகத்தில் பூர்த்தியாகிறது. ஆத்ம சாதகர்கள் அனைவர்க்கும் ஒப்பமுடிந்த அனுபவம் இதுவேயாம். இவ்விரண்டும் இரண்டுவிதமான மனவிருத்திகளாகின்றன. கடலில் உண்டாகும் அலை கடலுக்கு விருத்தி ஆகிறது. மனதில் உதிக்கிற எண்ணம் அதே பாங்கில் விருத்தியென்று அழைக்கப்படுகிறது. விருத்தியை விகல்பம் என்றும் சொல்லலாம். எனது முயற்சியால் நான் முன்னேறி வருகிறேன் என்பது ஒருவித விகல்பம். இறைவனருளால் நான் முன்னேறி வருகிறேன் என்பது மற்றொருவித விகல்பம். இயற்கைக்கு மாயை என்பது மற்றொரு பெயர். இயற்கையின் துணைகொண்டே ஜீவர்களனைவரும் படிப்படியாகப் பெருநிலையை எய்திவருகின்றனர். இயற்கை அல்லது மாயாசக்தி உயிர்களுக்கு அன்னை போன்று இருந்து பேருதவி புரிந்து வருகிறாள் என்பது சாதனத்தில் முன்னேறி இருப்பவனுக்கு விளங்குகிறது. அப்படி இயற்கை புரியும் உதவிக்கு மாயை முதலியன செய்யும் சேவை என்ற விளக்கம் வந்துள்

ளது. மாயா சேவையைப்பற்றி ஆத்ம சாதகர்களுக் கிடையில் முரண்படுகிற இரண்டு கருத்துக்கள் வருவ தையும் காணலாம். அதற்குத் தக்க சான்ருக ஸ்ரீ ராம கிருஷ்ண பரமஹம்ஸரையும் அவருடைய குரு ஆகிய தோதாபுரியையும் எடுத்துக்கொள்ளலாம். மாயா சக்தி என்பது வெறும் மனோகற்பிதம் என்று தோதாபுரி கருதிவந்தார். அவருடைய சிஷ்யராகிய ராமகிருஷ்ண பரமஹம்ஸர் இந்த ஒரு கருத்தில் குருவிடமிருந்து மாறுபட்டார். மாயா சக்தியை அனுக்கிரக முக்தி என்றும், அந்த அம்மையின் அருள் இல்லாவிட்டால் உலகவியவகாரங்கள் செய்து கொண்டிருக்கின்ற பொழுது பிரம்ம ஞானியும் திகைத்துப் போய்விடுவான் என்றும் சிஷ்யர் கருதினர். சில சம்பவங்களுக்குப் பிறகு குரு ஆகிய தோதாபுரி சிஷ்யராகிய ராமகிருஷ்ண ருடைய கருத்தை ஏற்றுக்கொள்ள வேண்டி வந்தது. எனவே சாதன தசையிலிருக்கின்ற ஒருவன் அன்னை பராசக்தியின் அனுக்கிரகத்தை முற்றிலும் நாடியிருப் பது அவசியமாகிறது. இக்கருத்துக்களை யெல்லாம் தொகுத்து, **அணுபக்ஷ சம்புபக்ஷம் ஆம் இரு விகற்பமும் மாயாதி சேவையும் அறிந்து** என்று தாயுமானவர் சொல்லுகிருர்.

மனதை உடையவன் மனிதன் என்னும் கோட் பாடு வந்தது. இயற்கையின் கண் உள்ள அதிசயங் களில் மிகப் பெரியது மனது என்னும் தத்துவம். மனி தன் அடைகின்ற முன்னேற்றத்தை அளந்தெடுப்பது எது? மனதுதான் அதை அளக்கிறது. பின்பு, மனிதன்

அடைகின்ற பிற்போக்கை அளந்தெடுப்பது எது? அதே மனதுதான். சொர்க்கத்திலுள்ள போகங்களை யெல்லாம் புண்ணியம் செய்தவன் அனுபவிக்கிறான். அப்படி அவன் அனுபவிப்பதற்கு மூலகாரணமா யிருப்பது எது? அதே மனதுதான். பாவம் செய்த வன் நரகில் துன்புறுகிறான். அதற்கடிப்படையாய் யிருப்பது யாது? அதே மனதுதான். நான் ஈசுவரானுக் கிரகத்துக்கு முற்றிலும் பாத்திரமாயிருக்கிறேன் என் கின்ற நல்லுணர்வைப் பெறுவதும் அதே மனது. நாள் தோறும் அந்த மனதைப்பற்றிய அனுபவம் நம் அனை வர்க்கும் வருகிறது. ஆனால் நாம் அதை விசாரித்துப் பார்க்காது விட்டுவிடுகிறோம். அயர்ந்து தூங்குகின்ற பொழுது மனது ஒடுங்கிவிடுகிறது. சொப்பனம் அப் பொழுது உண்டாவதில்லை. அந்த நிலையில் ஜீவனுக்கு ஜீவபோதம் அகன்று விடுகிறது. ஜகத் என்று சொல் லப்படும் பிரபஞ்சத்தின் காட்சியும் அப்பொழுது மறைந்துபோய் விடுகிறது. மனம் போனவிடத்து இவையெல்லாம் இல்லாது போய்விடுகின்றன. அந்த நிலையை விளக்கவும் மனிதனுக்கு இயலுவதில்லை. இனி, சமாதி நிலையில் மனதினுடைய விகற்பம் அகன்று போய்விடுகிறது. மனதினுடைய விகற்பம் அற்றவிட்டது காண்போன், காணப்படு பொருள் என்கின்ற பேதமில்லை. ஈசுவரனுக்கும் அவனைக் காண்கின்ற ஆத்மாவுக்கும் இடையில் வித்தியாசமும் இருப்பதில்லை. தூக்கத்தில் வரும் பிரளயத்துக்கு ஒப்பான நிலை அப்பொழுது வந்துவிடுகிறது. அப்படி

யாலும் தூக்கமும் சமாதிநிலையும் ஒன்று என்னும் கேள்வி பிறக்கலாம். பேதங்கள் எல்லாம் அகன்று போவதில் அவை இரண்டும் ஒன்றே. பின்பு தூக்கத்தில் உணர்வு ஒடுங்கிக் கிடக்கிறது. சமாதி நிலையில் உணர்வு பேருணர்வாக அகண்டாகாரமாக விரிவடைந்து இருக்கிறது. அதைத்தான் நிர்விகற்ப சமாதி என்று ஆன்றோர் இயம்புகின்றனர். அந்நிலையை **இரண்டு ஒன்று என்னுமோர் மானத விகற்பமற** என்று தாயுமானவர் சொல்லுகிறார்.

இந்த மனதை வெல்லுவதுதான் வெற்றிகளைத்திலும் மேலானது. மனதைத் தூயதாக்குதல் பிறகு அதை வென்றுவிடுதல் வாழ்க்கையின் முடிவான குறிக்கோள். அதுதான் முடிவான நிலை யென்பது ஆத்ம பரிபாகம் அடையாதவர்களுக்கு விளங்காது. குரு சிஷ்ய பரம்பரை ஒவ்வொன்றுக்கும் சம்பிரதாயம் ஒன்று இருந்து வருகிறது. திருமூலருடைய மரபில் வந்தவர் தாயுமானவருடைய குரு ஆகிய மௌனகுரு. அவரிடமிருந்து தங்கள் பரம்பரையின் முடிவான இலட்சியம் இன்னது என்பதை தாயுமானவர் தெரிந்து கொண்டார். அப்படித் தெரிந்து கொண்டதை **மானத விகற்பமற வென்று நிற்பது நமது மரபு என்ற பரம குருவே** என்று தாயுமானவர் அழைக்கிறார். இக்கருத்துக்கள் யாவும் மேலே சொன்ன பாடலில் அடங்கப் பெற்றுள்ளன.

---

## மௌனகுரு வணக்கம் - 6

கல்லாத அறிவுமேற் கேளாத கேள்வியுங்
கருணைசிறி தேதுமில்லாக்
காட்சியும் கொலைகளவு கட்காமம் மாட்சியாக்
காதலித் திடுநெஞ்சமும்
பொல்லாத பொய்ம்மொழியும் அல்லாது நன்மைகள்
பொருந்துகுணம் ஏதும்அறியேன்
புருடர்வடி வானதே யல்லாது கனவிலும்
புருடார்த்தம் ஏதுமில்லேன்
எல்லா மறிந்தநீ யறியாத தன்றெனக்
கெவ்வண்ணம் உய்வண்ணமோ
இருவினையிரு ளென்றவர்க் கொளிதா ரகம்பெறும்
எனக்குநின் னருள்தாரகம்
வல்லா னெனும்பெய ருனக்குள்ள தேயிந்த
வஞ்சகனை யாளநினையாய்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

*கல்லுதல் என்னும் சொல்லைப் பூமியைக் கிளறு தற்கும், அறிவைத் தீட்டுதற்கும் கையாளலாம். நிலத்தில் சத்து இருக்கிறது. அதில் வளர்ந்துவரும் மரம் செடி கொடிகளுக்கு நிலத்திலுள்ள சத்து அல்லது பூசாரம் பயன்பட்டு வருகிறது. ஒரு தோட்டத்தில் பழமரங்களிருந்தன. நாளடைவில் அம்மரங்கள் தந்த பழங்கள் வண்ணத்தில் சிறுத்துப் போய்விட்டன. மரங்களுக்கு வயது முதிர்ந்துவிட்டதுஎன்று சொந்தக்*

காரன் முடிவு கட்டினுன். ஆனுல் அத்தோட்டத்தைப் பார்க்க வந்தவன் ஒருவன் நிலத்தைக் கிளறிவிடும்படி சொன்னுன். அப்படிச் செய்ததும் அடுத்த வருஷம் பழங்கள் வண்ணத்தில் பெரியவைகள் ஆய்விட்டன. நிலத்தைக் கல்லுதற்கும் கனிகள் பெரியவைகள் ஆவதற்கும் என்ன தொடர்வு என்று சொந்தக்காரன் வியப்படைந்தான். உண்மையில் தொடர்வு உண்டு. நிலத்தைக் கல்லுமளவு அது புதிய சாரத்தைக் காற்று, வெயில், நீர் முதலியவைகளிடமிருந்து வாங்கிக் கொள்ளுகிறது. பூமியைக் கற்றதனுலாய பயன் அதில் நல்ல விளைவை உண்டுபண்ணுதலாம். மக்களாகிய நாம் இயல்பாக அறிவு படைத்தவர்கள். இந்த அறிவை மிகக் கூரியதாகும்படி தீட்ட நமக்கு இயலும். பூமியினின்று வைரத்தைத் தோண்டி எடுக்கிருேம். அதில் பட்டை போடுமளவு அதற்குப் பிரகாசம் அதிகம் உண்டாகிறது. முறையாகக் கல்வி கற்பதனுல் அறிவு நுண்ணறிவு ஆகிறது. ஆனுல் முறையாகக் கல்வி கற்க எல்லார்க்கும் இயலுவதில்லை. நூல்கள் பல கற்பது முறையான கல்வி ஆய்விடாது. ஒரே ஒரு நூலை மனிதன் முறையாகக் கற்பானுகில் அதினின்றே அவனுக்கு நுண்ணறிவு வந்துவிடக்கூடும். இதற்குச் சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். சென்ற நூற்ருண்டில் வங்காளத்தில் ஈசுவர சந்திர வித்யாசாகர் என்ற மகாபண்டிதர் ஒருவர் இருந்தார். வித்யாசாகர் என்னும் சொல்லுக்குக் கல்விக்கடல் என்பது பொருள் ஆகும். அவருக்குப் பெயர் மட்டும் வித்யாசாகர்

என்று அமைந்ததல்ல. உண்மையாகவே அவர் கல்விக் கடலாயிருந்தார். அப்பெரும் படிப்பாளியை ராம கிருஷ்ண பரமஹம்ஸர் சென்று பார்த்தார். அவ்விரு வருக்குமிடையில் பரம்பொருளைப் பற்றிய பேச்சு நிகழ்ந்தது. "பரம்பொருள் ஒருவர்தான் எச்சில் படாதவர். ஏனென்றால் மனிதன் தன்னுடைய நாவால் அதை விளக்கமுடியா" தென்று பர்மஹம்ஸர் பகர்ந்தார். ஈசுவரசந்திர வித்யாசாகர் அதைக்கேட்டுத் திகைத்துப் போய்விட்டார். "சிறந்த கோட்பாடு. இதை நான் எந்த நூலிலும் கற்கவில்லை" என்றார் அவர். "அறிவை முறையாகத் தீட்டுகிறவர்களுக்கு இவ்வுண்மை பிறரால் ஓதப்பெறாது விளங்கும்" என்று பரமஹம்ஸர் மேலும் பகர்ந்தார். அதுதான் நாம் செய்யக்கிடக்கும் கடமையாகும். நூல்களிலி ருந்து புள்ளி விவரங்களை ஏராளமாகச் சேகரிப்பது கல்வியல்ல. கற்ற கோட்பாட்டை ஓர்மைப்படுத்தி அறிவை நுண்ணியதாக்குவதுதான் கல்வியின் பயன். பெரும்பாலார்க்கு அப்படி அறிவைத் தீட்டத் தெரிவ தில்லை. விஷயங்களை மூளையில் திணித்து அதை ஒரு தலைச் சுமையாகச் சுமந்து திரிகின்றனர். அதனால் அறிவு தெளிவு அடைந்து விடாது. தெளிந்த அறிவு தமக்கு இன்னும் வரவில்லை என்பதைத் தாயுமானவர் **கல்லாத அறிவும்** என்று குறிப்பிடுகிறார்.

கற்பதிலும் சிறந்தது கேட்பது. ஆதலால் 'கேள்வி முயல்' என்னும் கோட்பாடு வந்துள்ளது. ஆனால் எத்தனையோ பேர் நூல்கள் பல கற்றும்

கல்லாதவர்களாக இருப்பதுபோன்று கேட்கத்தெரி யாதவர்களாகவும் அன்னவர்கள் இருந்துவருகின்றனர். மண்ணில் மரம் செடி கொடிகள் வளர்ந்துவருகின்றன. வெயில், மழை, காற்று ஆகியவைகளோடு தொடர்பு கொள்ளுவதால் அம்மரம் செடிகொடிகள் உறுதிபெறு கின்றன. காற்றில் அசைந்து அசைந்து அவைகளுக்கு வலிவுவருகிறது. வெயிலை ஏற்று அவை திட்பம்பெறுகின் றன. நீரை வாங்கி அவைகள் வளர்கின்றன. அதே விதத்தில் மனிதன் மற்றவர்களிடமிருந்து கேட்டுத் தெரிந்துகொள்ள வல்லவனுகுமளவு அவன் அறிவு நுட்பம் படைத்தவன் ஆவான். மக்கள் ஒருவரை ஒரு வர் சந்திக்கின்றனர். ஆனால் யாரிடத்திலிருந்து எதைக் கேட்டுத் தெரிந்துகொள்ளுதல் என்பது பலர்க்கு விளங்குவதில்லை. எப்படிக் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும் என்பதற்கும் ஈண்டு சான்று ஒன்று எடுத் துக்கொள்ளலாம். பரஞானத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸருக்கு நிகராயிருந்தார் அவருடைய சிஷ்யர் பிரம்மானந்த சுவாமிகள். பரமஹம்ஸருக்கு நூலறிவு கிடையாது. பிரம்மானந்த சுவாமிகளுக்கும் நூலறிவு மிகச்சொற்பம். ஸ்ரீ ராமகிருஷ்ணமடத்திற்கு அவர் முதல் தலைவர் ஆனார். அவரைப் பார்க்கப் பலதரப் பட்ட மக்கள் வந்துகொண்டிருந்தனர். அவர்களை யெல்லாம் பிரம்மானந்த சுவாமிகள் நன்கு பயன்படுத் தினர். டாக்டர் ஒருவர் வந்தால் மருத்துவ விஷயத் தையே அவருடன் பேசிப் பல உண்மைகளைக் கேட்டுத் தெரிந்துகொள்வார். வக்கீல் ஒருவர் வந்தால் வியவகார

விஷயங்களைக் கேட்டுத் தெரிந்துகொள்வார். எஞ்ஜினீயர் ஒருவர் வந்தால் வீடுகட்டும் விஷயத்தை அவரிடமிருந்து கேட்டுத் தெரிந்துகொள்வார். இங்ஙனம் அவருக்குப் பலதுறைகளில் பொது அறிவு ஏராளமாய் உண்டாயிருந்தது. வந்தவர்களுள் கடவுளைப்பற்றிய விஷயத்தைப் பிரம்மானந்த சுவாமிகளிடமிருந்து கேட்டுத்தெரிந்துகொண்டவர்கள் மிக மிகச் சிலரேயாம். ஏனென்றால் கேட்கத்தெரியாமையே அவர்களிடத்திருந்த குறைபாடு ஆயிற்று. கேட்கத் தெரிந்திருந்தது பிரம்மானந்தசுவாமிகளிடத்திருந்த நிறைநிலையாயிற்று. ஆன்றோர்களைக் கேட்குமளவு அவர்களிடத்திருந்து ஞானப் பொக்கிஷத்தை நாம்பெறலாம். தாம் அப்படிக் கேட்டுத்தெரிந்துகொள்ளவில்லையே என்ற ஏக்கத்தை **மேல் கேளாத கேள்வியும்** என்று தாயுமானவர் முறையிடுகின்றார்.

காண்டல், உயிர்வகைகளுக்கு அமைந்துள்ள நுகர்ச்சிகளுள் தலையாயது ஆகும். பார்த்தல் என்பது அதற்கு மற்றொருபெயர். பார்க்கும் செயல் அலாதியாகக் கண்ணுக்கே உரியது. ஆனால் அச்செயலை ஏனைய பொறிகளும், உள்ளமும் செய்கின்ற செயல்களோடு இணைத்துவைக்கலாம். கண்கொண்டு அதைப் பார் என்கிறோம். பிறகுகாதால்கேட்டுப்பார், கையால் தொட்டுப் பார், நாவால் சுவைத்துப்பார், மூக்கால் முகர்ந்துபார், உள்ளத்தில் உணர்ந்துபார் என்றெல்லாம் இயம்புகிறோம். எனவே காண்டல் அல்லது பார்த்தல் விஷய நுகர்ச்சிகளுள் முதன்மை பெறுகிறது. உலகை நாம்

காண்கிறோம். அதை நாம் எப்படிக் காண்கிறோம் என்பது முக்கியமானது யாண்டும் துன்பப்பட்டுக்கொண்டிருக்கிற ஒருவன் உலகைத் துன்பம் நிறைந்ததாகக் காண்கிறான். எப்பொழுதும் களிபேறு உடையவனாக இருப்பவன் உலகை இன்பத்துக்கு இருப்பிடமாகக் காண்கிறான். கெட்டவன் உலகில் கேடு நிறைந்திருப்பதாகக் காண்கிறான். துஷ்டன் ஒருவன் உலகுக்குத் துன்பத்தை விளைவித்து உலகமடைகிற துன்பத்தில் தான் இன்பம் அடைகிறான். ஒவ்வொரு மனிதனும் அவனவன் படைத்துள்ள மனநிலைக் கேற்றபடியே உலகைக் காண்கிறான். நல்லறிவு படைத்திருப்பவனுக்கு உயிர்களுக்கிடையிலுள்ள ஒற்றுமை விளங்குகிறது. தன்னுயிர்போன்றது மன்னுயிர் என்னும் நல்லறிவு அவனுக்கு வருகிறது. தன்னையே நேசிப்பது போன்றும் தன்னை நல்ல நிலைக்குக்கொண்டுவர முயலுவதுபோன்றும் மன்னுயிர்களையும் அவன் நேசிக்கிறான். மன்னுயிர்களுக்கு நலத்தை விளைவிக்கவும் அவன் முயலுகிறான். பிற உயிர்களுக்கு நலத்தை விளைவிக்க நாம் செய்கின்ற முயற்சிக்குக் கருணை என்று பெயர். பிற உயிர்களுக்கு நாம் எதை எடுத்து வழங்குகிறோமோ அதுதான் பிறகு நமக்கும் சொந்தமாகிறது. பிற உயிர்களுக்கு நலத்தையே வழங்குதல் நாம் நலம் பெறுவதற்கு உற்ற உபாயம். நலத்தை வழங்குகின்றவனே கருணைபடைத்தவன் ஆகின்றான். பிற உயிர்களைக் கருணையுடன் பார்த்து அவைகளுக்கு நலனை வழங்குகின்ற நல்லியல்பு தமக்கு இன்னும் வந்து

வாய்க்கவில்லையே என்பதைக் **கருணை சிறிதேனுமில் லாக்காட்சியும்** என்று தாயுமானவர் முறையிடுகின்றார்.

மேன்மையடைய விரும்புகிற மனிதன் ஒருவ னிடத்து கல்வி, கேள்வி, கருணை ஆகிய இந்த மூன்று வாய்ப்புகளும் இருந்தே ஆகவேண்டும். இவையமை யாது போய்விடுமிடத்து மனிதன் மேன்மையடைவ தில்லை. ஆனால் அவன் கீழோன் ஆய்விடமாட்டான். சமுதாயத்துக்குப் பொருந்தாத மனிதனும் ஆய்விட மாட்டான். தாயுமான சுவாமிகள் சன்மார்க்கத்தில் மேல் நிலைக்கு வந்தவர். ஆத்ம சாதனங்களை ஆழ்ந்து பழகியவர். பொதுவாக உலகில் காணும் நன்மக்களை விட வெகுதூரம் மேல் நிலைக்குப் போனவர். இறைவ னிடத்து இரண்டறக் கலத்தல் என்னும் பெரிய பேறுக்கு ஆழ்ந்து முயன்று கொண்டிருந்தவர். அத் தகையவர் **கொலை களவு கள் காமம் மாட்சியாக காத லித்திடு நெஞ்சமும்** தம்மிடத்து இருக்கின்றனவென்று பகர்வது பொருந்துமா? இக்கூற்று உண்மைக்கு ஒத்த தாகுமா? ஒவ்வாததெனின் தம்மைத் தாமே அவர் சிறுமைப்படுத்திக் கொள்வது முறையா ? இது போன்ற கேள்விகளை நாம் கேட்கலாம். இக்கேள்வி களுக்குத் தக்க விடை பெற்றாக வேண்டும். எப் பொழுதும் பெரியோர்கள் தம்மைத்தாமே கண்டிக்கிற முறையில் மதிப்புப்போட்டுக் கொள்கிறார்கள். தங்க ளிடத்துள்ள பெருமை மலையளவு பெரியதாயிருந்தால் அதைக் கடுகு போன்றதாகக் கருதி அதில் செருக் குறுவதில்லை. அதற்கு மாறாக கடுகளவு கேடு அவர்

களிடத்திருக்குமாகில் அதை மலைபோன்றதாக அவர் கள் உணருகிறார்கள். அக்கேடுகளை நீக்குதற்கும் உற்ற உபாயங்களை அவர்கள் கையாளுகிறார்கள். இனி, கொலை என்னும் சொல் சாதாரண உலக மகன் ஒருவ னுக்கு ஒரு போக்கில் பொருள்படுகிறது. சான்றோர் ஒருவருக்கு வேறொரு போக்கில் அது பொருள்படு கிறது. ஒரு மனிதன் மற்றொரு மனிதனை வெட்டி உயிர் வாழத் தகுதியற்ற நிலைக்குக் கொண்டுவந்து விட்டால் அது கொலை என்று உலகத்தவர்களால் கருதப்படுகிறது. பின்பு, பிறரைக் குறித்துக் கெட்ட எண்ணம் ஒன்று எண்ணிவிட்டால் அதைக் கொலைச் செயல் என்று பெருமக்கள் பொருள்படுத்துகின்றனர். பிறர்க்குரிய பொருளைக் கன்னமிட்டோ, அல்லது வேறு போக்கிலோ அபகரித்துக் கொண்டால் அதைக் களவு என்று சாதாரண மக்கள் கருதுகின்றனர். தன் உடல் வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள் களைத்தான் சான்றோர்கள் தேடிக்கொள்கின்றனர் அல்லது வலிய வந்தால் ஏற்றுக் கொள்கின்றனர். தேவைக்குமேல் ஒரு சிறிதளவாவது பொருள் படைத் திருந்தால் அல்லது உணவையாவது ஏற்றுக்கொண் டால் அதைக் களவு என்று மேலோர் பொருள் படுத்துகின்றனர். மயக்கத்தை உண்டுபண்ணுகின்ற மதுவர்க்கங்களைக் கள் என்று உலகத்தவர் கருதுகின்ற னர். விவேகமே படைத்திருந்து கடவுள் நாட்டம் கொள்ளுதல் தெளிந்த நிலை என்றும், சிறிதளவாவது அவிவேகத்துக்குட்பட்டு பிரபஞ்ச மயக்கத்துக்கு உட்

படுகிற மனிதன் 'கள்' உண்டு மயக்கம் கொண்டவனுக்கு ஒப்பாகிறான் என்று அவர்கள் நினைக்கிறார்கள். ஆகவே மேலோருடைய கருத்துப்படி கள் உண்ணுமலேயே கள் உண்ட நிலையில் உலக மக்களில் பெரும்பான்மையோர் இருக்கின்றனர். காமம் என்பது உடலைப் பற்றியுள்ள நோய். சந்தான விருத்தியை உண்டுபண்ணுவதற்காக உண்டாகும் ஒருவித உணர்வுக்குக் காமம் என்று பெயர். ஆண்பால், பெண்பால் ஆகிய இருபாலாரும் கொள்ள விரும்புகிற உடல் நுகர்ச்சிக்கு அப்பெயர் வந்துள்ளது. பெருநிலையையடைய விரும்புகின்ற பெரியோர்கள் அந்நோய்க்கு இடந்தரலாகாது. யாண்டும் உடலை மறந்த நிலையில் அவர்கள் இருந்து பழகுகின்றனர். அத்தகையவர்களுக்குத் தங்கள் சொந்த உடலைப்பற்றிய ஞாபகம் வந்துவிட்டால் அதை அவர்கள் காமநோய் என்கின்றனர். நம் நிழலைப் பற்றி நாம் நினைப்பதில்லை. அங்ஙனம் சான்றோர் தங்கள் உடலைப்பற்றி நினைப்பதில்லை. அதை நினைக்குந்தோறும் அது காம நோய்க்கு ஒப்பானதென்று அவர்கள் கருதுகின்றனர். இத்தகைய சிறுமைகளைப் பெருமைகளாக எண்ணி அவைகளிடத்து வாஞ்சை வைக்கும் நிலையைத் தாயுமானவர் ஈண்டு நன்கு படம் பிடித்துக் காட்டுகிறார். தமது நெஞ்சத்தை விட்டு அச்சிறுமைகளெல்லாம் அகன்று போவதற்கு மாறாக பெருமைகள் போன்று அவைகள் நிலைபெற்றிருக்கின்றனவென்றும் அவர் குறை கூறுமிடத்து அவர் கொண்டுள்ள சீரிய சன்மார்க்கத்துக்கு

அவரே அளவையாகின்ருர். கேடு அனைத்தும் நீங்கப் பெற்ற பரிபூரண நிலை தமக்கு இன்னும் வாய்க்க வில்லை என்பது அவர் கருத்து ஆகும்.

சத்தியம் சீலங்களுள் சிறந்தது. 'சத்திய மேவ ஜயதே' என்பது இக்காலத்தில் நம்முடைய தேசீய ஆட்சிக்குரிய லக்ஷியம் ஆகும். பின்பு 'சத்தியமேவ ஜயதே' என்பது மறைமொழி. ஆதலால் எக்காலத் துக்கும் அதுதான் உண்மை. சத்தியத்தை நன்கு கடைப்பிடிப்பவன் உலக வாழ்க்கையில் வெற்றியடை வான். சத்திய விரதத்துக்கு நிகரான தபசு இல்லை. சத்தியத்தில் உறுதியாக நிற்பவன் சத்சொரூபமாகிய பரம்பொருளையடைந்து விடுகின்ருன். சத்தியத்தின் பெருமை அவ்வளவு பெரியதாகவிருக்க **பொல்லாத பொய்ம் மொழியும் அல்லாது நன்மைகள் பொருந்தும் குணமேது மறியேன்** என்று தாயுமானவர் பகர்வது விந்தைக்குரியதாக இருக்கிறது. நீதி மன்றங்களில் வழக்காடுகின்றவர்கள் பொய்ம்மொழி பேசுவது போன்று அவர் பேசியவர் அல்லர். பொருளைப் பெரு மிதமாகச் சேகரிக்க விரும்புகின்றவர்கள் பேசுவது போன்று அவர் பொய்ம்மொழி பேசியவரல்லர். சிறு நெறியில் செல்லுதற்கிடையில் பெருநெறியில் செல்லு வது போன்று பாசாங்கு செய்கின்றவர்கள் பேசுவது போன்று அவர் பொய்ம்மொழி பேசியவரல்லர். பிறகு தாம் பொய்ம்மொழி பேசியதாக எச்செயலைக் குறித்து அவர் தம்மையே நொந்து கொள்கிருர் என்பதை ஆராய்ந்துபார்க்க வேண்டும். கானல் நீர்தென்படுகிறது.

அது பருகுதற்குரிய நன்னீர் என்று பகர்வது பொய்ம் மொழி. நமக்கு இவ்வுலகம் தென்படுகிறது. இது நிலையானது என்று கருதி இதில் பற்றைப் பெருக்குதற்கான சொற்களெல்லாம் பொய்ம்மொழியாகும். கடவுளைக் குறித்து வருகிற சொற்களே மெய்ம்மொழிகள் ஆகும். தாம் எப்பொழுதெல்லாம் உலகத்துக்கு ஒரு மதிப்புக்கொடுத்து அதைப்பற்றிப் பேசினாரோ அப்பொழுதெல்லாம் தாம் பொய்ம்மொழி பேசி விட்டதாக அவர் வருந்தலானார். மனிதனைக் கடவுளுக் கருகில் கொண்டு சேர்க்கும் செயல்கள் எல்லாம் நன்மைகள். அதற்கேற்ற சீரிய மனப்பான்மை படைத்திருப்பது பொருந்தும் குணமாகும். இத்தகைய மேன்மைகள் தம்மிடத்து இன்னும்உறுதியாக அமையவில்லை என்று அவர் இயம்புகிறார்.

உயிர் வகைகளுள் மிக விந்தையானவன் மனிதன். மற்ற உயிர்களை மதிப்புப் போடுவது எளிது. ஆனால் மனிதனைப்பற்றி உறுதியாக ஒன்றும் சொல்லமுடியாது. நாய் ஒன்று இருக்கிறது. அதை நாய் என்றே நாம் அறிகிறோம். நரியை நரி யென்றே பொருள் படுத்துகிறோம். காட்டில் புலிகள் பல வசிக்கின்றன. அவைகளுள் எதைப் பார்த்தாலும் புலியென்றே பொருள்படுத்துகின்றோம். புலியின் பாங்கு அவை யாவுக்கும் பொதுவானது. நச்சுப்பாம்புகள் பல இருக்கின்றன. அவைகளை விதவிதமாக நாம் மதிப்புப் போடுவதில்லை. பின்பு அமிழ்து அன்ன நல்ல பாலைத் தரும் பசுக்களையெல்லாம் ஆவினத்தைச் சேர்ந்தவை

கள் என்றே வகைப்படுத்துகிறோம். ஆனால் மனிதனைப் பற்றி நாம் ஒரே முடிவுக்கு வருவது பொருந்தாது. எல்லோரையும் வடிவத்தில் மாந்தரென்று மொழிந்து விடலாம். ஆனால், தன்மையிலோ உலகில் எத்தனை மாந்தர்கள் இருக்கின்றார்களோ அத்தனைவிதப் பாங்கு களைக் காணலாம். மானுட வடிவத்தில் நாய் ஒன்று பிறவியெடுத்து இருக்கலாம், நரியும் அங்ஙனமே செய் திருக்கலாம்; புலி மானுட வேடம் தாங்கி வந்திருக்க லாம், நச்சுப்பாம்புகள் நன்மகன் போன்று வெளி வேஷம் தாங்கி வந்திருக்கலாம், பசுக்களும் மக்கள் வடிவத்தில் வருவது சாத்தியம். இனி மக்களே மக்கள் வடிவத்திலும் வருகின்றனர். இதற்கெல்லாம் மேலாக மற்றொரு அதிசயம். விண்ணவர்களும் மானுட வடி வத்தில் மண்ணுலகுக்கு வருவதுண்டு. எனவே மானுட வடிவம் தாங்கியுள்ள உயிர்களெல்லாம் உண்மையில் மானுடர் அல்லர். விதவிதமான உயிர் வகைகளின் தன்மைகளையெல்லாம் மானுடர் உடைத் திருக்கின்றனர். அவர்களுள் உண்மையான மக்கள் யார் என்பதை அறிதற்கு உபாயம் ஒன்றே உளது. புருஷார்த்தங்களென்பவை அலாதியாக மக்களுக்கே உரியவைகளாகின்றன. அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய இந்த நான்கையும் புருஷார்த்தங்கள் என் கின்றோம். இந்த நான்கினுள்ளும் வீடு அல்லது முக்தி மிக மேலானது. முக்தியில் நாட்டம் கொண்டிருப் பவர்களே மக்களுள் தலைத்தரமானவர் ஆகின்றனர். முக்திக்காகவென்று முயலுகின்றவர்களை மேலோர்க

ளென்றே நாம் முடிவு கட்டிவிடலாம். அப்படிச் செய்வதில் தவறுதல் ஒன்றும் விளைந்துவிடாது. தாம் மானுட வடிவத்தில் பிறந்தாய்விட்டது; ஆனால் மனிதன் செய்யவேண்டிய பெரிய முயற்சியாகிய முக்தி மார்க்கத்தில் தமக்கு இன்னும் ஊக்கம் வரவில்லையே என்பதைக் குறித்து **புருடர்வடிவானதே யல்லாது கனவிலும் புருடார்த்தம் ஏதுமில்லேன்** என்று தாயுமானவர் இயம்புகின்றார். நமக்கு உண்டாகும் கனவுகளுக்கு நாம் முற்றிலும் பொறுப்பாளிகள் அல்ல. தற்செயலாய் கனவுகள் நிகழ்ந்து விடுகின்றன. அப்படித் தற்செயலாகவாயினும் தமக்கு முக்தி நாட்டம் வாய்க்கவில்லையே யென்று அவர் வருந்துகிறார்.

மனிதனுக்கு கிஞ்சிக்ஞன் என்று பெயர். அற்ப அறிவு படைத்தவன் என்பது அதன் பொருள். ஆனால் கடவுளோ சர்வக்ஞன். அதாவது அவர் எல்லாம் அறிந்தவராகிறார். ஜீவன் ஒருவனுக்குத் தன்னுடைய முற்பிறப்பைப்பற்றி ஒன்றும் தெரியாது. அதை யெல்லாம் அவன் மறந்துவிட்டான். மேலும் எதிர் காலத்தில் தனக்கு வரக்கூடிய பிறவிகளை அறிந்து கொள்ளவும் அவனுக்கு இயலாது. ஈசுவரனுக்கும் ஜீவனுக்குமிடையிலுள்ள வித்தியாசம் இது. தன்னைப்பற்றி அப்போதைக்கப்போது ஏதோ ஒரு சிறிது அறிந்துகொண்டவனாக ஜீவன் இருக்கிறான். அந்த ஜீவனுடைய முக்கால நிலையும் ஈசுவரனுக்குத் தெரியும். தம்மைப்பற்றித் தாம் அறிந்துகொண்டது மிகக் குறைவு என்பதையும் ஆனால் எல்லாம் ஈசனுக்கு

வெளிச்சம் என்பதையும் **எல்லாம் அறிந்த நீ அறியாத தன்று** என்று அண்ணல் இயம்புகிறார்.

கண்ணில்லாத மனிதன் ஒருவன் ஒரு பாதையில் போகிறான். வழி நெடுக வேறு பல பாதைகள் அதைக் குறுக்கிடுகின்றன. கண்ணில்லாத இம்மனிதன் போய்ச் சேரவேண்டிய இடத்துக்குப் பல பாதைகளில் இங்கு மங்கும் வளைந்து போகவேண்டும். ஆனால் தன் குறியைப் பற்றி அவனுக்கு ஒன்றும் தெரியாது. தான் கையாளுகிற நெறிகளைப் பற்றியும் அவனுக்கு ஒன்றும் தெரியாது. ஆகையால் பல தடவைகளில் தப்பு இழைத்துவிடக்கூடிய நெருக்கடியில் அவன் இருக்கிறான். வேறு ஒரு மனிதனுக்குக் கண் இருக்கிறது. தான் போய்ச்சேரவேண்டிய இடத்தை அவன் நன்கு அறிந்திருக்கிறான். பாதைகளைப் பற்றியும் அவனுக்கு எல்லாம் தெரியும். ஆதலால் தங்கு தடையின்றி தனது குறியை நோக்கி நல்ல நெறிகளில் அவன் போய்க்கொண்டிருக்கின்றான். கடவுளும் அவரை அடையப்பெற்ற ஞான குருவும் கண் படைத்தவர்கள். கண்ணில்லாத மனிதனையும் நல்வழியில் நடாத்த அவர்களுக்கு இயலும். தம்மைக் கண்ணில்லாத மனிதனுடைய நிலையில் வைத்துக்கொண்டு **எனக்கெவ் வண்ணம் உய்வண்ணமோ?** என்று தாயுமானவர் வருந்தி வினவுகிறார். உய்வண்ணம் என்பதற்கு உய்வு அடைவதற்கு வகை என்பது பொருள்.

இருளைப்பற்றிய அதிசயம் ஒன்று உண்டு. அமாவாசை இரவில் காரிருள் வானத்தில் படலம் படல

மாய் மேகம் மூடியிருக்கிறது. அவ்வேளையில் அடர்ந்த அடவியினுள் மனிதன் ஒருவன் அகப்பட்டுக் கொண்டான். எப்பக்கம் கால் வைப்பது என்பதே அவனுக்கு விளங்குவதில்லை. இருளை இருளாகத்தான் அவன் பொருள்படுத்துகிறான். அதே சூழ்நிலையில் ஆந்தை ஒன்று இருக்கிறது. அதற்கு அவ்விருள் பட்டப்பகல் போன்ற வெளிச்சமாக இருக்கிறது. வேண்டுமென்கின்ற மரக்கிளைக்கு அது இனிது பறந்து செல்லுகிறது. அந்த சூழ்நிலையைப் பட்டப்பகல் என்றே சொல்லுகின்ற நிலையில் ஆந்தை இருக்கிறது. மனிதனோ அந்த இருளை இருள் என்றுதான் இயம்பியாக வேண்டும். மின்மினிப் பூச்சி யொன்று ஆங்கு அவனுக்குச் சிறிது வெளிச்சம் கொடுத்தாலும் அது பயன்படும். அந்த நெருக்கடியில் அவனுக்குப் பிரகாசம் வாய்ந்த கை விளக்கு ஒன்று அகப்பட்டால் கண் கிடைத்ததற்கு ஒப்பாகும். ஏதேனும் ஒரு விதத்தில் வனத்தினின்று வெளியேக அவனுக்கு இயலும். அப்படி அவனுக்குக் கை விளக்குக் கிடைத்தது இடுக்கணினின்று விலகிக் கொள்ளுதற்கு நல்ல ஆதாரமாயிற்று. இக்கருத்தை, **இருளை இருளென்றவர்க்கு ஒளிதாரகம்** என்று அவர் இயம்புகிறார். ஒளிதாரகம் என்பது வெளிச்சம் நல்ல ஆதாரமாகிறது எனப் பொருள்படுகிறது.

அலைக்கு ஆதாரமாயிருப்பது கடல். கடலுக்கு அந்நியமாக அலை ஒருபொழுதும் இருக்கமுடியாது. அதே பாங்கில் உயிர்களனைத்துக்கும் ஆதாரமாயிருப்பவர் கடவுள். அவருக்கு அந்நியமாக அவைகள்

எப்பொழுதாவது இருக்க முடியாது. ஆனால் கடவுள் தான் அத்தனை உயிர்களுக்கும் ஆதாரமாயிருக்கிறார் என்பதை உயிர்கள் அறிவதில்லை. மானுடராய்ப் பிறந்திருப்பவர்களுள் யாரோ சிலர்தான் இவ்வுண்மையைச் சிறிது அறிகின்றனர். அதன் பிறகு அவர்களுக்கு அருள் நாட்டம் அதிகரிக்க ஆரம்பிக்கிறது. தங்களுக்கும் கடவுளுக்கு மிடையிலுள்ள தொடர்பை இடையறாது உணர அவர்கள் முயலுகின்றனர். முயற்சிக் கேற்ப ஆத்ம சாதனத்தில் அவர்கள் முன்னேற்றம் அடைகின்றனர். முன்னேற்றமடையுமளவு இறைவனோடு கொண்டுள்ள தொடர்பைப்பற்றிய உணர்வு பேருணர்வாக வடிவெடுக்கிறது. ஆகவே ஆத்ம சாதகர்கள் இறைவனுடைய அருளைப் பெற்று அந்த அருளை ஆதாரமாக வைத்துக்கொண்டு இறைவனிடத்து லயமாகிற முயற்சியில் மேல் நிலைக்குப் போகின்றனர். சாதகர்களனைவர்க்கும் பொதுவாயுள்ள இக்கோட்பாடு தாயுமானவர்க்கும் பொருந்துகிறது. **பெறும் எனக்கு நின்னருள் தாரகம்** என்ற சொற்களில் இக்கோட்பாட்டை அவர் வெளியிடுகிறார். உன் அருளைப் பெறுகிற எனக்கு உன் அருள் தான் அனைத்துக்கும் ஆதாரமாகிறது என்பது இதன் கருத்து. இறைவனுடைய அருளைத் துணையாகக் கொண்டல்லாது ஆத்ம சாதனத்தில் மனிதன் சிறிதேனும் முன்னேற்றமடையான்.

ஈசன் சர்வக்ஞனா யிருப்பது போன்று சர்வசக்திமான் ஆகவும் இருக்கிறார். எல்லாம் வல்லவன் என்

பது அதன் கருத்து. பிரபஞ்சத்திலுள்ள அனைத்தை யும் ஆக்குதல், நிலைபெறச்செய்தல், துடைத்தல் ஆகிய இத்தனையும் செய்யவல்லவனாக சர்வேசுவரன் இருக் கிறார். அவருடைய வல்லமை எத்தகையது என்ப தைப்பற்றிய பேச்சு ஒருதடவை ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸருக்கும்ஒருபக்தருக்குமிடையில் நிகழ்ந்தது. "சர்வேச்வரன் எல்லாம் வல்லவர் எனினும் இயற்கை யினுடைய நியதியை மீறிச்செல்ல அவருக்கே இய லாது" என்றார் அந்த பக்தர். அவருடைய கொள் கையை ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஏற்றுக்கொள்ளவில்லை. "இயற்கையினுடைய நியதியை உண்டுபண்ணியவர் இறைவன். இந்த நியதியையே புதியதொரு பாங்கில் மாற்றியமைக்கவும் அவருக்கு இயலும். சட்டதிட்டங் களை ஏற்படுத்துகிற மனிதனுக்கு அந்தச் சட்டதிட்டங் களைப் புதிய பாங்கில் மாற்றியமைக்கவும் முடியும்" என்றார் ஸ்ரீ ராமகிருஷ்ணர். "இயற்கையினுடைய நடைமுறையை மாற்றியமைக்க கடவுளுக்கே முடி யாது. உதாரணமாக இந்தச் செம்பரத்தைச் செடியில் சிவப்புப் பூ உண்டாகிறது. அதில் ஒரு பூ சிவப்பாகவும் மற்றொன்று வெள்ளையாகவும் வரும்படி மாற்றியமைக் கக் கடவுளுக்கும் முடியாது" என்றார் அப்பக்தர். "அவருக்கு இதுமட்டுமல்ல, எது வேண்டுமென்றாலும் சாத்தியமாகும்" என்றார் பரமஹம்ஸர். அத்துடன் அவருடைய பேச்சு நின்றது சில நாட்களுக்குப் பிறகு பூந்தோட்டத்துக்குள் செம்பரத்தைச் செடி ஒன்றில் ஒரே கிளையில் பக்கம் பக்கமாக வெள்ளைப் பூ ஒன்று,

சிவப்புப் பூ ஒன்று மலர்ந்திருப்பதை ஸ்ரீராமகிருஷ்ணர் கண்டார். அவர் அவைகளைக் கிளையுடன் ஒடித்துக் கொண்டுவந்து பக்தரிடம் காட்டினார். "இந்த அல்பச் செயல் கடவுளுக்கு ஆகாது என்றீர்களே, பாரும் இதோ ஆயிருக்கிறது. அண்டங்களின் நடைமுறையில் இறைவன் வேண்டுமென்கின்ற திட்டங்களைப் புதியது புதியதாக அமைத்து அத்திட்டங்களின்படி அண்டங் களை இயக்க அவருக்கு இயலும்" என்றார் பரமஹம் ஸர். "நான் இனி உங்களோடு வாதாடேன்" என்று சொல்லி அந்த பக்தர் வாளாவிருந்து விட்டார். கடவுள் எல்லாம் வல்லவர் என்பதற்கு ஓரளவு விளக் கம் இதினின்று நமக்குக் கிடைக்கிறது. இக்கோட் பாட்டை **வல்லான் எனும் பெயர் உனக்கு உள்ளதே** என்று தாயுமானவர் சொல்லுகிறார்.

மக்கள் ஓயாது பாடுபட்டுப் பொருள் சம்பாதிக் கிறார்கள். நெடுங்காலம் அப்படி உழைத்துப் பொரு ளைச் சேமித்து வைத்துச் சிறிது சிறிதாக அவர்கள் பணக்காரர்கள் ஆகிறார்கள். அப்படிப் பாடுபடுபவர் களுள் ஒரு சிலர்க்குத் திடீரென்று செல்வம் சேர்ந்து விடுகிறது. இன்னும் சிலர்க்கு அரசன் போன்ற செல்வர்களது நட்பின் மூலம் முயற்சியின்றியே செல் வம் குவிந்து விடுவதுமுண்டு. எனவே மக்களுக்குச் செல்வம் திரளுவதைப்பற்றி ஒரே நியதி இயற்கையில் இல்லை. ஆத்ம சாதனம் செய்கிறவர்களுக்கிடையில் அருள் பேறு உண்டாவது ஒருவிதத்தில் அதுபோன் றது. பல ஜன்மாந்தரங்களில் படிப்படியாகத் தங்

களைப் பக்குவப்படுத்தி அருளுக்குப் பாத்திரமாகிறவர்களுமுண்டு. விரைவில் அருளுக்குப் பாத்திரமாய் விடுகின்றவர்களுமுண்டு. இறைவனுடைய அருளால் திடீரென்று அதைப் பெற்று விடுபவர்களுமுண்டு. எல்லாம் வல்லவனாகக் கடவுள் இருப்பதால் இன்னும் பரிபாகமடையாத ஆத்மாவையும் அவர் சிறிது கருணை வைத்தால் அருளைப் பொழிந்து கடைத்தேற்றி விடலாம். இறைவனுக்கு அது ஒரு பெரிய செயல் ஆகாது. அக்கருத்தை, **இந்த வஞ்சகனை ஆள நீயாய்** என்ற விண்ணப்பத்தில் அவர் அடக்கி வைத்திருக்கிறார்.

மனம் எண்ணத்தையும் உணர்ச்சியையும் அடிப்படையாகக் கொண்டது. எண்ணமும் உணர்ச்சியும் இல்லாதவிடத்து மனதும் இல்லையென்றே மொழியலாம். அயர்ந்து தூங்குகின்றவனுக்கு உணர்வு ஒன்றுமில்லை. ஆங்கு மனது செயலற்றிருக்கிறது. பிறகு அவன் கனவு காண்கிறான். அப்பொழுது எண்ணமும், உணர்வும் வந்து விடுகின்றன. மனதின் செயல் நிகழ்கிறதென்பதே அதன் பொருள். விழித்திருக்கும் வேளைகளிலெல்லாம் மனதுக்கு வேலையுண்டு. அது சதா சங்கல்பித்துக்கொண்டிருக்கிறதென்று சொல்லுகிறோம். எப்பொழுதும் எண்ணிக்கொண்டேயிருக்கிறது என்பது அதன் பொருள்.

மனதை உயர்நிலைக்கு எழுப்பும் எண்ணத்துக்கு மந்த்ரம் என்று பெயர். மனதை உறுதிப்படுத்துவது எதுவோ அது மந்த்ரம். மனதை உறுதிப்படுத்தும் எண்ணங்கள் மக்கள் அனைவரிடத்தும் இருக்கின்றன,

பொதுவாக அவைகளை மந்த்ரங்கள் என்று உலக வழக்கில் இயம்புவதில்லை. உண்மையில் மனதைத் திட்பம் உடையதாக ஆக்குகின்ற எண்ணங்கள் எல்லாம் மந்த்ரங்களேயாம். இனி, மனிதன் அறிந்திராத மந்த்ரங்கள் சில இருக்கின்றன. அவைகள் தெய்வத்தின் நாமங்களாக அமைந்திருக்கின்றன. அத்தகைய நாமங்களை மந்த்ரங்கள் என்று சிறப்பித்துச் சொல்லுகிறோம். எந்த மனிதனுக்கு எந்த மந்த்ரம் பொருத்தமானது என்பதை ஞானகுரு அறிகிறார். அந்த ஞான குருவை நல்ல கிருஷிகன் ஒருவனோடு ஒப்பிடலாம். எந்த மண்ணில் எந்த விதை நன்கு முளைத்துவரும் என்பதை கிருஷிகன் அறிகிறான். எந்த ஆத்ம சாதகனுக்கு எந்த மந்த்ரம் முற்றிலும் பொருத்தமானது என்பதை ஞானகுரு தெளிவுபட அறிகிறார். அத்தகையவரை மந்த்ர குருவே எனத் தாயுமானவர் அழைக்கிறார். இக்கருத்துக்கள் யாவும் மேற்கூறிய பாடலில் அடங்கியுள்ளன.

---

## மௌனகுரு வணக்கம் - 7

கானகம் இலங்குபுலி பசுவொடு குலாவும்நின்
கண்காண மதயானைநீ
கைகாட்ட வுங்கையால் நெகிடிக் கெனப்பெரிய
கட்டைமிக ஏந்திவருமே
போனகம் அமைந்ததென அக்காம தேனுநின்
பொன்னடியில் நின்றுசொலுமே
புவிராசர் கவிராசர் தவராச ரென்றுனைப்
போற்றிசய போற்றிஎன்பார்
ஞானகரு ணாகர முகங்கண்ட போதிலே
நவநாத சித்தர்களும்உன்
நட்பினை விரும்புவார் சுகர்வாம தேவர்முதல்
ஞானிகளும் உனைமெச்சுவார்
வானகமும் மண்ணகமும் வந்தெதிர் வணங்கிடும்
மகிமையது சொல்லஎளிதோ [உன்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

*காட்டில் இலங்கும் விலங்குகளுக்கிடையில் உள்ள வாழ்க்கைமுறை அலாதியானது. 'வலிவு படைத்ததே வாழ்வுக்குரியது' என்னும் ஒரு கோட்பாட்டில் அதை அடக்கிவிடலாம். வலிவில் மேன்மை படைத்திருப்பவைகள் அச்சமற்று வாழ்ந்திருக்கின்றன. ஆனால் வலிவுகுன்றியிருப்பவைகளோ அல்லும் பகலும் அச்சத்திலேயே அழுந்திக் கிடக்கின்றன. எந்த வேளையில் அவைகளுக்கு ஆபத்து என்ன பாங்கில் வந்து அமையு*

மென்று யூகிக்கமுடியாது. கவலையற்ற தூக்கமும் அவைகளுக்கில்லை. தற்பாதுகாப்பிலேயே அவைகள் யாண்டும் கண்ணுங் கருத்துமாயிருந்தாகவேண்டும். ஆனால் அச்சமற்று வாழ்பவைகளுள் புலியை ஒன்றாக எடுத்துக்கொள்ளலாம். சிம்மத்தைக் கானகத்தில் வாழும் சக்கரவர்த்தி என்றால், புலியைக் கானகத்தில் வாழும் சிற்றரசன் எனலாம். கம்பீரமாகக் கவலையற்று அது கானகமெங்கும் நடமாடுகிறது. தென்படும் மற்ற உயிர்வகைகளைத் தாக்கிக் கொன்று தின்று திருப்தியடைந்து வாழ்ந்திருக்கிறது. இனி, பசுவொன்றோ ஒருபொழுதும் கானகத்திற்கு உரியதன்று. ஆனால் மேய்ச்சலின் பொருட்டு அது கானகத்துக்கோ, அல்லது அதன் எல்லைப்புறத்துக்கோ நாள்தோறும் போயாகவேண்டும். அது புல்லை மேய்ந்துகொண்டிருப்பதற்கிடையில் புலியைப் பற்றிய அச்சம் அடிக்கடி அதற்குவந்துவிடும். நாலாபக்கமும் திரும்பிப்பார்த்துக் கொண்டு பயங்கொள்ளியாக அது மேய்ச்சல் காட்டில் அலைந்து திரிகிறது. ஏங்கிருந்தாவது புலியின் உறுமல் அதன் காதுக்கு எட்டினால், அக்கணமே அது அஞ்சி உயிர் துறக்கும் நிலைக்கு வந்துவிடுகிறது. அத்தகைய பரிதாபகரமான நிலையும் காட்டில் வாழ்பவைகளுக்கிடையில் உண்டு. அச்சமூட்டுபவைகள் அச்சப்படுபவைகள் ஆகிய உயிர்வகைகள் வாழ்ந்திருக்கும் இடமாகும் கானகம். இனி, அந்த அடர்ந்த காட்டில் ஏகாந்த வாசம் செய்துவரும் யோகிகளும், ஞானிகளும் இருப்பதுண்டு. அவர்கள் எவ்வுயிர்க்கும் எவ்விதத்

தீங்கும் செய்வது கிடையாது. தாங்கள் யாருக்குமே தீங்கு செய்வதில்லையாதலால் ஏனைய உயிர்கள் தங்களுக்குத் தீங்கு செய்துவிடும் என்கின்ற கவலையோ அச்சமோ அவர்களுடைய உள்ளத்தில் உதிப்பதில்லை. பிறரைத் துன்புறுத்துபவர்களுக்கே பிறரிடமிருந்து தங்களுக்குத் துன்பம் வரும் என்னும் ஐயம் உண்டாகிறது. உயிர்களனைத்தையும் பரம்பொருள் சொரூபமாக எண்ணி வாழ்ந்திருப்பவர்கள் யாண்டும் பரம்பொருள் சந்நிதியிலேயே இருக்கிறார்கள். அவர்களுடைய சீரிய மனநிலை தங்களுக்குமட்டும் பயன்படுவதாக நின்று விடுவதில்லை. சான்றோர்களுடைய முன்னிலைக்கு வரும் மற்ற உயிர்களுக்கும் சாத்வீக குணம் வந்துவிடுகிறது. அஹிம்ஸா தர்மத்திலே உறுதி பெற்றிருக்கும் யோகி ஒருவனுடைய முன்னிலையில் மற்ற உயிர்களும், தங்களுடைய பகைமைகளையும், துஷ்டத்தனங்களையும் ஒதுக்கி வைத்துவிடுகின்றன என்று சாஸ்திரம் சாட்டுகின்றது. ஆதலால் சான்றோர்களுடைய கண்ணெதிரில் உயிரை உயிர் தாக்கும் கொடிய செயலைக் காணமுடியாது. உயிர்கள் ஒன்றை ஒன்று நேசிக்கும் காட்சியையே ஆங்குக் காணலாம். தமது குரு அத்தகைய பரிபூரண நிலையையடைந்தவர் என்று தாயுமான சுவாமிகள் பகர்ந்தருளுகின்றனர். **கானகம் இலங்குபுலி பசுவொடு குலாவும் நின் கண் காண** என்பது அவருடைய வாக்கு. அதை வேறொரு பாங்கில் பகருமிடத்து, தேவரீருடைய முன்னிலையில் துஷ்டத்தனம் வாய்ந்த காட்டு மிருக வேந்தனாகிய புலி, அதைக்

கண்டு அஞ்சுகிற பசு ஒன்றனோடு அன்புடன் கூடி விளையாடும். பசுவும் தன் அச்சத்தைத் தவிர்த்து விட்டு அப்புலியுடன் பிரியத்தோடு கூடி விளையாடும் என்பது அதன் கருத்தாகிறது.

காட்டில் வாழும் விலங்குகளுள் அச்சத்தை அறியாதது யானையும் ஒன்று ஆகும். புலி தனித்து வாழ்ந்திருக்கிறது. யானை தன் இனத்துடன் கூட்டங் கூட்டமாக வாழ்ந்திருக்கிறது. புலிக்கோ, சிங்கத்துக்கோ, காட்டெருமைக்கோ யானைக் கூட்டம் ஒருபொழுதும் அஞ்சாது. ஆனால் அந்த யானைக்கூட்டம் முழுதுக்குமே அச்சமூட்ட வல்லது ஒன்று இருக்கிறது. அது பஞ்ச பூதங்களில் ஒன்ருகிய நெருப்பு. பகல் வேளையில் ஆனாலும் சரி, இரவு வேளையில் ஆனாலும் சரி தீயைக் கண்டால் கானகத்தில் வசிக்கும் புலி, கரடி, யானை, சிங்கம் ஆகிய கொடிய விலங்குகள் அனைத்தும் மருண்டோடி விடும். ஆதலால்தான் காட்டிலே இராத்தங்க வேண்டிய நெருக்கடி மக்களுக்கு ஏற்பட்டுவிட்டால் நான்கு பக்கங்களிலும் தீ மூட்டி வைத்துக்கொண்டு மக்கள் கவலையற்று உறங்குகின்றனர். யானைக்குச் சில பருவத்தில் மதம் பிடிப்பதுண்டு. அப்பொழுது அதன் கொடூரத்தன்மை பன்மடங்கு அதிகரிக்கிறது. தீயினின்று விலகி ஓடுகின்ற பயங்கொள்ளித்தனமும் மதம் பிடித்திருக்கும் வேளையில் அதற்குப் பன்மடங்கு அதிகரிக்கிறது. கானகத்திலே குவித்து வைத்திருக்கும் மரக்கட்டைகளுக்கிடையில் நெருப்புப் பிடித்துக் கொண்டதென்று வைத்துக் கொள்வோம். அல்லது

தீ மூட்டத்தை மக்களே அமைப்பதுண்டு. அத்தகைய நெருப்புக்கு நெகிடி என்று பெயர். நெகிடி ஒன்றனருகில் எக்காரணத்தை முன்னிட்டும் ஒரு யானை அணுகாது. மதயானை ஒன்றுக்கோ நெகிடியைக் கண்டால் அதன் மூர்க்கத்தனம் அதிகரித்துவிடும். பழகிய யானை மனிதனுக்குப் பெருந்துணை புரிகிறது. பெரிய பெரிய மரங்களை அவைகள் வெவ்வேறு இடங்களில் தூக்கி வைக்கின்றன. தன் மனதை முற்றிலும் கட்டியாளுகின்ற யோகி ஒருவனுடைய முன்னிலையில் மதம் பிடித்துள்ள காட்டு யானையும் அமைதியே வடிவெடுத்ததாக நடந்துகொள்ளும். தம் குரு இடத்திலுள்ள அத்தகைய சாத்வீக நிலையைத் தாயுமானவர் எடுத்து இயம்புகின்றார். அவர் பகர்வதாவது:

**மதயானை நீ கை காட்டவும் கையால் நெகிடிக்கெனப் பெரிய கட்டை மிகஏந்தி வருமே.** இது காண்பதற்கரிய காட்சி ஆகும். தன் உயிர் போவதாயிருந்தாலும் எத்தகைய செயலைச் செய்ய யானை அஞ்சிமறுக்கிறதோ அத்தகைய செயலை அது மகிழ்வுடன் செய்ய முன் வரும்பொழுது அதை ஓர் அதிசயம் என்றே இயம்ப வேண்டும். ஜ்வாலை விட்டு அக்கினி எரிகிறது. சடபுடவென்று அதனிடத்து சத்தம் உண்டாகிக் கொண்டிருக்கிறது. நாலாபக்கமும் பொறி பறக்கிறது. அத்தகைய தீயை வளர்ப்பதற்காகப் பெரிய பெரிய விறகுக் கட்டைகளை மதம் பிடித்த யானை ஒன்று தூக்கிக்கொண்டு வந்து வீசிப் போடுமானால் அது உண்மையில் காணுதற்கரிய காட்சியேயாம்.

இயற்கையில் நிகழாத அத்தகைய செயலும் சான்றோர்களுடைய சன்னிதான விசேஷத்தால் நிகழக் கூடியவைகள் ஆகிவிடுகின்றன. அத்தகைய பெருமை வாய்க்கப்பெற்றவர் ஆவார் தாயுமான சுவாமிகளுடைய குருமூர்த்தி.

தேவர்களும், அசுரர்களும் கூடிப் பாற்கடலைக் கடைந்தனர். அதினின்று விதவிதமான வாய்ப்புக்கள் அவர்களுக்குக் கிட்டலாயின. அவ் வாய்ப்புக்களுள் காமதேனு என்பது ஒன்று. அது ஒரு வகை தெய்வத்தன்மை வாய்ந்த பசு. யாரிடத்தில் அப் பசு அமைந்திருக்கிறதோ அவர்க்கு உணவுக்கு ஒரு குறையுமில்லை. வேண்டியபொழுது வேண்டிய விதவிதமான உணவு வகைகள் எத்தனைபேர்க்கு வேண்டுமானாலும் அப்பசு மனமுவந்து அளித்துவிடும் என்பது கோட்பாடு. வசிஷ்டருடைய ஆசிரமத்தில் அப் பசு இருந்ததாக ஐதிகம் உண்டு. ஆதலால் அங்கு வந்தவர்களுக்கெல்லாம் வேண்டியவாறு உணவு கிடைத்தது. அவரிடமிருந்து அப்பசுவை அபகரிக்க விசுவாமித்திரர் முயன்றார். அம்முயற்சி ஒரு பெரும் போராய் முடிந்தது. வசிஷ்டர் அதில் கலந்துகொள்ளவில்லை. கலந்துகொள்ள வேண்டும் என்கிற எண்ணமும் அவருக்கு உண்டாகவில்லை. அவருடைய பிரதிநிதியாக இருந்து கொண்டு காமதேனு தானே அப்போரை நடாத்தியது. விசுவாமித்திரர் அந்த அற்ப விலங்குக்கு எதிராக நிற்க வேண்டியதாயிற்று. அக் கடும் போரில் அவருக்குப் பெருந் தோல்வி உண்டாயிற்று. ஏனென்றால்

காமதேனுவை வைத்திருக்கத் தகுதியற்றவர்களிடத்து அது போவதில்லை. இந்தக் காமதேனு ஒரு தத்துவத்தின் உருவகம் என்று சாஸ்திரம் சொல்லுகிறது. முறையாக வினையாற்றும் திறமையே காமதேனு என்னும் பெயர் பெற்றுள்ளது. அப்படி வினையாற்றுகின்றவர்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்களெல்லாம் எளிதில் கிடைத்துவிடுகின்றன. இந்த விளக்கம் இயற்கையின் நடைமுறைக்கு முற்றிலும் பொருத்தமானதாயிருக்கிறது. நல்வினையாற்றும் நல்லாரிடம் காமதேனு அமைந்திருக்கிறது என்று சொல்லுவது மிகையாகாது. அந்த நல்வினைப்பயனை ஒருவரிடமிருந்து மற்றொருவர் அபகரித்துக்கொள்ள முடியாது. அபகரிக்க முயன்றால் அதனால் பெரு நஷ்டம் ஏற்படும். ஞானியர்கள் நல்வினை ஆற்ற வல்லவர்களாகியபின் அந்தச் சத்கருமத்துக்கப்பாலுள்ள பாரமார்த்திகப் பெருநிலையிலிருக்கின்றனர். அவர்கள் கானகத்தில் வீற்றிருந்தாலும் அவர்களைத் தேடிக்கொண்டு தக்கார் வாயிலாக உணவு வகைகள் போய்ச் சேர்ந்துவிடும். அவர்களுடைய பிராரப்த கர்மத்தின் விளைவு அது. பெரியோர் பலருடைய வாழ்க்கையே இதற்குச் சான்றாகும். தாயுமான சுவாமிகளுடைய குருவும் அத்தகைய தகுதி வாய்க்கப்பெற்றவர். எனவே அவரைக் குறித்து, **போனகம் அமைந்ததென அக்காமதேனு நின் பொன்னடியில் நின்று சொலுமே** என்று அவர் பகர்கிறார். உணவுக்குப் போனகம் என்பது மற்றொரு பெயர். தெய்விக மகிமை வாய்க்கப்பெற்றுள்ள

சான்றோர்களுடைய திருவடியைப் பொன்னடி என்று பகர்வதும் பொருந்தும்.

அரசர்கள் மஹாவிஷ்ணுவின் அவதாரம் என்பது ஐதிகம். மக்களை முறையாக ஆளும் திறமை வாய்க்கப்பெற்றவர்களே அரசர் ஆகின்றனர். உலக நடைமுறை ஒழுங்குடன் இருப்பதற்கு நல்ல அரசர்களே மூலகாரணம் ஆகின்றனர். அவர்களைப் பெருமக்களெனப் பாராட்டுவது உலகத்தவர் இயல்பு. அரசர்களுக்கு அடுத்தபடியிலிருப்பவர்கள் கவிஞர்கள். அரசர்கள் ஆட்சிமுறையை அமைக்கின்றனரென்றால் கவிஞர்கள் சிறந்த மொழியிலே உயர்ந்த கருத்துக்களை மக்களுக்கிடையில் வழங்குகின்றனர். அவர்களுடைய சொல் திறமைக்கு உட்பட்டு நடக்கக் கற்றவர்களனைவரும் முன்வருகின்றனர். எனவே, ஒருவிதத்தில் கவிஞர்களையும், அரசர்களென்று இயம்புவது பொருந்தும். நாட்டை ஆளுபவர்கள் புவிராசர் (புவி ராஜர்) மக்களுடைய மனதை ஆளுபவர் கவிராசர் (கவிராஜர்). இந்த இரண்டுவித ராஜர்களும் போற்றுகின்ற ராஜன் வேறு ஒருவர் இருக்கிறார். அன்னவரை தவராசர் (தவராஜர்) என்று இயம்பலாம். தவத்தில் உயர்ந்த நிலைக்கு வந்துள்ள ஒருவர் புவிராஜனையும், கவிராஜனையும்விட மேலானவர் ஆகிறார். அப்பெரியவரை போற்றிப் பாராட்டுவது மற்ற இரண்டுவித அரசர்களின் இயல்பு ஆகும். தாயுமானவரின் குரு தவராஜராயிருப்பது முற்றிலும் பொருத்தமானது. அவருடைய பெருமையை அண்ணல்

இங்ஙனம் பகர்கிறார். புவிராசர், கவிராசர், தவராச ரென்றுனைப் போற்றி சயபோற்றி என்பார். தவராஜனை தபோநிதி என்றும் பகரலாம். ஒரு விதத்தில் தாயுமான சுவாமிகள் தாமே இந்த மூன்று விதமான அடை மொழிகளுக்கும் தகுதி வாய்க்கப்பெற்றவர் என்று சொல்லலாம். திருச்சிராப்பள்ளியில் அக்காலத்தில் இருந்த அரசாங்கத்தில் அவர் துறவியாதற்கு முன்பு கொஞ்சகாலம் பெரிய பதவி வகித்திருந்ததினால் அவ ரைப் புவிராஜன் எனலாம். பின்பு அவர் பாடியுள்ள பாடல்களெல்லாம் அவர் கவிராஜன் என்பதற்குத் தக்க சான்றுகள் ஆகின்றன. அவர் துறவி ஆகி தம் குருவின் அருளைப் பெற்ற பிறகு வாழ்நாள் முழுதிலும் அரும் பெரும் தவங்களைச் செய்துகொண்டிருந் தார். தம் குருவைப் போன்று தாமே தவராஜராயிருந் தாரென்று சொல்லுவது முற்றிலும் பொருத்தம். எனவே புவிராஜன், கவிராஜன், தவராஜன் என இந்த மூன்றுவித தெய்வீக வாய்ப்புக்களும் தாயுமானவர்க்கே அமைந்திருந்தன.

காந்தத்தினிடம் ஊசிக்குத் தானகக் கவர்ச்சி வந்துவிடுகிறது. அதே பாங்கில் ஞானியர்களிடத்துச் சான்றோர்களனைவரும் கவர்ந்து இழுக்கப்படுகின்றனர். நெடுநாள் பழகிய நண்பர் போன்று ஞானியரும் அந்த நல்லார்களிடம் உறவாடுவர். தமது குருவிடத்து அத் தகைய பேரியல்பு அமைந்திருந்ததென்று தாயுமான வர் பகர்கிறார். ஞான கருணாகர முகங்கண்டபோ திலே நவநாத சித்தர்களும் உன் நட்பினை விரும்புவார்.

ஞானத்தில் உயர்நிலைக்குப் போகின்றவர்களிடத்துக் கருணை மேலும் மேலும் வளர்கிறது. கருணைக்கு உறைவிடமாய் யார் ஒருவர் இருக்கிறாரோ அவர் கருணாகரன் என்று அழைக்கப்படுகிறார். கடவுளைக் கருணாகரன் எனப் பகர்வது முறை. பின்பு, நிறை ஞானி ஒருவரையும் கருணாகரன் என்று அழைப்பது பொருந்தும். நவநாத சித்தர்கள் என்பவர் ஒரு கூட்டத்தார் ஆகின்றனர். தமிழ் நாட்டில் பதினெட்டு சித்தர்கள் ஒருகாலத்தில் இலங்கியிருந்தது போன்று இந்த நவநாத சித்தர்களும் முன்பு ஒரு காலத்தில் இருந்தனர். அந்த ஒன்பது பேருக்கும் ஒன்பது வித மான நாதர்கள் என்கின்ற பெயர்கள் வந்திருந்தன. அவர்கள் தாயுமான சுவாமிகளுடைய குருவுக்கு நெடுநாளைக்கு முன்பே வசித்திருந்தவர்கள். என்றா லும் திரும்பவும் உடல் எடுக்கும் வாய்ப்பு அவர்களுக் குக் கிட்டினால் நெடுநாளைக்குப் பின்பு தோன்றிய இந்த நிறை ஞானியுடன் நட்புக்கொள்ள அவர்கள் மனமுவந்து முன்வருவார்கள் என்பது கருத்து. சித்தர்களை விட உயர்ந்த நிலையில் நிறைஞானி ஒருவர் இருக்கிறார் என்பதையும் நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

நிறைஞானி ஒருவர் முற்றிலும் பரம்பொருள் சொரூபமாய் விடுகிறார்.

ज्ञानी त्वात्मैव मे मतम्

ஞானீ த்வாத்மைவ மே மதம்

என்று பகவான் கீதையில் பகர்ந்திருக்கிறார். ஞானி

ஒருவன் முற்றிலும் பரம்பொருளின் சொரூபமே என்பது இதன் கருத்து. இத்தகைய நிறை ஞானிகள் ஏதோ சிற்சில காலங்களில் உலகில் தோன்றியிருக்கின்றனர். எண்ணிக்கையில் அவர்கள் மிகச் சிலர் எனினும் உலகில் மக்களுக்கிடையில் பெருநன்மையை விளைவிக்க வல்லவராகின்றனர். பண்டைக்காலத்தில் தோன்றிய ஞானிகளுள் சுகப்பிரம்மத்தையும், வாமதேவரையும் முக்கியமானவர்களாகக் குறிப்பிடலாம். அன்னவர்களுக்கு நெடுநாளைக்குப்பின் வந்தவர் தாயுமான சுவாமிகளின் குரு. இவரைச் சந்திக்கின்ற வாய்ப்பு அந்தமுன்னோர்களுக்குஏற்பட்டிருக்குமாயின் அவர்களே இவரைப் பெரிதும் போற்றிப் பாராட்டியிருப்பார்கள். இக்கருத்தை, **சுகர் வாம தேவர் முதல் ஞானிகளும் உனை மெச்சுவார்** என்று தாயுமானவர் இயம்புகிறார்.

ஜடப் பொருள்களுக்கிடையில் பொன், ரத்தினம் போன்றவைகளை மக்களனைவரும் பாராட்டுகின்றனர். அவை எந்த நாட்டிலிருந்து கொண்டுவரப்பட்டவைகள் என்கின்ற கேள்வியையுங்கூட யாரும் கிளப்புவதில்லை. உயர்ந்த பொருளை உயர்ந்ததாகக் கருதுவதே மக்களுடைய இயல்பு. பொன், ரத்தினம் போன்றஜடப் பொருள்களுக்குள்ள மதிப்பைவிட உயிர் வகைகளுக்கு மதிப்பு அதிகம். உயிர்களுள் சான்றோர்க்கு ஏற்பட்டுள்ள மதிப்பு ஒப்பு உயர்வு அற்றது. நிறை ஞானி ஒருவர் எந்த நாட்டுக்கு உரியவர் என்கின்ற கேள்வி எழுவதில்லை. சாதாரண மக்களைக் குறித்தே அவர்

பிறந்த ஊர் எது, பேசுகிற மொழி எது என்கின்ற கேள்விகள் எழுகின்றன. ஆனால் நிறை ஞானி ஒருவர் அண்டங்களனைத்தையும் தம் சொரூபமாகவும் தம்மை அண்டங்களனைத்தின் சொரூபமாகவும் கருதுகிறார். பேதபுத்தி அவருடைய மனதில் இல்லை. மண்ணகத்தில் பிறந்த அவரது உடல் மண்ணகத்தில் வாழ்ந்திருக்கிறது. ஆனால் அவருடைய மனமோ எந்த உலகிலும் கட்டுப்பட்டதல்ல. எல்லா உலகுக்கும் அது சொந்தம். எல்லா உலகங்களையும் தன்மயமாய் அது ஏற்கிறது. குறுகிய பாங்குடைய மக்கள் தங்களை மண்ணுலகுக்கு உரியவர்களாக நினைக்கின்றனர். குறுகிய மனப்பான்மையுடைய விண்ணகத்தவர் தங்களை விண்ணுலகுக்கு உரியவர்களாக நினைக்கின்றனர். ஆனால் ஒரு ஞானியுடன் உறவாட அல்லது இணக்கம் கொள்ள அவர்களுக்குச் சாத்தியப்படும் பொழுது அந்த ஞானியின் பரந்த மனநிலை மற்றவர்களுக்கும் வந்துவிடுகிறது. அந்த ஞானியைப் போன்றே அவர்களும் தாற்காலிகமாகப் பரந்த மனப்பான்மையுடையவர் ஆகிவிடுகின்றனர். தங்கள் குறுகிய இயல்புகளையெல்லாம் மறந்துவிட்டு அந்த ஞானியை முழு மனதோடு போற்றிப் பாராட்ட அவர்கள் ஆரம்பித்துவிடுகின்றனர். தாயுமானவருடைய குருவுக்கு அகிலாண்டத்தையும் தம் மயமாய்க் கருதும் சீரிய மனநிலை உண்டாயிருந்தது. ஆதலால், **வானகமும் மண்ணகமும் வந்து எதிர் வணங்கிடும்** என்று அண்ணல் அவரைப் பாராட்டிப் பேசுகின்றார்.

தம் குருவிடத்திருந்த இத்தனை விதமான சிறப்புக்களை யெல்லாம் எடுத்துக் காட்டிய பிறகும் அவை யாவையும் உள்ளபடி வர்ணிக்கத் தமக்கு இயலவில்லை என்று தாயுமானவர் இயம்புகிறார். **உன் மகிமையது சொல்ல எளிதோ** என்பது அவருடைய சொந்த வாக்கு. அவர் வெறும் உபசாரத்துக்காக அப்படிப் பகரவில்லை.

**துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து**
**இறந்தாரை எண்ணிக்கொண் டற்று**

என்று பொய்யாமொழிப் புலவரும் பகர்ந்துள்ளார்.

மௌன விரதம் பூண்டு அதில் சித்தியடைந்துள்ளவர்களுடைய பாங்கு ஈண்டு நன்கு விளக்கப்படுகிறது. வாய் பேசாதிருப்பதைச் சிலர் மௌனம் என்கின்றனர். ஆனால் எழுதுதல், சைகை செய்தல் போன்ற செயல்கள் மௌன விரதம் பூண்டுள்ள பலர்க்கிடையில் நிகழ்கின்றன. அது உண்மையான மௌன விரதம் ஆகாது. மனதைச் செயலற்றதாக மாற்றுவதே மௌன விரதத்தின் நோக்கமாகும். எண்ணுதல் என்னும் செயலை மனது செய்கின்றபொழுது அது சொல்லாகவும், சரீரத்தில் நிகழ்கிற கிரியையாகவும் வடிவெடுக்கிறது. மனதில் எண்ணம், உணர்ச்சி முதலிய விருத்திகள் வாராது விலக்குவதே நல்ல மௌனமாகும். அப்பொழுது சங்கல்பங்களும் விகல்பங்களும் அம்மனதை விட்டு அகன்று போய்விடுகின்றன. ஈண்டுக் குறித்துள்ள சில செயல்கள் மௌனகுருவிடத்து மனதின் சேஷ்டைகள் அடங்கிவிட்டன என்பதைக் காட்டு

கின்றன. தமக்காகவென்று மௌனகுரு எதையும் சங்கற்பிப்பதில்லை. 'நான்' என்கின்ற அஹங்காரமும் அவருடைய மனதைவிட்டு அகன்றுபோய்விட்டது. அலை ஒன்று தனது உபாதியாகிய வடிவத்தை இழந்து விட்டால் அலை என்கின்ற பெயர் அதற்கு அகன்று போய்விடுகின்றது. பிறகு அது கடலோடு கடலாய் விடுகின்றது. அதே பாங்கில் ஞானி ஒருவர்க்கு ஜீவ போதம் அகன்று போய்விடுகின்றது; பரபோதம் எஞ்சியிருக்கின்றது. அந்த நிலையிலிருந்துகொண்டு அவருடைய கண் கருணை நிறைந்த பார்வைகொண்டு காண்பதால் புலியும் பசுவும் நட்புக்கொள்ள ஆரம்பித்து விடுகின்றன. அவருடைய கை அசைவதால் அதைத் தனக்கு இட்ட ஆணை என்று கருதி மதயானை தீ மூட்டத்தினிடத்துப் பெரிய விறகுக் கட்டையைத் தூக்கிக்கொண்டு வருகிறது. அவர் சங்கல்பம் ஒன்றும் செய்யாமலேயே அவருடைய சரீர சம்ரக்ஷணைக்குத் தேவையாயிருக்கிற உணவு தற்செயலாய் வந்துசேர்ந்து விடுகிறது. கர்மபலன் எதையும் அவர் கருத்தில் வாங்காவிடினும் பிராரப்தகர்மம் அதற்குக் காரணமாகிறது. புகழைப்பற்றிய எண்ணம் ஒன்றும் அவர் கொள்ளாதிருக்கின்றபொழுது புவி அரசர்களும், கவி அரசர்களும், அந்த அருள் அரசரை வழுத்த ஆரம்பித்து விடுகின்றனர். பேச்சு ஒன்றும் இல்லாமலேயே, பண்பட்ட மனது ஒன்று முற்றிலும் பரிபாகமடைந்த மற்றொரு மனதை அறிந்துகொள்கிறது. ஆதலால் சித்தர் கூட்டத்தைச் சேர்ந்தவர்களும், ஞானியர் கூட்

டத்தைச் சேர்ந்தவர்களும் மனமொடுங்கப்பெற்ற வரைப் பாராட்டுகின்றனர். குழந்தை ஒன்றுக்கு எம்மொழியைப் பேசத் தெரியாதிருப்பினும் எல்லா நாட்டவரும் அதனோடு இணக்கம்கொள்ள விரும்புகின்றனர். ஞானி ஒருவர் மொழிகளையெல்லாம் கடந்த மௌனத்தில் வீற்றிருப்பதால் விண்ணவரும் மண்ணவரும் அவரைக் கொண்டாட ஆரம்பித்து விடுகின்றனர்.

வலிவுபடைத்ததே வாழ்வுக்குரியது என்னும் கானகத்துக்குரிய நியதியானது உண்மையில் எல்லா உலகுக்கும் உரியது ஆகிறது. உடல் வலிவு ஒன்று தான் வலிவு அல்ல. அறிவின் வலிவு அதைவிடச் சிறந்தது. இனித் தவமும் ஞானமும் உடையவர் வலிவே ஒப்பு உயர்வு அற்றது. காட்டு மிருகங்களும் அந்த ஞான கருணாகரத்துக்கு வசப்படுகின்றன. மக்கள், தேவர், யோகியர், ஞானியர் ஆகிய அனைவரும் ஞானிக்கு உரியவர் ஆகின்றனர். எனவே இறைவனுடைய படைப்பில் ஞானத்துக்கு நிகரான வாழ்க்கைத் திறன் வேறு எதனிடத்திலும் இல்லை என்பது வெளியாகிறது.

இத்தனை விதமான மகிமைகள் எல்லாம் தாயுமானவருடைய குருவினிடத்து மிளிர்ந்திருப்பனவாயின. அக்கருத்துக்கள் யாவும் அவருடைய மேற்கூறிய பாடலில் அடங்கப் பெற்றுள்ளன.

## மௌனகுரு வணக்கம் - 8

சருகுசல பட்சணிக ளொருகோடி யல்லால்
சகோரபட் சிகள்போலவே
தவளநில வொழுகமிர்த தாரையுண் டழியாத
தன்மைய ரனந்தகோடி
இருவினைக ளற்றிரவு பகலென்ப தறியாத
ஏகாந்த மோனஞான
இன்பநிட் டையர்கோடி மணிமந்த்ர சித்திநிலை
எய்தினர்கள் கோடிசூழக்
குருமணி யிழைத்திட்ட சிங்கா தனத்தின்மிசை
கொலுவீற் றிருக்கும்நின்னை
கும்பிட் டனந்தமுறை தெண்டனிட் டென்மனக்
குறையெலாந் தீரும்வண் ணம்
மருமல ரெடுத்துனிரு தாளையர்ச் சிக்கவெனை
வாவென் றழைப்பதெந்நாள்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

*அண்டங்கள் அனைத்துக்கும் குருவாய் இருப்பவர் சிவபெருமான். மூத்தவன் அல்லது முதல்வன் என்பது குரு என்னும் சொல்லுக்குப் பொருளாகும். வயதில் மூத்தவனையும் அறிவில் மூத்தவனையும் குரு என்கிறோம். மைந்தனுக்குத் தந்தை முதல்வன் ஆகிறான். அக்காரணத்தை முன்னிட்டு அவனுக்குத் தந்தை குரு ஆகிறான். சிவபெருமான் உலகனைத்துக்கும் யாண்டும் குரு. அறிவிலோ வயதிலோ அவருக்கு மிக்கார் இல்லை,*

வாலறிவன் என்று அவரையே இயம்பவேண்டும். தொல்லோன் என்னும் சொல்லும் அவருக்கே உரியது. ஆக, அவரன்றி வேறு யார்தான் அகிலாண்டத்துக்கும் குரு ஆக முடியும்! இனி அவருடைய சன்னிதானம் எங்கே இருக்கிறது என்னும் கேள்வியைக் கிளப்பலாம். அவருடைய சன்னிதானம் இல்லாத இடம் எது, என்றுதான் நாம் அதற்கு விடை விடுக்கவேண்டும். நீக்கமற அவர் எங்கும் நிறைந்திருக்கிறுர். எங்கும் நிறைபொருள் என்னும் விளக்கமும் அவ்ருக்குப் போதாது. ஏனென்றுல் தேசம் அல்லது இடம் என்ப தெல்லாம் அவரிடத்து ஒடுங்கிவிடுகிறது. அவரே முழுமுதற் பொருளாக இருக்கிறுர். கால கதியைப் பற்றிய உண்மையும் இதுவே. இறந்தகாலம், நிகழ் காலம், எதிர்காலம் என்னும் முக்கால நிலையும் அவரி டத்து ஒடுங்கி விடுகிறது. பிரபஞ்சமே அவருடைய தோற்றமாதலால் வர்த்தமானம் அல்லது செயல் என் பதும் அவருக்கு அந்நியமாய் இல்லை. சுருங்கச்சொல் லின் கால தேச வர்த்தமானம் அவரித்து அடங்கி விடுகின்றன.

அத்தகைய பெரிய பொருளைப் போற்றுகின்றவர் கள் யார் என்னும் கேள்வி பிறக்கிறது. பரிபாகம் அடையாத மக்கள் அவரை முறையாகப் போற்ற வல்லவர்கள் அல்லர். பரிபாகம் அடைந்திருப்பவர் களே அப்பெரிய பொருளின் பெருமைகளைத் தெரிந்து கொள்ள முடியும். அவரைப் போற்றுதற்கும் அன்ன வர்களே வல்லவர்கள் ஆகின்றனர். பரிபாகம் அடை

தற்கு முறைகள் பல இருக்கின்றன. கடுந்தவம் புரி தல் ஒரு முறையாகும். தவத்தின் மூலம் மனிதன் தன்னை மேலோனாக மாற்றியமைக்கிறான். தவத்தின் மூலம் தேகத்தைப்பற்றிய உணர்வை மனிதன் வெல்லுகிறான். தேகத்தைப்பற்றிய உணர்வுக்கும் அதன் பொருட்டு உணவு தேடுதற்கும் நெருங்கிய தொடர்வு உண்டு. உணவை நாடிக் கொண்டிருக்கும் வரையில் ஒருவன் உடல் உணர்விலேயே உழன்று கிடக்கிறான். உடல் உணர்வை வென்றவன் அதைப் பேணுதலில் கருத்து மிகச் செலுத்துவதில்லை. உடல் உணர்வற்ற தவசிகள் உடலுக்குத் தற்செயலாய்க் கிடைக்கும் சருகு முதலியவைகளை ஊட்டி அதை நிலைத்திருக்கச் செய்கின்றனர். பசி வந்தவிடத்து உலர்ந்து உயிரற்றுப்போன சருகை உடலுக்கு அவர் கள் வழங்கினர். தாகம் வந்த விடத்து அவர்கள் உடலுக்கு எங்கும் எளிதில் அகப்படுகிற ஜலத்தை எடுத்து வழங்கினர். அந்தப் பாங்கில் உடலை ஒரு சிறிதளவில் பேணி வைத்திருந்ததெல்லாம் பரமனை வழுத்துதற் பொருட்டேயாம். முக்காலத்தையும் தொகுத்து ஒரே நிகழ்காலமாகக் கருதலாம். பிறகு அண்டகோடிகளைத் தன்னகத்து அடைத்து வைத் திருக்கிற தேசம் அல்லது இடத்தையும் ஒடுக்கி ஒரே சன்னிதியாக்கி விடலாம். பிறகு சருகைத் தின்று நீரைக் குடித்துக் கடுந்தவம் புரிந்து இறைவனை வழுத் துதற் கென்றே வாழ்ந்திருந்தவர்கள் பல காலங்களி லும் இடங்களிலும் இருந்திருக்கின்றனர். எண்ணிக்

கையில் அவர்களைக் கோடிப்பேர் எனப் பகரலாம். இக்கருத்தை சருகு சலசபட்சணிகள் ஒருகோடி எனத் தாயுமானவர் எடுத்துரைக்கிறார். பட்சணிகள் என்னும் பதத்துக்கு உண்டு உயிர் வாழ்ந்திருப்பவர் என்பது பொருள்.

யாரெல்லாம் இறைவனை வழுத்துகின்றனரோ அவர்கள் தாங்களே பாராட்டுதற்குரியவர்கள் ஆகிறார்கள் என்பதை மேலும் விளக்குதற்கு அல்லால் என்னும் பதத்தை அவர் அடுத்தபடியாகக் கொண்டு வருகிறார். இந்தக் கடுந்தவசிகள் மட்டுமல்ல, வேறு பலரும் இறைவனைப் போற்றும் பாங்குடையவர்கள் இருக்கிறார்கள் என்பது அதன் கருத்து. சகோர பக்ஷிகள் என்னும் ஒருவகைப் பறவைகள் இருக்கின்றன. அவைகள் தங்களுடைய உயிர் வாழ்க்கைக்கு நிலவுலகில் இருக்கிற உணவை அதிகம் தேடுவதில்லை. வெள்ளை வெளேரென்று பூமியின்மீது வந்து படிகிற சந்திரிகை அல்லது நிலா வெளிச்சத்தினின்று அவைகள் வாழ்க்கைக்கு ஏதுவான பிராணனைப் பெறுகின்றன. அமாவாசையன்றும் அதற்கு இரண்டு நாள் முந்தியும் இரண்டு நாள் பிந்தியும் அவைகள் நிலா வெளிச்சத்தினின்று பிராண சக்தியைப் பெற இயலாதவைகளாய் இருக்கின்றன. ஏனென்றால் வெள்ளை நிறமான நிலா வெளிச்சத்தை அவ்விரவுகளில் பூமி பெறுவதில்லை. மாதத்தில் மற்ற இருபத்தைந்து நாட்களில் சந்திரகாந்தியினின்றே அவைகள் உயிர் வாழ்க்கைக்கு ஏதுவான சக்தியைப் பெற்று வருகின்

தற்கு முறைகள் பல இருக்கின்றன. கடுந்தவம் புரிதல் ஒரு முறையாகும். தவத்தின் மூலம் மனிதன் தன்னை மேலோனாக மாற்றியமைக்கிறான். தவத்தின் மூலம் தேகத்தைப்பற்றிய உணர்வை மனிதன் வெல்லுகிறான். தேகத்தைப்பற்றிய உணர்வுக்கும் அதன் பொருட்டு உணவு தேடுதற்கும் நெருங்கிய தொடர்வு உண்டு. உணவை நாடிக் கொண்டிருக்கும் வரையில் ஒருவன் உடல் உணர்விலேயே உழன்று கிடக்கிறான். உடல் உணர்வை வென்றவன் அதைப் பேணுதலில் கருத்து மிகச் செலுத்துவதில்லை. உடல் உணர்வற்ற தவசிகள் உடலுக்குத் தற்செயலாய்க் கிடைக்கும் சருகு முதலியவைகளை ஊட்டி அதை நிலைத்திருக்கச் செய்கின்றனர். பசி வந்தவிடத்து உலர்ந்து உயிரற்றுப்போன சருகை உடலுக்கு அவர்கள் வழங்கினர். தாகம் வந்த விடத்து அவர்கள் உடலுக்கு எங்கும் எளிதில் அகப்படுகிற ஜலத்தை எடுத்து வழங்கினர். அந்தப் பாங்கில் உடலை ஒரு சிறிதளவில் பேணி வைத்திருந்ததெல்லாம் பரமனை வழுத்துதற் பொருட்டேயாம். முக்காலத்தையும் தொகுத்து ஒரே நிகழ்காலமாகக் கருதலாம். பிறகு அண்டகோடிகளைத் தன்னகத்து அடைத்து வைத்திருக்கிற தேசம் அல்லது இடத்தையும் ஒடுக்கி ஒரே சன்னிதியாக்கி விடலாம். பிறகு சருகைத் தின்று நீரைக் குடித்துக் கடுந்தவம் புரிந்து இறைவனை வழுத்துதற் கென்றே வாழ்ந்திருந்தவர்கள் பல காலங்களிலும் இடங்களிலும் இருந்திருக்கின்றனர். எண்ணிக்

கையில் அவர்களைக் கோடிப்பேர் எனப் பகரலாம். இக்கருத்தை சருகு சலசபட்சணிகள் ஒருகோடி எனத் தாயுமானவர் எடுத்துரைக்கிறார். பட்சணிகள் என்னும் பதத்துக்கு உண்டு உயிர் வாழ்ந்திருப்பவர் என்பது பொருள்.

யாரெல்லாம் இறைவனை வழுத்துகின்றனரோ அவர்கள் தாங்களே பாராட்டுதற்குரியவர்கள் ஆகிறார்கள் என்பதை மேலும் விளக்குதற்கு அல்லால் என்னும் பதத்தை அவர் அடுத்தபடியாகக் கொண்டு வருகிறார். இந்தக் கடுந்தவசிகள் மட்டுமல்ல, வேறு பலரும் இறைவனைப் போற்றும் பாங்குடையவர்கள் இருக்கிறார்கள் என்பது அதன் கருத்து. சகோர பக்ஷிகள் என்னும் ஒருவகைப் பறவைகள் இருக்கின்றன. அவைகள் தங்களுடைய உயிர் வாழ்க்கைக்கு நிலவுலகில் இருக்கிற உணவை அதிகம் தேடுவதில்லை. வெள்ளை வெளேரென்று பூமியின்மீது வந்து படிகிற சந்திரிகை அல்லது நிலா வெளிச்சத்தினின்று அவைகள் வாழ்க்கைக்கு ஏதுவான பிராணனைப் பெறுகின்றன. அமாவாசையன்றும் அதற்கு இரண்டு நாள் முந்தியும் இரண்டு நாள் பிந்தியும் அவைகள் நிலா வெளிச்சத்தினின்று பிராண சக்தியைப் பெற இயலாதவைகளாய் இருக்கின்றன. ஏனென்றால் வெள்ளை நிறமான நிலா வெளிச்சத்தை அவ்விரவுகளில் பூமி பெறுவதில்லை. மாதத்தில் மற்ற இருபத்தைந்து நாட்களில் சந்திரகாந்தியினின்றே அவைகள் உயிர் வாழ்க்கைக்கு ஏதுவான சக்தியைப் பெற்று வருகின்

றன. பௌர்ணமியன்று அவைகளுக்குப் பெரு விருந்து இயற்கையால் வழங்கப்படுகிறது என்று இயம்பலாம். அத்தகைய சகோர பக்ஷிகளுக்கு ஒப்பான யோகியர்கள் பலர் இருக்கின்றனர். அன்னவர்களும் பூவுலகம் வழங்குகின்ற உணவை அதிகமாகப் பொருள்படுத்துவதில்லை. மூலாதாரத்தில் இருக்கும் குண்டலினி சக்தியை அந்த யோகிகள் தங்கள் உச்சந்தலையிலிருக்கும் சஹஸ்ராரத்தைச் சென்று தாக்கும்படி ஏவுகின்றனர். அப்படிச் செய்வதால் கபாலத்தில் இருக்கும் ஏழாவது ஞானபூமியினின்று அமிர்ததாரை சொட்டுகின்றது. அதை அமிர்தம் என்றே சொல்ல வேண்டும். தைலதாரை போன்று நாவுக்கு அது வந்து எட்டுவதால் அது அமிர்ததாரை என்று பகரப்படுகிறது. பசியையும் தாகத்தையும் அகற்றிவிட்டுப் பரமானந்தத்தை அது உண்டுபண்ணுகிறது. புறத்தி விருந்து உணவைப் புசித்துப் பசியைப் போக்கிப் பரமதிருப்தியடைந்திருப்பதைவிட இது மேலானது. ஏனென்றால் புறத்தினின்று ஏற்கப்படும் உணவு வகைகளுள் சில உடலுக்குப் பொருந்தியவைகளாக இருக்கலாம், வேறு சில பொருந்தாதவைகளாகப் போய் விடலாம். பொருந்தாத உணவு துன்பத்தை விளைவிக்கிறது. பின்பு, உள்ளிருந்தே வடியும் அமிர்ததாரையோ உடலையும் உயிரையும் நன்கு பேணுகிறது. அதைச் செமித்தல் என்னும் செயல் ஜீரணக் கருவிகளுக்கு இல்லை. அதனால் உடல் யாண்டும் ஓய்வு பெற்றிருக்கிறது. ஓய்வு நிலையிலேயே உடல் இருப்ப

தால் உறக்கத்துக்கும் அவசியமில்லாது போய்விடு கிறது. உடலில் வாழ்ந்திருக்கும்பொழுதே உணவுக் கும் உறக்கத்துக்கும் தேவையில்லாத நிலை ஓர் உயர்ந்த நிலையாகிறது. நெடுநாளைக்கு அத்தகைய உடல் வாழ்வு நிலைத்திருக்கிறது. உடல் அங்ஙனம் காப்பாற் றப்படுவதால்தான் அது அமிர்தபானம் செய்துள்ள தாகக் கருதப்படுகிறது. அப்படி உடலை நெடுங் காலம் வைத்திருக்கும் யோகியர்கள் பரம்பொருளை ஓயாது தியானித்துக்கொண்டிருக்கின்றனர். அப்பெரு நிலையை அடைந்துள்ள யோகிகள் கோடிக்கணக்கான பேர் ஆகின்றனர். **சகோர பக்ஷிகள் போலவே தவள நிலவொழுகு அமிர்ததாரை யுண்டழியாத தன்மைய ரனந்த கோடி** என்பது தாயுமானவர் வாக்கு.

தவளம் என்னும் சொல்லுக்கு வெண்மையான என்பது பொருள். வெண்மையான நிலா வெளிச்சமும் உள்ளிருந்து சொட்டுகின்ற அமிர்ததாரையும் நிறத்தி லும் அனுபவத்திலும் ஒன்றுபட்டு விடுகின்றன. யோகி ஒருவன் சத்வகுணத்தில் நிலைத்திருப்பதால் நிலா வெளிச்சத்துக்கு ஒப்பான சுடர் உள்ளத்தினுள் இலங்குகிறது. இனிமையில் நிலா வெளிச்சமும் அமிர்த தாரையும் ஒத்திருக்கின்றன. நிலா வெளிச்சம் சகோர பக்ஷிகளைப் பேணிவருவது போன்று அமிர்ததாரை யோகியர்களைக் காயகற்பம் பண்ணியுள்ள நிலையில் நெடுநாளைக்குக் காத்து வருகிறது.

சர்வகாலமும் சர்வேசுவரனைப் போற்றுகின்ற மற்றொரு கூட்டத்தார் உண்டு. அவர்கள் ஞானிகள்

என்று அழைக்கப்படுகின்றனர். நூல்கள் பல படிக்கின்றவர்கள் ஞானிகள் ஆகமாட்டார்கள். பரம்பொருளைச் சுவானுபூதியில் தரிசிக்கின்றவர்களே ஞானிகள் ஆகின்றனர். அப்படி அவர்கள் ஞானத்தைப் பெற்றுள்ளதற்கு ஏற்ற அறிகுறிகளும் இருக்கின்றன. அக்ஞானத்தில் இருக்கின்றவர்கள் கர்மபந்தத்துக்கு உள்ளாகிறார்கள். கர்மம் இரண்டு வகைப்படுகிறது. அவ்விரண்டு வகைகளை நல்வினை தீவினையென்கிறோம். மனிதனுக்கு இன்பம் தருவது நல்வினை; துன்பம் தருவது தீவினை. சர்வேசுவரனுடைய சான்னித்தியத்தை உணர்ந்து அதிலேயே திளைத்திருப்பவர்களுக்கு உடல் ஞாபகம் உண்டாவதில்லை. தேகாத்மபுத்தி அல்லது உடல் ஞாபகம் யாருக்கு இல்லையோ அவர்களை இருவினைகளும் சேர்வதில்லை. இதற்கு ஒரு சான்று எடுத்துக்கொள்ளலாம். சிறு குழந்தைகளுக்கு உடல் உணர்வு மிகக் குறைவு. ஆதலால் உடலை ஒட்டிய இன்பதுன்பமும் குழந்தைகளுக்கு மிகக் குறைவு. வயது வர வர உடல் உணர்வும் தொடர்ந்து அதிகரித்து வருகிறது. அதற்கு ஒப்ப இருவினைப் பயனாகிய இன்பதுன்பமும் அதிகரிக்கிறது. ஞானிகளுக்கோ உடல் உணர்வு இல்லை. ஆதலால் உடலைச் சார்ந்துள்ள இருவினைப் பயன்கள் இல்லை. பின்பு, இருவினைகளினின்று விளையும் தாற்காலிகமான இன்பதுன்பங்களும் இல்லை, இதை முன்னிட்டே 'ஞானிக்கில்லை இன்பமும் துன்பமும்' என்னும் கோட்பாடு வந்துள்ளது. ஞானிகள் வினைப்பயனைக் கடந்திருப்பது

போன்று காலத்தையும் கடந்திருக்கிறார்கள். காலத்தில் கட்டுண்டிருப்பவர்கள் அக்ஞானிகள். ஞானிகளோ காலத்தில் ஒருபொழுதும் கட்டுண்பதில்லை. காலம் மனநிலையைப் பொறுத்தது. மனம் செயல் புரிகின்ற பொழுது காலத்தைப் பற்றிய உணர்வு வருகிறது. மனது செயலற்றிருக்கின்ற பொழுது காலத்தைப்பற்றிய எண்ணம் வருவதில்லை. தூக்கத்தை இதற்குச் சான்றாக எடுத்துக்கொள்ளலாம். இரவில் நோயாளி ஒருவனுக்குத் தூக்கம் பிடிக்காவிட்டால் ஒவ்வொரு நாழிகையும் ஒரு யுகம் போன்று இரவு நீடித்துக் கொண்டே போகிறது. அப்படியல்லாது ஆரோக்கியமாய் இருந்து அயர்ந்து தூங்கிவிடுகின்றவனுக்கு எட்டு மணி நேரம் அல்லது பத்து மணி நேரம் நொடிப்பொழுது போன்று கடந்துபோய் விடுகிறது. விழித்திருக்கின்றபொழுதும் யார் ஒருவனுக்கு நேரம் போவதே தெரிகிறதில்லையோ அவன் மனதை நல்ல நிலையில் வைத்திருக்கிறான் என்பது அதினின்று வெளியாகிறது. அதற்கு மாறாக யார் ஒருவனுக்குப் பொழுதே போகமாட்டேன் என்கிறதோ அவன் மனதை நல்ல நிலையில் வைத்திருக்கிறதில்லை என்பது தேற்றம். மனமடங்கப் பெற்றவர்களே ஞானிகள் ஆகின்றார்கள். அப்படி மனம் அடங்கப்பெற்றவர்களுக்குக் கணப்பொழுதும் கல்பகாலமும் ஒன்றே. அந்த நிலையில் இருப்பவர்களுக்கு இரவைப் பற்றிய உணர்வும் பகலைப் பற்றிய உணர்வும் கிடையாது. அதாவது காலத்தைப்பற்றிய உணர்வு இல்லை. சிவ

போதம் என்கிற உணர்வுதான் நிலைத்திருக்கிறது. ஞானியர்களிடத்து இன்னொரு சிறப்பு உண்டு. ஒரு பெரிய ஜனத்திரளுக்கிடையில் இருப்பதும் தன்னந் தனியனாக ஏகாந்தத்தில் இருப்பதும் அன்னவர்களுக்கு ஒன்றே. எண்ணிக்கையில் 'அடங்காத மக்களை யெல் லாம் ஒரே பரம்பொருள் சொரூபமாக அவர்கள் உணர் கிறார்கள். அந்தப் பரம்பொருளுக்கு அன்னியமாக வேறு எதையும் அவர்கள் காண்பதில்லையாதலால் அவர்கள் யாண்டும் ஏகாந்தத்திலேயே இருக்கிறார்கள். சந்தடி நிறைந்த சந்தைக்கடையில் இருப்பதும், ஓசை ஒன்றும் எட்டாத குகையிலிருப்பதும்ஞானியர்களுக்கு ஒன்றே. அவர்களுடைய உடல் எங்கு எந்நிலையில் இருப்பினும் அவர்கள் ஏகாந்தத்தில் இருப்பவர்கள் ஆகின்றனர். அடுத்தபடியாகப் பேச்சுக்கு இடம் எப் பொழுது உண்டாகிறது என்பது கேள்வி. இரண்டு பேர் அல்லது இரண்டு பேருக்கு மேற்பட்டவர்கள் இருந்தால் பேச்சுக்கு இடமுண்டு. தன்னந்தனியனாக ஒரே மனிதன் இருக்கிற இடத்து வாய்திறந்து பேசு தலில் பொருள் இல்லை. இன்னும் அசைகின்ற ஒன்றே ஓசையை உண்டுபண்ணுகிறது. பரமாத்ம சொரூபம் அசைவற்றது. ஆங்கு ஓசை உண்டாவதற்கு இட மில்லை. ஞானியர்கள் பரமாத்ம சொரூபத்திலேயே திளைத்திருப்பதால் அவர்கள் மோனநிலை அல்லது மௌனத்தில் இருக்கிறார்கள் என்று இயம்பலாம். அவர்கள் அடைந்துள்ள நிலை கல் போன்றதா என் னும் கேள்வி வருகிறது. கல் அசைவதில்லை, பேசுவ

தில்லை, இன்பதுன்பமுறுவதுமில்லை. ஆனால் ஞானியர் களோ பரம்பொருள் சொரூப நிஷ்டையில் பேரின்பம் அனுபவித்துக்கொண்டிருக்கின்றனர். வெளித்தோற் றத்துக்கு அசைவற்றுக் கிடக்கின்ற கல்லுக்கும் நிர்வி கல்ப சமாதியில் ஊறியிருக்கும் ஞானியர்களுக்கும் அதிகவேற்றுமையில்லை. ஆனால் கல் என்னும் உயிர் ஆத்ம பரிபாகத்தில் ஆரம்ப நிலையிலிருக்கிறது. ஞானியோ ஆத்ம பரிபாகத்தில் பூர்த்தியடைந்த நிலை யில் இருக்கிறார். அத்தகைய ஞானிகள் எண்ணிக்கை யில் அடங்காதபேர் இறைவன் முன் பேரின்பத்தில் திளைத்திருக்கின்றனர். **இருவினைகளற்று இரவு பகல் அறியாத ஏகாந்த மோன ஞான இன்ப நிஷ்டையர் கோடி** என்னும் அடியிலே இக்கருத்துக்களை யெல்லாம் தாயு மானவர் அடக்கி வைக்கின்றார்.

அடுத்தபடியாக சித்தர்களைப்பற்றியும் அவர் பகர்கின்றார். சித்தர்கள் யார் என்பதை நாம் அறிந்து கொள்ளவேண்டும். அஷ்டசித்திகளைப் பெறுகின்ற வர்கள் சித்தர்கள் ஆகிறார்கள். அஷ்டசித்திகளைப் பொருள்படுத்தாது ஒதுக்கிவைத்துவிட்டு ஆத்மபரி பாகம் அடைகின்றவர்களும் சித்தர்கள் ஆகின்றார்கள். ஞானிகளுக்கும் சித்தர்களுக்குமிடையில் ஒரு வேற் றுமையுண்டு. உடலைப்பற்றிய எண்ணத்தை மனதில் வாங்கிக்கொள்ளாதிருப்பவர்கள் ஞானிகள். உடலை ஒரு ஆலயமாகக்கருதி அதை நல்ல பாங்கில் பார்த்து காத்து வைத்திருப்பவர்கள் சித்தர்கள். தாங்கள் முற்றிலும் ஆத்மபரிபாகம் அடையும்வரையில் எடுத்

துள்ள இத்தேகத்தைக் கலைந்துபோகாது காப்பாற்றி வைக்க சித்தர்கள் உறுதிகொள்கின்றனர். அதற்கேற்ற முறைகளையும் அவர்கள் கையாளுகின்றனர். அம்முறைகள் யாவையும் மூன்றுவிதமானவைகளாகத் தொகுத்து இயம்பலாம். மணி, மந்த்ரம், ஔஷதம் ஆகிய மூன்றுவித உபாயங்கள் உடலைக் காத்துவைப்பதற்கு உதவுகின்றன. பாதரசத்தை முறையாகக்கட்டி அதை மணி என்று அவர்கள் இயம்புகின்றனர். உடலில் அந்த மணியை அணிந்துகொண்டு ஆத்மசாதனங்கள் பழகுகின்றவனுக்கு பிணி மூப்பு முதலியன உண்டாவதில்லை. நெடுநாளைக்கு உடல் நல்ல பாங்கில் பாதுகாத்துவைக்கப்படுவதாகிறது. ஒருவிதமான காயசித்தி என்றே அதைச் சொல்லலாம். அடுத்தபடியாக உடலமைப்புக்கு முதற்காரணமாய் இருக்கின்ற ஐம்பூதங்களுக்கு உரிய மூலமந்த்ரங்கள் இருக்கின்றன. மனம், சித்தம், புத்தி, அகங்காரம் என்னும் அந்தக்கரணங்களுக்கு ஏற்ற மந்த்ரங்களும் இருக்கின்றன. அம்மந்த்ரங்களை முறையாக ஓதி, பூத சுத்தி செய்து அந்தக்கரணத்தைப் பண்படுத்தி தங்கள் உடலமைப்பையே முற்றிலும் பண்பட்டதாகச் சில சித்தர்கள் செய்துகொள்கின்றனர். அப்படிக் கருவிகரணங்களைச் செப்பனிடுவதும் அவைகளால் ஆகிய உடலைப் பழுதுபட்டுப் போகாது காத்து வைத்திருப்பதும் இன்னும் சில சித்தர்களுடைய செயல் ஆகிறது. முக்தி நிலையில் பரத்துடன் கலக்கும் பரியந்தம் தங்கள் தேகத்தை அவர்கள் அப்படிக் காத்து வைத்திருக்கின்றனர். இனி,

ஔஷதத்தைக்கொண்டு அவர்கள் உடலைக் காப்பதும் உண்டு. சித்தர்கள் கையாண்டுள்ள ஔஷதங்கள் பல இருக்கின்றன. அவர்களுடைய முறைக்கு சித்த வைத்தியம் என்று பெயர். விதவிதமான உலோகங் களைப் பஸ்மமாக்குவது அவர்களுடைய முறையாகும். அம்முறைப்படி இரும்பு, தாமிரம் போன்ற கீழான லோஹங்களை வெள்ளி, பொன் போன்ற மேலான லோஹங்களாக மாற்றலாம். அந்தந்த லோஹத்தி லுள்ள அழுக்கை நீக்குவதன் மூலம் அது சாத்தியமா கிறது. இந்த முறைக்கு ரசவாதம் என்பது மற்றொரு பெயர். இரும்பு, தாமிரம் ஆகியவைகளைச் சுத்தி செய் கிற மருந்து பிறகு உடலைச் சுத்தி செய்ய வல்லதா கிறது. அத்தகைய பஸ்மங்களை முறைப்படி உட் கொண்டு சில சித்தர்கள் காயசித்தி செய்கின்றனர். நெடுநாளைக்கு அந்த உடலைப் பழுதுபட்டுப் போகாது பாதுகாக்கின்றனர். அதே உடலைக் கருவியாக வைத் துக்கொண்டு அவர்கள் பரிபூரண நிலையை எய்திவிடு கின்றனர். இங்ஙனம் உடலைப் பாதுகாத்து வைத்துக் கொண்டு பரிபூரண நிலைக்கு வருகின்றவர்கள் சித்தர் கள் என்று அழைக்கப்படுகிறார்கள். அவர்களும் பரம் பொருளின் சன்னிதியிலே கோடிக்கணக்கில் புடை சூழ்ந்திருக்கின்றனர். இக்கோட்பாட்டை, **மணிமந்த்ர சித்திநிலை எய்தினர்கள் கோடிசூழ** என்று அண்ணல் இயம்புகிறார்.

அடுத்தபடியாக **குருமணி இழைத்திட்ட சிங்கா சனத்தின் மிசை கொலு வீற்றிருக்கும் நின்னை** என்

னும் அடியை அவர் அமைக்கின்றூர். அண்டங்கள் அனைத்துமே அவர் வீற்றிருக்கும் இடமாகிறது. வியப்புக்குரிய மேலான இருப்பிடத்தை சிங்காதனம் என்கிறோம். அரசர் முதலாயினோருக்கு உலக வாழ்க்கையில் அத்தகைய சிம்மாசனங்கள் அமைக்கப் பெற்றிருப்பதை நாம் காண்கின்றோம். ஆனால் வீற்றிருப்பதற்குரிய ஆசனங்களில் பிரபஞ்சத்துக்கு நிகரானது ஒன்றுமில்லை. எண்ணிறந்த சந்திர சூரியர்கள் நக்ஷத்திரங்கள் இயற்கை என்னும் சிம்மாசனத்தல் இழைக்கப்பெற்றிருக்கின்றன. பிரகாசம் பொருந்திய இக் கோளங்களுள் விதவிதமான நிறங்கள் அமையப்பெற்றவைகள் இருக்கின்றன. நம் கண்ணுக்குத் தென்படுபவைகள் வெண் நிறங்களுடன் ஒளிர்கின்றன. பகிரண்டங்களில் பச்சை, சிவப்பு, மஞ்சள், நீலம், ஊதா போன்ற விதவிதமான நிறங்களுடைய கோளங்கள் இருக்கின்றன. அவைகளைக் குருமணி என்று அவர் இயம்புகிறார். வெவ்வேறு நிறமுடைய ரத்னங்கள் என்பது அதன் பொருள்.

இம்முறையில் அகிலாண்டங்களையே ஆசனமாகக் கொண்டு எழுந்தருளியிருப்பவர் பரம குருவாகிய தக்ஷிணாமூர்த்தியாவார். ஈண்டுத் தாயுமானவர் தக்ஷிணாமூர்த்திக்கும் தம்மை ஆட்கொண்ட மௌன குருவுக்கும் ஒரு வித்தியாசமும் காணாத பாங்கில் பகர்கிறார். ஆத்ம சாதகர் ஒருவருக்கு அத்தகைய கருத்து முற்றிலும் அவசியமாகிறது. தன்னை ஆட்கொள்ளும் குரு ஒருவரை சாதாரண மானுடனாகக் காண்பவனுக்கு

ஆத்மசாதனத்தில் முன்னேற்றமில்லை. குருவை முற்றி லும் பரம்பொருள் சொரூபமாகவே கருதுகின்ற ஆத்ம சாதகனுக்கு எல்லாவிதமான முன்னேற்றமும் உண்டு. குருபக்தியில் முதிர்ந்த நிலையில் இருக்கும் தாயுமான சுவாமிகள் தம்மை ஆட்கொண்ட குருவையும் தக்ஷிணா மூர்த்தியையும் ஒன்றாகக் கருதியது முற்றிலும் பொருத் தமானது.

**நின்னைக் கும்பிட்டு அனந்தமுறை தெண்டனிட்டு** என்கிறார் அவர். சிஷ்யன் ஒருவன் குரு இடத்தில் எத்தகைய பக்தி கொள்ளவேண்டும் என்பதை அது நன்கு விளக்குகிறது. வீழ்ந்து வணங்குவதன் மூலம் சிஷ்யன் ஒருவன் தனது ஜீவபோதம் முழுதையும் குருவிடம் ஒப்படைக்கிறான். தீயினிடம் ஒப்படைக் கப்படும் விறகுக்கட்டை ஒன்று தானே தீ ஆய்விடு கிறது. பரிபூரணநிலை அடைந்துள்ள குரு ஒருவரிடம் தன்னை முற்றிலும் ஒப்படைக்கின்ற சிஷ்யன் ஒருவன் தானே பரிபூரண நிலைக்குத் தகுதியுடையவனாகின்றான்.

**என் மனக்குறையெலாம் தீரும் வண்ணம்** என்று அவர் அடுத்தபடியாகப் பகர்கிறார். ஆத்மசாதகன் ஒருவனுக்கு இருக்கிற மனக்குறைதான் என்ன? உலகத்தவர்களுக்குப் பலவிதப்பட்ட மனக்குறைகள் இருக்கின்றன. பொருள் இல்லையென்றும், போகம் இல்லையென்றும், பதவி இல்லையென்றும், பேர்புகழ் இல்லையென்றும் விதவிதமான குறைகளை உலகத்தவர் கள் உணர்கின்றனர். நன்னெறியில் செல்லுகின்ற சாதகன் ஒருவனுக்கு அத்தகைய குறைகள் ஒன்றும்

இல்லை. அவைகளைப்பற்றி அவன் கனவிலும் கருதுவ தில்லை. தான் கடவுளுடைய அருளுக்குப் பாத்திர மாகவில்லையே என்கின்ற மனக்குறை ஒன்றுதான் ஆத்மசாதகனை அல்லும் பகலும் வாட்டிக்கொண் டிருக்கிறது. தாயுமானவரிடத்தும் அத்தகைய குறை இருந்தது இயல்பே.

**மருமலரெடுத்து உன் இருதாளை அர்ச்சிக்க என்னை வா என்று அழைப்பது எந்நாள்** என்று அவர் பணிந்து வேண்டுகிறார். மணம் நிறைந்த பூ மருமலர் என அழைக்கப்படுகிறது. பூவினிடத்து மணமும் அழகும் தூய்மையும் நிறைந்திருக்கின்றன. மனது எத்தகைய பரிபாகம் அடையவேண்டும் என்பதற்கு மலர் தக்கதொரு எடுத்துக்காட்டாகிறது. மண்ணைப் பயன்படுத்தி செடி வளர்ந்து மலராகப் பரிணமிக் கிறது. மண்ணுலக வாழ்வைப் பயன்படுத்தி மனதை மலருக்கு நிகராகத் திருத்தியமைப்பது ஆத்ம சாதக னுடைய குறிக்கோள். மருமலர் தூவி தெய்வத்தை வணங்குவது போன்று தூய மனம் கொண்டு தெய் வத்தை வணங்குகின்றவனே அவரை அடையத் தகுதியுடைவனாகின்றான். நல்ல மனமுடையவராக இருந்து தாம் யாண்டும் தம்மையாட்கொண்ட இறை வனை வழுத்திவரவேண்டுமென்று தாயுமானவர் விரும் புகிறார். இக்கருத்துக்கள் அனைத்தும் மேற்கண்ட பாடலில் அடங்கியுள்ளன.

---

# மௌனகுரு வணக்கம் - 9

ஆங்கார மானகுல வேடவெம் பேய்பாழ்த்த
ஆணவத் தினும்வலிதுகாண்
அறிவினை மயக்கிடும் நடுவறிய வொட்டாது
யாதொன்று தொடினும் அதுவாய்த்
தாங்காது மொழிபேசும் அரிகரப் பிரமாதி
தம்மொடு சமானமென்னுந்
தடையற்ற தேரிலஞ் சுருவாணி போலவே
தன்னிலசை யாதுநிற்கும்
ஈங்கா ரெனக்குநிகர் என்னப்ர தாபித்
திராவணு காரமாகி
இதயவெளி யெங்கணுந் தன்னரசு நாடுசெய்
திருக்கும்இத னொடெந்நேரமும்
வாங்காநி லாஅடிமை போராட முடியுமோ
மௌனோப தேசகுருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

தென்னம் நெற்று ஒன்று மரத்தினின்று கீழே விழுகிறது. பயன்படுத்துதற்கென அதை நாம் எடுக்கிறோம். நல்ல ஆயுதம் கையில் இல்லாவிட்டால் மேலிருக்கும் நாரை உரித்து உள்ளிருக்கும் தேங்காயைப் பெறுவது சிரம சாத்தியமாகிறது. தேங்காயின் பொருட்டு நார் உரித்தே ஆகவேண்டும். ஆனால் மரத்தில் அது குரும்பையாகத் தோன்றியபொழுது மேல் நார் முக்கியமான இடம் பெற்றிருந்தது. நார்

இல்லாவிட்டால் குரும்பை முற்றி நெற்று ஆகாது. எனவே அதன் வளர்ச்சியில் ஒரு படித்தரத்தில் மேல் நார் முற்றிலும் அவசியமானது. பின்பு, உள்ளிருக்கும் தேங்காயைப் பயன்படுத்துங்காலை முன்பு துணைபுரிந்த நார் பின்பு இடுக்கண் ஆக அமைகிறது. இதற்கு ஒப்பாக மானுட வாழ்க்கையில் ஓர் இயல்பு உண்டு. மனிதன் பரிபக்குவம் அடைந்து பரம்பொருளைச் சார முயலுகின்றபொழுது அதற்குப் பேரிடைஞ்சலாயிருப்பது அகங்காரம். ஜீவாத்மன் பரமாத்மனை அடையவொட்டாது அது பிரித்து வைக்கிறது. அந்த அகங்காரத்தை அகற்றுதற்கே ஆத்ம சாதகர்களனைவரும் அரும் பாடுபட்டிருக்கின்றனர். ஆயினும் ஆரம்பதசையில் அது உயிர்களின் முன்னேற்றத்துக்கு பெருந்துணை புரிந்திருக்கிறது. அகங்காரம் இல்லாவிட்டால் சிற்றுயிர்கள் பேருயிர்களாகப் பரிணமிக்க முடியாது. அகங்காரம் என்றால் என்ன என்பதை நாம் தெரிந்துகொள்ள வேண்டும். தானல்லாததைத் தான் என்று கருதுவது அகங்காரம். ஒரு உதாரணத்தைக் கொண்டு இதை விளக்குவோம். விறகு சுமந்துகொண்டு ஒரு மனிதன் போகிறான். அவனுடைய ஊரும், பேரும் மற்றவர்களுக்குத் தெரியாது. 'விறகு' என்று அழைத்தால் அவன் அதற்குச் செவி சாய்த்து விடையளிக்க ஆயத்தமாயிருக்கிறான். அவன் விறகு அல்ல. அதைச் சுமந்து செல்வதால் தன்னை விறகு மயமாக அவன் வைத்துக்கொள்கிறான். ஜீவாத்மா எந்த உடலை எடுத்திருக்கிறதோ

அந்த உடல் மயமாகத் தன்னை உணர்கிறது. உண்மை யில் தான் உடல் அல்ல. தானல்லாத உடலைத் தான் என்று கருதுவது அகங்காரம். அந்த உடலின் இயல்பு களாகிய நிறம், உயரம், இனம், இடம் முதலியவற்றை யெல்லாம் தன்மயமாக அபிமானிப்பதும் அகங்காரத் தாலேயாம். மனிதனது அந்தக்கரணங்களாகிய மனம், சித்தம், புத்தி முதலியவைகளையும் தன்மயமாக உணர் வது அகங்காரத்தின் விளைவு. இப்படித் தானல்லா ததைத் தான் என்று ஆழ்ந்து பற்றிப் பிடித்திருக்கும் அபிமானத்தை அகற்றுதல் மிகக் கடினமானது. அகங்காரத்தைச் செய்யுள் அமைப்பின் பொருட்டு **ஆங்காரம்** எனத் திரிவுபடுத்தித் தாயுமானவர் பகர் கிறார்.

அகங்காரத்தின் வலிவுக்குச் சான்றுகள் இரண்டு எடுத்துக் கொள்ளப்படுகின்றன. குல வேடர் முதல் சான்றாக அமைகின்றனர். வேடத்தொழில் செய்கிற ஒரு மனிதன் வல்லியல்பு படைத்தவனாகிவிடுகின்றான். உயிர்களிடத்து இரக்கம் காட்ட அவனுக்கு இயலாது. கல் நெஞ்சக்காரன் என்றே அவனைக் கூறலாம். பல தலைமுறைகளாக வேடத்தொழில் செய்திருக்கும் குடும் பம் ஒன்றில் பிறந்துள்ள வேடனைக் குலவேடன் என்று சொல்லலாம். அந்த இயல்பிலேயே ஆழ்ந்து ஊறி வளர்ந்தவன் என்பது அதன் கருத்து. இனிக் குலவேடர் பலர் கூடிக்கொண்டு மான் ஒன்றைத் தாக்குவார்களாகில் அவர்கள் சிறிதேனும் இரக்கம் காட்டமாட்டார்கள். மான் தப்பித்து ஓடுவதற்கு

எவ்விதத்திலும் அவர்கள் இடம் தரமாட்டார்கள்.
அகப்பட்டுக்கொண்ட மான் எவ்வளவுதான் துள்ளி
ஞலும் துடித்தாலும் அதை அவர்கள் விடமாட்டார்
கள். வேடர்கள் பலர் ஒன்றுகூடி வெவ்விய வினை
யாற்றுவதற்கு ஒப்பாகிறது ஆங்காரத்தின் செயல்.
தப்பித்துக்கொள்ள முயலும் ஜீவனை அது படாதபாடு
படுத்துகிறது. இரண்டாவது சான்ருக அமைவது
வெம்பேய். கொடூரத்தன்மை வாய்ந்திருப்பது பேய்.
கட்டுலஞகாதிருந்து கொடிய காரியத்தைச் செய்கின்ற
இயற்கைச் சக்திக்குப் பேய் என்று பெயர் வந்துள்
ளது. அது ஓய்வு எடுத்துக்கொள்வதில்லை. ஓரிடத்தில்
அது கட்டுண்டு இருப்பதில்லை. யாரை வேண்டுமாஞ
லும் துன்புறுத்தும் பாங்கு அதற்குண்டு. அத்தகைய
வெவ்விய இயல்பு எந்த உயிர்க்கு அமைந்திருக்கிறதோ
அந்த உயிரும் பேய் என்றே அழைக்கப்படுகிறது.
வேடர்கள் செய்கின்ற செயலையும் கொடிய பேய் செய்
கிற செயலையும் ஒன்று சேர்த்துச் செய்ய வல்லது அகங்
காரம். அதனிடத்திருந்து தப்பித்துக்கொள்ள வல்ல
வனே தெய்வத்தையடைய அருகதையுடையவஞகின்
ருன். ஆனுல் ஆத்ம சாதகன் ஒருவன்மீது அது
செலுத்துகிற ஆதிக்கம் சிறிதேனும் குறைந்து போவ
தில்லை. அக்கருத்தை, **ஆங்காரமான குலவேட வெம்பேய்**
என்று தாயுமானவர் இயம்புகிருர்.

மரம் செடி கொடிகள் வளர்ப்பதற்கு உபாதான
காரணமாயிருப்பது மண். அதே விதத்தில் ஜீவாத்ம
ஞுக்குச் சரீரம் முதலியன அமைவதற்கு உபாதான

காரணமாயிருப்பது ஆணவம். ஜீவனை அணுப்போன்று நுண்ணியதாக்கி விடுவதாலும் அதன்கண் அக்ஞான இருளை ஆரோபித்து விடுவதாலும் இதற்கு ஆணவம் என்கிற பெயர் வந்தது. அணு என்னும் சொல்லி லிருந்து ஆணவம் என்ற சொல் வந்துள்ளது. தானல் லாததைத் தான் என்று பாவிப்பது அகங்காரம் என்று ஏற்கனவே இயம்பினோம். உடல் தான் அல்ல. அந்த உடலுக்கு உபாதான காரணமாக ஆணவம் இருப்ப தால் அகங்காரத்துக்கே மூலமாயிருப்பது ஆணவம். மண்ணைவிட அதினின்று உண்டாயிருக்கும் தென்னை நார் வலியதாயிருக்கிறது. அதே பாங்கில் மூலகாரண மாயிருக்கும் ஆணவத்தைவிட அகங்காரம் வலியதா யிருப்பது கண்கூடு. இக்கோட்பாட்டை, **பாழ்த்த ஆண வத்தினும் வலிது காண்** என்று அண்ணல் இயம்புகின் றார். ஆணவத்தைப் பாழ்த்தது என்று ஏன் பகர வேண்டும்? ஜீவாத்மன் பரிபக்குவமடைந்து பரமனைச் சேர்கின்றபொழுது ஆணவம் தானாக அகன்றுபோய் விடுகிறது. சிசு உருவெடுப்பதற்குத் தாயின் கர்ப்பம் இன்றியமையாதது. ஆனால் பிறப்பெடுக்கின்ற பொழுது கர்ப்பப்பையையே புறக்கணித்துவிட்டு சிசு உலகில் வந்து விடுகிறது. பிறந்தான பிறகு பிறவிக்கு ஏதுவாயிருந்த கர்ப்பத்தைப் பாழ்த்த பிறவிப்பை என்று பகர்வதில் பொருள் இருக்கிறது. முக்தியடைய விரும்புகின்றவர்கள் அதே பாங்கில் பந்தத்தை உண்டு பண்ணியிருந்த ஆணவத்தைப் பாழ்த்த ஆணவம் என்று பகரலாம்.

ஆங்காரம் செய்யக்கூடிய அடாத செயல் மற்றொன்று உண்டு. புராண வரலாறு ஒன்றை அதற்குச்சான்ருக எடுத்துக் கொள்ளலாம். தேவேந்திரன் மயக்கத்தால் பன்றியாக வடிவெடுத்தான். பன்றி உடலைத் தன் சொந்த சொரூபமென்று அகங்கரித்து அதில் திருப்தியடைந்தவனுக வாழ்ந்திருந்தான். அவன் படைத்திருந்த இழிநிலையைப் பார்த்து தேவர்களுக்கே வெட்கம் வந்துவிட்டது. பன்றியிடம் சென்று, "நீ உண்மையில் பன்றியல்ல; எங்களுக்கெல்லாம் தலைவனுயுள்ள தேவேந்திரன்" என்று அவனுடைய நிஜ சொரூபத்தை அவனுக்கு அவர்கள் ஞாபக மூட்டினுர்கள். ஆனுல் பன்றி வடிவினன் அவர்கள் புகட்டிய அறிவை ஏற்றுக்கொள்ளவில்லை. "ஓடிப்போய்விடுங்கள். நான் இன்புற்றிருக்கும் தாய்ப்பன்றி. என் குட்டிகளோடு நான் இனிது வாழ்ந்திருக்கிறேன். என்னைத் தொந்தரவுக்கு ஆளாக்காதீர்கள்" என்று தன்னைப் பன்றியாக அகங்கரித்திருந்த தேவேந்திரன் பகர்ந்தான். அவன் அடைந்த அந்நிலையில் ஜீவர்கள் அனைவரும் இருக்கிருர்கள். ஒரு ஜீவன் தன்னை மனிதன் என்று அகங்கரிக்கிறது. மற்றொரு ஜீவன் தன்னை விலங்கு என்று அகங்கரிக்கிறது. இன்னும் ஒன்று தன்னைப் பறவையாக நினைத்துக் கொள்கிறது. எண்ணிறந்த உடலங்கள் சொரூபமாக ஜீவாத்மாக்கள் தங்களை எண்ணிக் கொள்வதற்கான மயக்கம் வந்திருக்கிறது. இவையாவும் அகங்காரத்தின் செயலாகும். இக்கருத்தை, **அறிவினை மயக்கிடும்** என்று தாயுமானவர் சொல்லுகிருர்.

இருமைகள் நிறைந்தது வாழ்வு. இருமைகள் என்றால் என்ன என்பதைத் தெரிந்துகொள்ளவேண்டும். இரவும், பகலும் காலத்திலுள்ள இருமையாகும்; மலையும், மடுவும் இடத்திலுள்ள இருமையாகும். இப்படி வாழ்க்கையில் பல இருமைகளிருக்கின்றன. வெற்றியும் தோல்வியும் வாழ்க்கைக்குரிய முக்கியமான இருமையாகின்றன. மனிதன் முறையாக முயற்சிகள் பல எடுத்துக்கொள்ளவேண்டும். ஆனால் எடுத்துக் கொண்ட முயற்சிகளெல்லாம் வெற்றியுடன் முடிவு பெறமாட்டா. தோல்வியுறுங்கால் தோல்விக்குக் காரணம் யாது என்பதைத் துருவியாராயவேண்டும். அதே பாங்கில் வெற்றிக்கு மூலகாரணம் எது என்பதைப் பாங்குடன் அறியவேண்டும். மனதை நடுவு நிலையில் வைத்திருப்பவர்களுக்கே அது சாத்தியமாகிறது. ஆனால் அகங்காரம் பிடித்திருப்பவனுக்கு நடுவு நிலை உண்டாவதில்லை. வெற்றிக்குத் தானே கர்த்தாவென்று இறுமாப்படையும் பாங்கு வந்துவிடுகிறது. பின்பு தோல்வியுண்டாகுங்கால் சோகமும் சீற்றமும் வந்து விடுகிறது. அதுவும் நடுவு நிலைக்குப் புறம்பாகிறது. இங்ஙனம் தற்பெருமை, தளர்வு என்னும் இரண்டு விதமான ஓரங்களில் மனது சார்ந்துவிடும்பொழுது நடுவு நிலையினின்று அது பிறண்டுவிடுகிறது. அகங்காரமே அதற்குக் காரணமாகிறது. வாழ்வில் இன்பத் துக்கேதுவான நிகழ்ச்சிகளும் துன்பத்துக்கேதுவான நிகழ்ச்சிகளும் உண்டாகின்றன. மகிழ்ச்சியில் மூழ்கி விடுகின்றவனும் துன்பத்தில் மூழ்கிவிடுகின்றவனும்

நடுவுநிலை பிறண்டவனுகின்றான். அத்தகைய தடுமாற்றமும் அகங்காரத்தினின்றே வருகிறது. உலகத்தவர் ஒருவனைப் போற்றவும் தூற்றவும் செய்வார்கள். இந்த இரண்டுவிதப் பேச்சுக்களும் மிக எளிதில் அமைந்துவிடும். யாரை வேண்டுமாறுலும் ஏதேனும் ஒரு காரணத்தை முன்னிட்டுப் போற்றலாம். பின்பு, ஏதேனும் ஒரு சாக்குச் சொல்லி யாரைவேண்டுமாறுலும் தூற்றலாம். நடுவுநின்று பழகுகின்றவன் புகழ்ச்சி இகழ்ச்சியாகிய இரண்டிலும் கட்டுப்படலாகாது. அகங்காரம் பிடித்திருப்பவனுக்குப் புகழ்ச்சியில் பெரிய விருப்பம்; இகழ்ச்சியில் வெறுப்பு. விருப்பு, வெறுப்பு என்கின்ற உள்ளத்தின் ஊசலாட்டமும் அவனிடத்திருந்து வருகிறது. நல்ல ஆத்மசாதகன் ஒருவன் வெற்றி தோல்வி, இன்பம் துன்பம், புகழ்ச்சி இகழ்ச்சி ஆகிய இருமைகளில் கட்டுண்டு விடலாகாது. விருப்பு வெறுப்புக்கும் அவன் அடிமை ஆய்விடலாகாது. நடுவுநிலை வகிக்கும் தராசு எடையை உள்ளபடி குறித்துக் காட்டுவது போன்று மனதை ஓரம் சாரவொட்டாது நடுவுநிலையில் வைத்துப் பழகுகின்றவனே நல்லறிவு படைத்தவனுகின்றான். விவேகம் அவனிடத்து படிப்படியாக ஓங்குகிறது. ஆனுல் நல்லறிவு வளர்ச்சிக்கு இடைஞ்சலாயிருந்து மனத்தடுமாற்றத்தை உண்டுபண்ணுவது அகங்காரம். இக்கோட்பாட்டை, **நடுவறிய வொட்டாது** என்று அண்ணல் இயம்புகின்றார். நடுவறிதலைப் பற்றிய மற்றொரு கோட்பாடு உண்டு. மானுட அமைப்பில் பிள்ளைப் பருவத்திலிருந்துவிருத்தாப்பியம்

வரையில் நடுவாயிருப்பது ஆத்மசொரூபம். விழிப்பு, உறக்கம், கனவு ஆகியமூன்று அவஸ்தைகளுக்கு நடுவாயிருப்பது ஆத்ம சொரூபம். போக்கு வரவு முதலியவைகளில் தட்டுப்படாது நடுவாயிருப்பது ஆத்மா. ஆனால் அகங்காரம் குறுக்கிடுவதால் அந்த நடுநிலையைச் சாதகன் அறிந்துகொள்வதில்லை.

தண்ணீரை எந்தப் பாத்திரத்தில் வார்க்கின்றேமோ அந்தப் பாத்திரத்தின் வடிவை அது எடுத்துக்கொள்கிறது. அதனால் தண்ணீருக்குத் தோஷம் ஒன்றும் வந்துவிடாது. அகங்காரம் சூழ்நிலைக்கு ஒப்ப விதவிதமான வடிவெடுக்கிறது. அதை முன்னிட்டு அதற்கு வருகின்ற வெறியோ மிகக் கொடியது. ஜீவன் ஒருவன் மேல் நாட்டவனாகப் பிறந்தால் அதை முன்னிட்டுத் தன்னை மேலோனாகக் கருதி இறுமாப்பு எய்துகிறான். அதே ஜீவன் சீனனாகவோ ஜப்பானியனாகவோ பிறப்பெடுத்தால் அதைக்குறித்தும் பெருமை பாராட்டுகிறான். பிறப்பெடுத்துள்ள ஒரு ஜீவனை எந்த மொழிக்கு உரியவனாகவும் மாற்றிவிடலாம். தமிழனாகப் பிறந்த ஒரு ஜீவன் ஆங்கிலேயச் சூழ்நிலையில் வளர்ந்து ஆங்கில மொழியை நன்கு கற்றுக் கொள்கிறான். அதற்குமாறாக ஆங்கிலக் குழந்தை ஒன்று தமிழ்ச் சூழ்நிலையில் வளர்ந்துவந்தால்தமிழைத் தன் தாய்மொழி என்று பெருமை பாராட்டும் பான்மை வந்துவிடுகிறது. தான் பேசும் மொழியே உலகிலுள்ள மொழிகளில் சாலச் சிறந்தது என்னும் இறுமாப்புக்கு மூலகாரணமாயிருப்பது அகங்காரம்.

இனி, ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய ஜாதியைப் பற்றியும் குலம் கோத்திரத்தைப் பற்றியும் இறுமாப் புறுபவன் ஆகின்முன். தனது நாட்டைக் குறித்தும் ஊரைக்குறித்தும் பெருமைபாராட்டுவதும் மாந்தரது இயல்பு. தானல்லாததைத் தான் என்று கருதுவதாலும், தனது அல்லாததைத் தனது என்று கருதுவதாலும் இத்தகைய செருக்குகள் எல்லாம் உள்ளத்தில் உருவெடுத்து விடுகின்றன. அப்படி உருவெடுத்திருக்கின்ற மனப்பான்மையை மாற்றியமைப்பது எளிதன்று. இக்கருத்தையும், **யாதொன்று தொடினும் அதுவாய்த் தாங்காது மொழிபேசும்** என்று தாயுமானவர் இயம்புகிருர். இவையாவும் அகங்காரம் செய்கின்ற துஷ்டச் செயல்களாகும். ஒவ்வொரு ஜீவனும் தான் தான் படைத்துள்ள அகங்காரத்துக்கு அந்நியமான கூற்று எதையும் ஏற்றுக்கொள்வதில்லே. புறம்பான கூற்றைத் தாக்கிப் பேசுவதே அதன் போக்கு ஆகும். அப்போக்கைத்தான் தாங்காது மொழிபேசும் என்று அவர் விளக்குகிருர்.

இயற்கையின் நடைமுறைக்கு மும்மூர்த்திகள் கர்த்தாக்களாகின்முர்கள். பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் ஆகியவர்களே மும்மூர்த்திகள். படைக்கும் தொழிலே பிரம்மா செய்கிருர். காத்தல் விஷ்ணுவுக்கு உரியது. அழித்தல் ருத்திரனுடைய கடமை. இந்த மூன்று செயல்களும் நிகழாவிட்டால் இயற்கையில் ஒழுங்குப் பாடு இராது. இம்மூவிதச் செயல்களும் இயற்கையில் சிறியவை, பெரியவை ஆகிய அனைத்தின் வாயிலாக

யும் நிகழ்ந்து வருகின்றன. சிறிய செடி ஒன்றைச் சான்றாக எடுத்துக்கொள்வோம். அது முளைத்து வருகிறது. அச்செயல் சிருஷ்டியாகும். வளரும் பொழுது அது பாதுகாக்கப்படுகிறது. அது ஸ்திதி. முதிர்ந்து பட்டுப்போய் அது மற்றொரு செடிக்கு உணவாகிறது. அச்செயல் சம்ஹாரம். பிரபஞ்சத்தில் புதிய நக்ஷத்திரம் உருவெடுக்கிறது; நிலைத்திருக்கிறது; தேய்ந்து மறைகிறது. இது பெரிய பொருள் ஒன்றில் நிகழும் மூவிதச் செயலாகும். மனிதனுடைய முயற்சியில் இம்மூவிதச் செயல்கள் நடைபெற்று வருகின்றன. பெயரளவில் அச்செயல்களுக்கு மனிதன் கர்த்தா. அவன் மூலமாக நிகழ்கின்ற நிகழ்ச்சிகளையெல்லாம் மும்மூர்த்திகளின் செயல்கள் என்றோ அல்லது பரம் பொருள் செயல் என்றோ கருதுவதே முறை. ஆனால் அகங்காரம் பிடித்திருக்கின்ற ஒருவன் அப்படிப் பகர மாட்டான். இந்தப் பெரிய வீட்டைக் கட்டியவன் யார் என்று தெரியுமா? அந்த அழகிய தோட்டத்தை அமைத்தவன் யார் என்று தெரியுமா என்று அவன் இறுமாப்புறுகிறான். சிருஷ்டித் தொழிலிலே தான் நான்முகனுக்குக் குறைந்தவனல்லன் என்பது அவனுடைய கர்வம் பிடித்த கருத்து ஆகும். அதே மனிதன் பல தொழிலாளிகளுக்கு வேலை கொடுக்கிறான். நல்ல சம்பளமும் தருகிறான். வீடுவாசல் வசதிகளையும் செய்துகொடுக்கிறான். இத்தனை உயிர்களைக் காப்பாற்றுவது யார் தெரியுமா? என்று அவன் பெருமை அடித்துக்கொள்கின்றான். காக்கும் தொழிலில் தான்

திருமாலுக்குப் பிந்தியவனல்லன் என்று அவன் அகங்கரிக்கிறான். அதே மனிதன் தனக்கு எதிரிகளாகத் தென்படுபவர்களைத் தாக்குகிறான். வித விதமான சூழ்ச்சிகளைச் செய்து அவர்களை ஒழித்துவிடவும் செய்கிறான். துடைக்கும் செயலில் தான் ருத்திரமூர்த்திக்குப் பின் வாங்கியவனல்லன் என்று தன்னை மதிப்புப் போட்டுக்கொள்கின்றான். இதெல்லாம் அகங்காரத்தின் விளைவு ஆகும். அத்தகைய அகங்காரத்தைக் குறித்து, **அரிகரப் பிரம்மாதி நம்மொடு சமானமென்னும்** என்று அவர் இயம்புகிறார்.

தேர் ஒன்றின் வடிவத்தை நாம் எப்படி வேண்டுமானாலும் மாற்றியமைக்கலாம். அதைச் சிறியது அல்லது பெரியது ஆக்கலாம். உயர்ந்தது அல்லது தாழ்ந்தது ஆகச் செய்யலாம். அதன் அலங்காரத்தை வெவ்வேறு விதமாக மாற்றியமைக்கலாம். சக்கரங்கள் நன்கு சுழன்று வருவதற்கான பாங்கை உண்டு பண்ணலாம். அத்தகைய தேர் வெவ்வேறு இடங்களுக்குப் போகிறது. அதன் மேலிருக்கும் பகுதிகளும், பொருள்களும் மாறி மாறி அமைவனவாகும். இடம் மாறிப் போய்க்கொண்டிருப்பதற்கிடையிலும் ரதத்தின் அமைப்பில் பெரிய திருத்தங்கள் அமைந்து கொண்டிருப்பதற்கிடையிலும் சக்கரங்களைத் தாங்கியிருக்கும் அச்சாணி ஒரு விதமான மாறுதலும் அடையாதிருக்கின்றது. அசைந்து இயங்கும் தேரில் அது அசையாது நிற்கிறது. அந்த அச்சாணிக்கு ஒப்பானது மனிதனிடத்திருக்கும் ஆங்காரம். மானுட சரீரமே

ஒரு ரதத்துடன் ஒப்பிடப்பட்டிருக்கிறது. ஒரு சிசுவின் வடிவத்திலிருந்து விருத்தன் வடிவம் வரையில் சரீரம் என்னும் ரதம் எத்தனையோ வித அலங்காரங்களைப் பார்த்திருக்கிறது. வெவ்வேறு இடங்களுக்கு அது சென்றிருக்கிறது. சரீர வாழ்க்கையில் அமையும் மாறுதல்கள் அனைத்துக்கும் அடிப்படையாயிருந்து உறுதி தருவது அகங்காரம். சக்கரத்தின் அச்சாணி போன்று உடல் வாழ்வுக்கு அது உறுதி கொடுக்கிறது. அகங்காரத்தின் வலிவினாலேயே உயிர்களனைத்தும், உடல் வாழ்க்கையைக் கொண்டு செலுத்தி வருகின்றன. உடல் வாழ்க்கையைக் கடந்து அப்பாலிருக்கும் நிலைக்குப் போக முயலுகின்றவர்களுக்கு அந்த அகங்காரம் ஓர் இடைஞ்சல் ஆகிறது. இக்கோட்பாட்டை, **நடையற்ற தேரில் அஞ்சுருவாணி போலவே தன்னில் அசையாது நிற்கும்** என்று தாயுமானவர் பகர்கிறார். அச்சாணி அஞ்சுரு ஆணி எனச் சொல்லப்படுகிறது.

இராமாயணத்தில் இராமனைப்பற்றி நாம் எவ்வளவு தெரிந்து கொள்கிறோமோ, கிட்டத்தட்ட அவ்வளவு இராவணனைப் பற்றியும் தெரிந்தாகவேண்டும். இவனுடைய பாங்குகளையெல்லாம் நன்கு தெரிந்து கொள்ளாவிட்டால் இராமனையும் நாம் முழுதும் தெரிந்து கொள்ள முடியாது. இராவணன் மட்டும் இல்லாது போயிருந்தால் இராமாயணமே உருவெடுத்திருக்க முடியாது. அத்தகைய இராவணனைத் தத்துவபூர்வமாக நாம் அறிந்தாகவேண்டும். அவன் பத்துத் தலைகளையும் இருபது கைகளையும் உடையவன். தன்

விருப்பம் போன்று ஒரு தலையுடன், இரண்டு தலைகளுடன், அல்லது அதற்கு மேற்பட்டுப் பத்துவரையில் எத்தனை தலைகளுடன் வேண்டுமானாலும் அவன் தன்னைத் தோற்றுவித்துக்கொள்ளமுடியும். விரும்பியவாறு வடிவெடுக்க வல்லவன் என அவன் இயம்பப்படுகிறான். கொடிய அகங்காரத்தோடு கூடிய மனம் இராவண சொரூபம் படைத்தது. மனது ஞானேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து ஆக பத்து இந்திரியங்களைத் தனித்தனியாக அல்லது தொகுத்துப் பயன்படுத்த வல்லது. பத்து வரையில் எத்தனை தலைகளுடன் வேண்டுமென்றாலும் தோன்ற இராவணன் வல்லவன் என்பதன் கருத்து இதுவே. இராவணனுடைய தலைகளை வெட்ட வெட்ட அவைகள் புதிய வடிவெடுத்து முளைத்துக்கொண்டே இருக்கின்றன. அகங்காரத்தினுடைய போக்கும் அத்தகையது. விவேகத்தால் அதை ஆத்ம சாதகன் அழித்துக் கொண்டே போகிறான். ஆனால் அந்த அகங்காரமோ புதிய புதிய வடிவங்களை எடுத்துக்கொண்டே இருக்கிறது. மனதின் திறமைக்கு எடுத்துக்காட்டாக இருபது கைகள் வரையில் அந்த அரக்கனுக்கு அமைந்திருக்கின்றன. மனம் ஜாக்கிரதம், சொப்பனம், சுஷுப்தி ஆகிய மூன்று அவஸ்தைகளிலும் ஆட்சி புரிகிறது. இராவண வடிவமாக அம்மனம் கருதப்படும் பொழுது மூவுலகிலும் அதனுடைய ஆட்சி செல்லுகிறது எனப்படுகிறது. தன்னிடத்து சர்வ சக்தி இருக்கிறதென்றும் தனக்கு நிகராக வேறு யாரும் இல்லையென்றும் இராவணன்

பகர்ந்தது போன்று அகங்காரம் பிடித்த பொல்லாத மனதும் பகர்கிறது. இக்கருத்துக்களை, **ஈங்கார் எனக்கு நிகர் எனப் பிரதாபித்து இராவணாகாரமாகி இதயவெளி எங்கணுந் தன்னரசு நாடு செய்திருக்கும்** என்று அகங்காரத்தின் திறமையைக் குறித்துத் தாயுமானவர் பகர்கிறார். தங்குதடையின்றித் தன் கருத்தை வெளியிடுவது பிரதாபித்தல் என்பதாகும். பிரஸ்தாபித்தல் என்னும் சொல் பிரதாபித்தல் எனத் திரிவுபடுகிறது. இராவணாகாரம் என்பது இராவண வடிவம் எனப் பொருள்படுகிறது. உள்ளத்தினுள் இருக்கும் பெருவெளி இதயவெளியென் இயம்பப்படுகிறது. அந்த இதய வெளியில் ஜாக்கிரதம், சொப்பனம், சுஷுப்தி ஆகிய மூன்று அவஸ்தைகள் நாள்தோறும் மாறி மாறி அமைந்து கொண்டிருக்கின்றன. அந்த மூன்று அவஸ்தைகளின்மீது அகங்காரம் தன் ஆதிக்கத்தைச் செலுத்தி வருகிறது. இராவணன் மூன்று லோகங்களிலும் ஆதிக்கம் செலுத்தி வந்தான் என்பது ஐதிகம். அவனுக்கு நிகராக இருக்கின்ற அகங்காரம் மூன்று அவஸ்தைகளின்மீது தன் ஆணையைச் செலுத்துவது இயல்பே.

இந்த அகங்காரத்தைப்பற்றிய மற்றோர் உண்மையை நாம் அறிந்திருப்பது அவசியமாகிறது. தானல்லாததைத் தான் என்று கருதுவது அகங்காரம் என்று ஏற்கனவே இயம்பியுள்ளோம். உடலும், அகக்கரணங்களாகிய மனம், சித்தம், புத்தி முதலியனவும் புறக்கரணங்களாகிய கண், காது, வாய், மூக்கு

முதலியனவும் ஆத்மாவின் நிஜ சொரூபமல்ல. ஆனால் இவையாவையும் தனது நிஜ சொரூபமாகக் கருது வதனாலேயே சிற்றுயிர்கள் பேருயிர்களாகப் பரிண மித்து வருகின்றன. அப்படிப் பரிணமித்துவரும் தறு வாயில் ஆங்காரம் முற்றிலும் அவசியமாகிறது. அகங் காரமில்லாவிடில் சிற்றுயிர்களுக்கு முன்னேற்றமில்லை. தென்னங் குரும்பையின் ஆரம்பதசையில் மேல்நார், உள்ளிருக்கும் பருப்பு, ஓடு முதலியன வேறுபாடற்ற நிலையிலிருக்கின்றன. முற்றிலும் முதிர்ந்த பிறகே இவைகளுக்கிடையில் வேற்றுமையுண்டாகிறது. அதன் பிறகு தேங்காயை நாரினின்று பிரித்தாகவேண்டும். கருவிலிருக்கும் சிசு முற்றிலும் கருமயமாயிருக்கிறது. முதிர்ந்து பிறப்பதற்கு ஏற்றதாக ஆய்விடுங்கால் கருப்பை அதற்குத் தடையாகிறது. படாதபாடுபட்டுக் கருவினின்று விலகி அது வெளியில் வந்தாகவேண்டும். அப்படிக் கருவைவிட்டு அது விலகிக்கொள்ளாவிட் டால் அதன் வாழ்வே தடைபட்டுப்போம். அகங்காரம் தென்னை நார்போன்றதும், கருப்பை போன்றதும் ஆகும். நல்ல மானுட நிலைக்கு வரும் பரியந்தம் அகங் காரம் பெருந்துணைபுரிகிறது. மனிதன் உடல் சொரூப மல்ல, ஆத்மசொரூபம். அந்த ஆத்ம சொரூபம் பரமாத்மனுக்குரியது என்னும் ஞானத்துக்கு ஜீவன் தன்னைப் பக்குவப்படுத்தியாகவேண்டும். அந்த முயற் சியில் அவன் ஈடுபடுகிறபொழுதுதான் ஆத்மசொரூப மல்ல உடல் சொரூபம் என்கின்ற அகங்காரம் முன் னணியில் இருந்துகொண்டு அவனுடைய ஆத்ம சாத

னத்துக்குப் பெருந்தடை செய்கிறது. எவ்வளவு முயன்ருலும் தேகாத்ம புத்தி அல்லது தன்னை தேகம் என்று கருதுகிற அகங்காரம் அகலுவதில்லை. இக்கருத்தை, **இதனெடு எந்நேரமும் வாங்காநிலா அடிமை போராட முடியுமோ?** என்று தாயுமானவர் கேட்கிருர். வாங்கா நிலா என்பதற்கு விலகியிருக்காமல் என்பது பொருளாகிறது. உடல் நான் என்கிற உணர்விலிருந்து விலகியிருப்பதற்கு மாருகத் தன்னை உடல் மயமாக எண்ணிக் கொண்டு விதவிதமான இன்னல்களுக்கு ஓயாது ஆளாவது பொருந்துமா என்பது இதன் கருத்து.

இராவணனுக்கும் அகங்காரத்துக்கும் பாங்கு ஒன்று. சீதை சிறையிலிருந்தபொழுது இராவணனைச் சிறிதும் நினையாது சதா இராம சிந்தனையிலேயே ஆழ்ந்திருந்தாள். இராவணன் தன்னை வெல்ல வந்தபொழுது மிகத் திறமையுடன் அவனை முறியடித்து விட்டுத் திரும்பவும் இராம சிந்தனையிலேயே மூழ்கி விட்டாள். ஆத்மசாதகர்கள் சீதை செய்த செயலைச் செய்யவேண்டும். அகங்காரத்தோடு போராடவேண்டிய அவசியமில்லை. சித்தமிசை குடிகொண்டுள்ள தெய்வத்திடத்துப்பரிந்து விண்ணப்பம்செய்துஅவரை விடாது வழுத்துவதே சாதகன் செய்யவேண்டிய செயலாகும். அவன் கடவுளைச் சார்ந்திருக்குமளவு அகங்காரத்தின் வேகம் தணிந்துவிடும். ‘அதனேடுபோராட மாட்டேன், இறைவா! உன்னையே நான் சார்ந்திருக்க அருள்புரிவாயாக, என்பது தாயுமானவர் கருத்தாகும். அகங்காரத்தைப்பற்றி அவர் கொண்டுள்ள கருத்துக் களைத்தும்மேற்கூறியபாடலில்அடங்கியிருக்கின்றன.

---

# மௌனகுரு வணக்கம் - 10

பற்றுவெகு விதமாகி யொன்றைவிட் டொன்றனைப்
பற்றியுழல் கிருமிபோலப்
பாழ்ஞ்சிந்தை பெற்றநான் வெளியாக நின்னருள்
பகர்ந்துமறியேன் துவிதமோ
சிற்றறிவ தன்றியும் எவரேனும் ஒருமொழி
திடுக்கென் றுரைத்தபோது
சிந்தைசெவி யாகவே பறையறைய வுதரவெந்
தீநெஞ்சம் அளவளாவ
உற்றுணர உணர்வற்றுன் மத்தவெறி யினர்போல
உளறுவேன் முக்திமார்க்கம்
உணர்வதெப் படியின்ப துன்பஞ் சமானமாய்
உறுவதெப் படியாயினும்
மற்றெனக் கையநீ சொன்னவொரு வார்த்தையினை
மலையிலக் கெனநம்பினேன்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

*பேரூர் ஒன்றில் ஒரேவீதியில் பக்கம்பக்கம்இரண்டு பலகாரக் கடைகள் இருக்கின்றன. ஒன்றில் புசிப்பதற்குப் புட்டும் பருகுதற்கு நன்னீரும் கிடைக்கும். மற்றொன்றில் அறுசுவைபொருந்திய பக்ஷணங்களும்,பருகுதற்குப் பலவகைப் பானங்களும் இருக்கின்றன. சிற்றுண்டிச்சாலைகள் இவ்விரண்டினுள் முதலில் பகர்ந்துள்ளதின்கண் அருந்தச் செல்லுகின்றவர்கள் மிகச் சிலரேயாவர். ஒவ்வொருவனும் ஒருதடவை அல்லது*

இரண்டு தடவை அக்கடைக்குச் செல்வான். ஆனால் மற்றதனிடத்தோ கணக்கற்ற பேர் பல தடவைகள் போய்க்கொண்டிருப்பார்கள். அதற்கேற்ற காரணமும் உண்டு. மனிதனுக்கு உடல் பற்று இருக்கும் வரையில் உணவுப்பற்றும் இருந்தே தீரும். ஆனால் ஒரேவிதமான உணவைத் தொடர்ந்து பலநாட்களாக ஏற்க உடல் ஒருப்படாது. உள்ளமும் மறுதலிக்கும். நாளைக்கு ஒரு வித உணவை ஏற்றால் உடல் நன்கு உறுதிபெறும்; உள்ளம் உவகையுறும். விதவிதமான உணவுகளில் பற்று வைத்திருப்பதே உடல் படைத்திருப்பவர் அனை வருக்கும் உரிய இயல்பாம். மானுடர் மட்டுமல்ல, உடல் வாழ்வு வாழுகின்ற உயிர்களனைத்தும் விதவித மான உணவு வகைகளையே ஆவலுடன் நாடித் திரிகின் றன. பற்று வெகுவிதமாதல் உயிரனைத்துக்கும்பொது வானது. கண்காட்சிசாலை ஒன்றுக்கு மக்கள் விருப் புடன் செல்லுகின்றனர். அங்கே பார்ப்பதற்கு ஏதே னும் ஒரே ஒரு பொருள் இருக்குமாகில் ஆங்கு அவர்கள் நெடுநேரம் கழிக்கமாட்டார்கள். திரும்பவும் ஆங்குச் செல்ல இசைய மாட்டார்கள். ஆனால் கணக்கற்ற பொருள்கள் அரிய முறைகளிலே காட்சிக்கு அமைந்து வைக்கப் பெற்றிருக்குமாயின் அவைகளைப் பார்க்கச் செல்லுகிறவர்கள் பேருக்கத்துடன் நெடுநேரத்தை அக் கண்காட்சிச் சாலையில் கழிப்பார்கள். ஒவ்வொரு பொருளிடத்தும் சிறிது நேரம் பற்று வைத்தால் அதெல்லாம் சேர்ந்து நெடுநேரம் கடந்து போவது காட்சி காண்போருக்கு இடுக்கணாகத் தோன்றாது.

இசை கேட்பதில் மக்களுக்குப் பெரு விருப்பம். ஆனால் ஒரே ராகத்தையும், தாளத்தையும் உடைய ஒரே பாட்டைக் கேட்டுக்கொண்டிருக்க யாருக்கும் மகிழ்ச்சி ஏற்படாது. விதவிதமான ராகங்கள், 'தாளங்கள், மெட்டுக்கள் அடங்கிய பலவிதமான பாட்டுக்கள் என்றால் நெடுநேரம் கேட்டுக் கொண்டிருப்பதற்கும் மக்கள் ஒருப்படுவர். ஏனென்றால் பற்று வெகுவிதமாயிருப்பதே வாழ்வின் இயல்பு ஆகிறது.

இப்பிரபஞ்சம் வெகுவிதமான பற்றுக்கு இடங்கொடுக்கிறது. ஒவ்வோர் உயிரும் ஒருவித உடல்பற்று வைத்திருக்கிறது. அதில் சலிப்பு ஏற்பட்டதும் மற்றோர் உடலை எடுக்க அவ்வுயிர்முந்துகிறது. இங்ஙனம் பிரபஞ்சம் முழுதும் பற்றுமயமாயிருக்கிறது. சர்வேசுவரன் அமைத்து வைத்திருக்கின்ற பெரிய போஜன சாலை என்றும், கண்காட்சிச் சாலை என்றும், இன்னிசைக் கூடம் என்றும் இப்பிரபஞ்சத்தைப் பகரலாம். உயிர்களனைத்தும் இதன்கண் விதவிதமான பற்றுதல் வைத்து வாழ்ந்திருக்கின்றன. உயிர் ஒன்று எதனிடத்துப் பற்று வைக்கிறதோ அந்த மயமாய் அது விரைவில் அல்லது நாளடைவில் மாறியமைந்து விடுகிறது. கணக்கற்ற பிறவிகளில் உயிர்கள் கணக்கற்ற உடல்களை எடுப்பதற்குப் பற்று ஒன்றே முதற் காரணமாகிறது. புழு ஒன்றை இப்பாரினுள் காண்கிறோம். அது இடம் மாறிப் போதலில் சிறப்பு ஒன்று உண்டு. சரடுபோன்று நீண்ட உடல் படைத்திருக்கும் அப்புழு தன் உடலின் ஒரு பகுதியைக்கொண்டு ஓரிடத்

தைப் பற்றிப் பிடித்துக்கொண்டு தன் உடலின் மற்ற பகுதியைக் கொண்டு புதியதோரிடத்தைத் தேடித் தாவிப் பிடிக்கும். அப்படிப் புதிய பற்றுக்கோடு கிடைத்ததும் பழைய பற்றை அது விட்டுவிடுகிறது. இப்போக்கில்தான் ஜீவர்கள் கணக்கிலடங்காத உடலங்களிலும், வாழ்க்கை முறைகளிலும் பற்றுதல் வைத்துத் தங்கள் ஜீவிதத்தைக் கொண்டு செலுத்தி வருகின்றனர்.

ஒரு ஜீவனுடைய வாழ்க்கையில் பற்றுதலுக்கு ஏதுவாக இருக்கும் தத்துவம் எது என்னும் கேள்வி எழலாம். சிந்தை அல்லது மனதே பற்றுதலுக்குக் காரணமாகிறது. மனது மனிதனுக்குத்தான் உரியதென்று நாம் சிறப்பித்துச் சொல்லலாம். ஆனால் அந்த மனதின் ஆரம்பதசையின் அறிகுறிகள் சிற்றுயிர்களிடத்தும் இருக்கின்றன. உணர்ச்சிக்கு இருப்பிடம் மனது. சிறிய உணர்ச்சியுடைய உயிர்களிடத்து மனது துவக்க நிலையிலிருக்கிறது. பேருணர்ச்சி படைத்திருக்கும் உயிர்களிடத்து மனதும் பெருநிலைக்கு விரிவடைந்திருக்கிறது எனலாம். மனிதனிடத்து மனது முற்றிலும் பக்குவமானதாயிருக்கிறது. பக்குவமடைந்த மனதைக்கொண்டு மனிதன் எதைப் பற்றிப் பிடிக்கிறானோ அந்த மயம் அவன் ஆகிறான். உலகப் பொருள்களைப் பற்றினால் அவன் உலகமயம் ஆகிறான். இறைவனுடைய அருளைப் பற்றினால் அவன் இறைவன் மயம் ஆகின்றான். நல்ல மனதைப் பெற்றான பிறகு அதன் துணைகொண்டு அருளைப் பற்றாது அழிந்துபோம்

பொருள்களைப் பற்றுவானாகில் அவன் பெற்றது பாழுஞ் சிந்தை ஆகிவிடுகிறது. உலகப் பொருள்கள் எல்லாம் காலக்கிரமத்தில் பாழாய்ப்போய் விடுகின் றன. பாழாகப் போகும் பொருள்களைப் பற்றுகிற சிந்தையைப் பாழுஞ் சிந்தை என்று ஏன் பகரலா காது? பற்றுதல் மயமாயிருக்கும்சிந்தையைக் கொண்டு கடவுளைப் பற்றவேண்டும்.

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு

என்பது கோட்பாடு. ஆனால் பொல்லாத மனது அவ் வரிய செயலைச் செய்வதில்லை. கடவுளுடைய அருளி டத்துப் பற்று வைக்கின்றவர்களுக்குக் கடவுளே கிட்டுகிறார் என்பதைத் திரும்பத் திரும்பப் பகர்ந்து கொண்டிருந்தால் கடவுள் பற்று கொஞ்சம் கொஞ்ச மாக உண்டாகும். அப்படிப் பகவத் விஷயங்களைப் பற்றி மானுட சிந்தை பகர்வதற்கும் இடம் தருவ தில்லை. பயன்படாத பாழ்த்த பொருள்களைப் பற்றியே பகர்ந்து கொண்டிருப்பதற்கு அது தூண்டுதல் செய் கிறது. இக்கருத்துக்களை யெல்லாம் தொகுத்து, **பற்று வெகு விதமாகி யொன்றை விட்டொன்றனைப் பற்றி யுழல் கிருமிபோலப் பாழ்ஞ் சிந்தை பெற்ற நான் வெளியாக நின் னருள் பகர்ந்து மறியேன்** என்று தாயுமானவர் பகர் கிறார்.

மிட்டாய்க்கடை யொன்றில் யானை, குதிரை, ஒட்டகம், பசு போன்ற வடிவங்களிலே விலைக்கு மிட்டாய்கள் செய்து வைக்கப்பட்டிருக்கின்றன.

அவைகளை வாங்கும் குழந்தைகளுக்கிடையில் தனக்கு யானை மிட்டாய் அல்லது குதிரை மிட்டாய்தான் வேண்டுமென்ற சண்டை சச்சரவுகள் வந்துவிடுகின்றன. யானை மிட்டாய்க்குப் பதிலாகக் குதிரை மிட்டாய் கொடுத்தால் ஒரு குழந்தை ஏற்றுக்கொள்ளாது. குதிரை மிட்டாய்க்குப் பதிலாகப் பசு மிட்டாய் கொடுத்தால் மற்றொரு குழந்தை ஏற்றுக்கொள்ளாது. ஒவ்வொரு குழந்தையும் ஏதேனும் ஒரு வடிவத்தில் பெரும் பற்றுதல் வைத்திருக்கிறது. மிட்டாயின்கண் இருக்கும் ரூபம் நித்தியமானது என்ற எண்ணம் குழந்தைக்கு இருக்கிறது. ஆனால் மிட்டாய்க் கடைக்காரனோ யானை மிட்டாய், குதிரை மிட்டாய் ஆகிய ஒவ்வொன்றுக்கும் ஓரணா விலை வாங்குகிறான். அவன் கருத்தில் யானைக்கும் விலை ஓரணா; பசுவுக்கும் விலை ஓரணா. ஏனென்றால் ஓரணாப் பெறும்படியான சர்க்கரையைத் தான் ஒவ்வொரு வடிவத்திலும் அவன் போட்டிருக்கிறான். அவன் காட்சியிலிருப்பது சர்க்கரை. குழந்தைகளின் காட்சியிலிருப்பது நாமரூபங்கள். மிட்டாயைப் பற்றி கடைக்காரன் கொண்டிருப்பது அத்வைத ஞானம். குழந்தைகள் கொண்டிருப்பது துவைத ஞானம். இந்தக் குழந்தைகளின் நிலைமையிலேயே முதியோர்களும் இருக்கின்றனர். அவர்கள் கடைக்குச் சென்று தங்க நகைகள் வாங்குகின்றனர் அல்லது விற்கின்றனர். நகைகள் நன்றாக அமைக்கப் பெற்றிருக்கின்றனவா என்று அவைகளை அணிபவர்கள் எண்ணிப் பார்க்கின்றனர். தங்கம் வாங்குகின்றவன் அவ் அணி

களில் எவ்வளவு தங்கம் அமைந்திருக்கிறது என்பதில் கண்ணுங்கருத்துமாய் இருக்கிறான். தங்கமே அணிகள் போன்று காட்சி கொடுக்கின்றன என்பது அத்வைத ஞானம். விதவிதமான நகைகளை நாடி அவைகளில் பற்றுவைப்பது துவைத ஞானம். இவ்வுலகெலாம் எதனிடத்திருந்து உண்டானது, எப்பொருள் இவ்வுலகனைத்துக்கும் மூலகாரணம் என்னும் கேள்வி முன்னாளில் முனிவர்களுக்கிடையில் எழுந்தது. தீர்க்கதரிசிகளாகிய அவர்கள் இப்பிரபஞ்சத்தைப் பற்றிய உண்மையை மெய்ஞ்ஞானக் காட்சியில் கண்டு கொண்டனர். 'ஆதிபகவன் முதற்றேயுலகு' என்பது அவர்கள் கண்டறிந்த பேருண்மையாகும். சர்க்கரையே விதவிதமான மிட்டாய்களாகக் காட்சி கொடுப்பது போன்றும் பொன்னே விதவிதமான நகைகளாகக் காட்சி கொடுப்பது போன்றும் பரம்பொருளே பிரபஞ்சத்தில் எண்ணிறந்த பொருள்களாகக் காட்சி கொடுத்துக்கொண்டிருக்கிறார். உண்மையில் கடவுள் தானிருக்கிறார். அவர் மீது தோற்றத்தளவில் தென்படும் நாம ரூபங்களெல்லாம் வெறும் கற்பனைகளாம். இத்தகைய ஞானம் அத்வைத ஞானம் எனப்படுகிறது. உயிர்களிடத்தும் பிரபஞ்சப் பொருள்களிடத்தும் இருக்கும் நாமரூபங்கள் நித்தியமானவைகள் எனக் கருதி சிலவற்றில் பற்றுதலும் வேறு சிலவற்றில் வெறுப்பும் கொண்டு வியவகார வாழ்க்கையை வளர்த்துக்கொண்டு போவது மெய்யறிவின் விளைவு ஆகாது. அதைச் சிற்றறிவு என்று சொல்லவேண்டும். **துவிதமோ சிற்றறிவு** என்று தாயுமானவர் மேலும் சாட்டுகின்றார்.

அத்வைத ஞானம் அனுபூதியாக அமையாத விடத்தும் கடவுள்தான் இத்தனையும் ஆகியிருக்கின்றார் என்கின்ற எண்ணத்தைத் திரும்பத் திரும்ப மனதுக்குப் புகட்டிவந்தால் ஒரு வடிவத்தைக் கண்டு அஞ்சுதலும் மற்றொரு வடிவத்தைக் கண்டு பற்றிப் பிடிக்க முயலுதலும் ஆகிய பேதபுத்திகள் படிப்படியாக மறைந்து போய்விடுகின்றன. பேதபுத்தியை ஒழிப்பதற்கு அத்வைத ஞானத்தை ஓயாது மனதுக்கு ஊட்டிக் கொண்டிருப்பதே நல்ல சாதனமாகும். அப்படிச் செய்யாது நாமரூபங்கள் நித்தியமானவைகள் என்கின்ற நம்பிக்கை வைத்து அவைகளிடத்து வியவகாரத்தைப் பெருக்குகின்ற செயல் ஆத்ம சாதகனுக்கு ஒவ்வாது. ஒவ்வாததைத்தான் அவன் மயக்கத்தால் மீண்டும் மீண்டும் செய்து வருகிறான். **அதன்றியும்** என்கின்ற சொல்லால் ஆத்ம சாதகனிடத்துள்ள தவறுதல்களை அவர் குறித்துக் காட்டுகிறார்.

அறிந்தோ அறியாமலோ ஜீவர்கள் அனைவரும் பிரபஞ்ச வாழ்க்கையின் மூலமாகப் பரிபக்குவம் அடைந்து வருகிறார்கள். யார் எத்தகைய பரிபாகம் அடைந்திருக்கிறாரென்பதை எதிர்பாராது திடீரென்று நிகழ்கின்ற நிகழ்ச்சி ஒன்று காட்டிவிடும். இதைக் குறித்து ஆங்கிலத்தில் பழமொழி ஒன்று உண்டு. **Take a man by surprise and you will know what he is made of** — திடுக்கிடும்படியான நெருக்கடி ஒன்றை ஒரு மனிதன்பால் உண்டுபண்ணு. அவன் தரம் எத்தகையது என்பதை அந்த நெருக்கடி விளக்கி

விடும். இதற்கொரு சான்று எடுத்துக்கொள்வோம். சுவாமி விவேகானந்தரும், அவருடன் தம்பதிகளிரு வரும் ஆக மூன்றுபேர் இங்கிலாந்தில் நாட்டுப் புறத் தில் பண்ணை ஒன்று பார்க்கச் சென்றனர். அம் மூவரும் எதிர்பாராத விதத்தில் காளை ஒன்று திடீ ரென்று அவர்களைத் தாக்கப் பாய்ந்தது. இங்கிலாந்தி லிருக்கும் காளை ஒவ்வொன்றும் நம்நாட்டுக் காட்டெரு மைக்கொப்பாகும். அவ்வளவு வலிவும் மூர்க்கத் தன மும் வாய்க்கப்பெற்றது அது. அத்தகைய காளை பாய்ந்து வந்தபொழுது மூவரில் பெண்பாலாயிருந்த வள் மூர்ச்சை போட்டுக் கீழே விழுந்து விட்டாள். ஆடவனோ ஓட்டம் பிடித்துவிட்டான். விவேகானந்த சுவாமிகள் மட்டும் அமைதியே வடிவெடுத்தவராய் மூர்க்கத்தனம் வாய்ந்த அந்தக் காளையை உற்று நோக் கிய வண்ணமாய் நின்றார். அருகில் வந்த காளை அவரு டைய சந்நிதான விசேஷத்தால் தானே அமைதியுற்ற தாய்த் திரும்பிப் போய்விட்டது. பண்ணை பார்க்கப் போன மூவரில் யார் யார் எத்தகைய பரிபாகம் அடை யப் பெற்றவர் என்பதை மூர்க்கத்தனம் வாய்ந்த காளைமாடு பாய்ந்து வருதல் என்னும் திடீரென்று நேர்ந்த நெருக்கடி விளக்கிவிட்டது. நம் ஒவ்வொரு வருக்கும் ஒரு காலம் அல்லாவிட்டால் ஒரு காலத்தில் நெருக்கடிகள் வருகின்றன. நாம் படைத்துள்ள தரத் தையும் அந்த நெருக்கடிகள் விளக்கி விடுகின்றன. தமக்கு நிகழ்ந்த நெருக்கடி ஒன்றைத் தாயுமானவர் சுண்டு செப்புகிறார். எவரேனும் ஒரு மொழி திடுக்

**கென்று உரைந்தபோது** என்பது அவருக்கு நேர்ந்த நெருக்கடி. 'நான் கடுஞ்சொல் சொல்லி உன்னைத் திட்டப் போகிறேன்' என்ற முன் எச்சரிக்கை வந்திருக்குமாகில் நாம் பொறுமையோடு இருந்து அக்கடுஞ் சொற்களைக் காதில் போட்டுக் கொள்ளாது சமாளிக்கலாம். அப்படியல்லாது திடீரென்று தாக்கப்படும் பொழுது மறைந்திருக்கும் சிற்றியல்பே முன்னணியில் வந்து நிற்கும். அந்தச் சிற்றியல்புதான் என்ன? சிந்தையே செவியாக மாறிவிடுவது உடனே நிகழும் நிகழ்ச்சியாகும். காதும், மனதும் நொடிப்பொழுதில் ஒன்றுபட்டுவிடுகின்றன. புன்மொழிகள் காதில் விழுந்ததுதான் பாக்கி. மனது புல்லிய நடவடிக்கை யெடுக்க ஆரம்பித்து விட்டது. அடுத்தபடியாக நிகழ்கின்ற நிகழ்ச்சியைப் **பறையறைய** என்று அவர் விளக்குகிறார். தம்பட்டத்தை உரக்க அடிப்பது போன்று சொல்லத்தகாத எதிர்ச் சொற்களை வாய் இடியிடிப்பது போன்று எதிர்த்துப் பேசுகிறது. கிளம்பிய சினத்தால் நொடி நேரத்துக்குள் வெப்பம் நிறைந்த தீப் போன்று உடலில் கொதிப்பு வந்துவிடுகிறது. பேருஷ்ணத்தை உண்டுபண்ணுகிற வல்லமை சிந்தையில் தோன்றும் சினத்துக்கு உண்டு. அக்கோட்பாட்டை, **உதரவெந்தீ** என்னும் சொல்லால் அவர் சுட்டிக் காட்டுகிறார். ஒரு குறுகிய குட்டையிலிருக்கும் நீரைக் கழியைப் போட்டுக் கிளறினால் அது சேர் குழம்பிவிடும். அதே பாங்கில் மனதில் வருகிற குழப்பத்தை **நெஞ்சம் அளவளாவ** என்கிறார். எதிர்பாராத செயலை முன்

ளிட்டு யாரொருவன் மனங் கலங்கியிருக்கின்றானோ அவனுக்கு விவேகம் போய்விடுகிறது. விவேகத்தை இழந்தவன் செய்யத்தக்கது எது, தகாதது எது என்கின்ற தெளிவை இழந்து விடுகிறான். அத்தகைய பரிதாபகரமான நிலையை **உற்றுணர உணர்வற்று** என்று தாயுமானவர் கூறுகிறார். உணர்தற்கான உணர்வற்று என்பது அதன் கருத்து. மெய்ப்பொருளை அறிவதற்கான அறிவு எதோ அந்த அறிவு போய்விடுகிறது என்பது அதன் கருத்து. கானகத்தில் புயற்காற்று அடிக்கின்றபொழுது மரம் செடி கொடிகளுக்கிடையில் வேற்றுமை ஒன்றும் புலப்படாது. மண்ணும், தூசியும், குப்பையும், செத்தையும், சருகும் அக்காற்றில் கலந்து ஒரே அமளியை உண்டுபண்ணி விடுகின்றன. மனக்கொதிப்பு ஏற்பட்டு இருக்கின்றவனுக்கு அத்தகைய அமளி தனக்குள்ளேயே வந்துவிடுகிறது. அந்த அமளியிருக்கும் பரியந்தம் அவன் பைத்தியக்காரனே ஆய்விடுகின்றான். பொருந்திய பேச்சு எது, பொருந்தாத பேச்சு எது என்னும் பாகுபாடு எல்லாம் பறந்தோடி விடுகின்றன. இக்கோட்பாட்டை, **உன்மத்த வெறியினர் போல உளறுவேன்** என்று தம்மையே நொந்து கொள்ளுகின்ற பாங்கில் தாயுமானவர் மொழிகிறார். ஆத்ம சாதனத்தில் தாம் அடைந்திருக்கின்ற பரிபாகம் இவ்வளவுதான் என்பதை ஒரு நெருக்கடி விளக்கிக் காட்டிவிடுகிறது என்று அவர் வருத்தத்துடன் தெரிவிக்கிறார். **அதன்றியும் எவரேனும் ஒரு மொழி திடுக்கென்றுரைத்தபோது சிந்தை செவியா**

கவே பறையறைய வுதரவெந்தீ நெஞ்சம் அளவளாவ உற்றுணர உணர்வற்று உன்மத்த வெறியினர் போல உளறுவேன்.

தூங்கும் வேளையில் ஒரு மனிதனுக்குக் கனவு உண்டாயிற்று. அக்கனவிலே எதிரி ஒருவன் தோன்றி வந்தான். வாள் ஒன்றை எடுத்து நெஞ்சைப் பொத்துக்கொண்டு போகும்படித் திடீரென்று குத்திவிட்டான். குத்துப் பெற்றவன் 'செத்தேன்' என்று கீழே சாய்ந்தான். கீழேசாய்தல் என்னும் கனவு நிகழ்ச்சி அவனுடைய ஸ்தூல சரீரம் பொத்தென்று தரையில் படுவதாக மாறிற்று. கனவினின்று விழித்தெழுந்தான். அறைக்குள் மங்கலாகத் தீபம் எரிந்து கொண்டிருக்கிறது. கதவு தாளிடப்பட்டிருக்கிறது. செத்துப்போனதாக எண்ணியவனுக்கு நெஞ்சம் படபடவென்று அடித்துக் கொண்டிருக்கிறது. நெஞ்சைத் தொட்டுப் பார்த்தான். அதைத் துளைத்த வாள் ஆங்கு இல்லை. 'யாரும் என்னைக் குத்தவில்லை. நெஞ்சம் துளைக்கப்படவில்லை. நான் சாகவில்லை' என்று அவன் மனம் தெளிந்தான். குத்துண்டு சாதல் என்னும் கொடுவினையினின்று அவன் முக்தியடைந்ததற்கு உற்ற உபாயம் கனவினின்று விழித்தெழுந்து தனது நிஜசொரூபத்தை உள்ளபடி ஓர்தலேயாம். இப்பிரபஞ்ச வாழ்வு என்கின்ற கனவு கண்டுகொண்டிருக்கின்ற நாம் இக்கனவையே பெருக்கிக்கொண்டு போகலாகாது. விசாரத்தால் அதை ஒரு முடிவுக்குக் கொண்டுவர வேண்டும். இக்கோட்பாட்டை, முத்தி

**மார்க்கம் உணர்வதெப்படி** என்னும் கேள்வியின் மூலம் தாயுமானவர் உணர்த்துகிறார். பிரபஞ்ச வாழ்க்கையில் பற்று மிக வைத்து அதில் கட்டுண்டு கிடப்பதிலேயே திருப்தியடைந்திருப்பவர்களுக்கு முக்தி மார்க்கத்தைப்பற்றி உணர்வு உண்டாவதில்லை. பிரபஞ்ச வாழ்வு நிலையற்றதென்று உணர்ந்து அதினின்று விலகிக்கொள்ள முயலுவதே முக்தி மார்க்கம் ஆகிறது. அப்படி முயலாதவர்களுக்குக் கல்பகோடிகாலம் ஆனாலும் அதினின்று விடுதலையில்லை. தமக்கு விடுதலையில் இன்னும் நாட்டம் வரவில்லையே என்பதைத்தான் அவர் இங்ஙனம் எடுத்து உரைக்கிறார்.

இப்பிரபஞ்ச வாழ்வு எத்தகைய போக்குடையது என்பதைப்பற்றிய கேள்வி மக்கள் எல்லார்க்கிடையிலும் எழுகிறது. அவரவர் அடைந்துள்ள பரிபாகத்துக்கு ஏற்ப இக்கேள்விக்கு விதவிதமான விடைகள் வரும். இது இன்பம் மிக நிறைந்தது என்று இயம்புபவர்கள் பலர் இருக்கின்றனர். இது துன்பத்தில் யாண்டும் துய்த்துக் கிடக்கிறது என்று சொல்லுபவர்களிருக்கிறார்கள். இன்பமும், துன்பமும் கலந்ததாக இது இருக்கிறது என்று கூறுபவர்களிருக்கிறார்கள். உண்மையில் பிரபஞ்ச வாழ்வு இன்பம் நிறைந்ததுமல்ல, துன்பம் நிறைந்ததுமல்ல. அவரவர் மனப்பான்மையைப் படம் பிடித்துக் காட்டும் பாங்குடையது இப்பிரபஞ்சம். மழை பெய்கிறது. அதைக் குறித்துக் கிருஷிகன் ஒருவன் இன்பமடைகிறான். ஆனால் அதே செயலைக் குறித்து மட்பாண்டம்வனைந்து

காயவைத்திருக்கும் குயவன் துயருறுகிறான். காற்றடிக்கிறது. அதை முன்னிட்டு வெட்டவெளியில் தீ எரித்துக் கொண்டிருப்பவன் துயருறுகிறான். துணிகள் காயப் போட்டிருப்பவனோ காற்றடிப்பது [illegible] அனுகூலமானதென்று மகிழ்வுறுகிறான். இதே முறையில் பிரபஞ்சத்தில் நடைபெறும் எல்லா [illegible] நிகழ்ச்சிகளையும் குறித்து இன்புறுபவர்களிருக்கின்றனர். துன்புறுபவர்களிருக்கின்றனர். ஆதலால்தான் பிரபஞ்ச நடைமுறை தன்னளவில் இன்பகரமானதுமல்ல, துன்பகரமானதுமல்ல; அந்நிகழ்ச்சிகளை ஏற்கும் மக்களது பான்மைக்கு ஏற்ப அவைகள் இன்பமும், துன்பமும் நிறைந்தவைகளாகத் தென்படுகின்றன. அப்படியானால் இப்பிரபஞ்சத்தில் வாழ்ந்திருக்கும் மனிதன் இயற்கையின் நடைமுறைகளை எவ்வாறு ஏற்றுப் பழகவேண்டும் என்னும் கேள்வி வருகிறது. இன்பத்துக்கேதுவான நிகழ்ச்சிகளைக் குறித்து மனிதன் மகிழ்வுறலாகாது. துன்பத்துக்கு ஏதுவான நிகழ்ச்சிகளை முன்னிட்டு அவன் துயருறலாகாது. மனதை யாண்டும் நடுநிலையிலேயே வைத்துப் பழகவேண்டும். இன்பத்தையும் துன்பத்தையும் ஒரே பாங்கில் கருதிப் பழகுகின்றவனே உண்மையில் மனபரிபாக மடைகிறான். காற்றடிக்கின்றபொழுது செடி கொடிகளும் மரத்தின் கிளைகளும் அசைகின்றன. ஆனால் பெரிய மரத்தின் அடிப்பாகம் அசைவற்றிருக்கிறது. அடிமரத்தின் உறுதியை மனமானது பெறவேண்டும். அசையாது தெளிந்த நீரிலே சந்திர சூரியர்களுடைய பிம்பங்கள்

**மார்க்கம் உணர்வதெப்படி** என்னும் கேள்வியின் மூலம் தாயுமானவர் உணர்த்துகிறார். பிரபஞ்ச வாழ்க்கையில் பற்று மிக வைத்து அதில் கட்டுண்டு கிடப்பதிலேயே திருப்தியடைந்திருப்பவர்களுக்கு முக்தி மார்க்கத்தைப்பற்றி உணர்வு உண்டாவதில்லை. பிரபஞ்ச வாழ்வு நிலையற்றதென்று உணர்ந்து அதினின்று விலகிக்கொள்ள முயலுவதே முக்தி மார்க்கம் ஆகிறது. அப்படி முயலாதவர்களுக்குக் கல்பகோடிகாலம் ஆனாலும் அதினின்று விடுதலையில்லை. தமக்கு விடுதலையில் இன்னும் நாட்டம் வரவில்லையே என்பதைத்தான் அவர் இங்ஙனம் எடுத்து உரைக்கிறார்.

இப்பிரபஞ்ச வாழ்வு எத்தகைய போக்குடையது என்பதைப்பற்றிய கேள்வி மக்கள் எல்லார்க்கிடையிலும் எழுகிறது. அவரவர் அடைந்துள்ள பரிபாகத்துக்கு ஏற்ப இக்கேள்விக்கு விதவிதமான விடைகள் வரும். இது இன்பம் மிக நிறைந்தது என்று இயம்புபவர்கள் பலர் இருக்கின்றனர். இது துன்பத்தில் யாண்டும் துய்த்துக் கிடக்கிறது என்று சொல்லுபவர்களிருக்கிறார்கள். இன்பமும், துன்பமும் கலந்ததாக இது இருக்கிறது என்று கூறுபவர்களிருக்கிறார்கள். உண்மையில் பிரபஞ்ச வாழ்வு இன்பம் நிறைந்ததுமல்ல, துன்பம் நிறைந்ததுமல்ல. அவரவர் மனப்பான்மையைப் படம் பிடித்துக் காட்டும் பாங்குடையது இப்பிரபஞ்சம். மழை பெய்கிறது. அதைக் குறித்துக் கிருஷிகன் ஒருவன் இன்பமடைகிறான். ஆனால் அதே செயலைக் குறித்து மட்பாண்டம்வனைந்து

காயவைத்திருக்கும் குயவன் துயருறுகிறான். காற்றடிக்கிறது. அதை முன்னிட்டு வெட்டவெளியில் தீ எரித்துக் கொண்டிருப்பவன் துயருறுகிறான். துணிகள் காயப் போட்டிருப்பவனோ காற்றடிப்பது தனக்கு அனுகூலமானதென்று மகிழ்வுறுகிறான். இதே முறையில் பிரபஞ்சத்தில் நடைபெறும் எல்லா விதமான நிகழ்ச்சிகளையும் குறித்து இன்புறுபவர்களிருக்கின்றனர். துன்புறுபவர்களிருக்கின்றனர். ஆதலால்தான் பிரபஞ்ச நடைமுறை தன்னளவில் இன்பகரமானதுமல்ல, துன்பகரமானதுமல்ல; அந்நிகழ்ச்சிகளை ஏற்கும் மக்களது பான்மைக்கு ஏற்ப அவைகள் இன்பமும், துன்பமும் நிறைந்தவைகளாகத் தென்படுகின்றன. அப்படியானால் இப்பிரபஞ்சத்தில் வாழ்ந்திருக்கும் மனிதன் இயற்கையின் நடைமுறைகளை எவ்வாறு ஏற்றுப் பழகவேண்டும் என்னும் கேள்வி வருகிறது. இன்பத்துக்கேதுவான நிகழ்ச்சிகளைக் குறித்து மனிதன் மகிழ்வுறலாகாது. துன்பத்துக்கு ஏதுவான நிகழ்ச்சிகளை முன்னிட்டு அவன் துயருறலாகாது. மனதை யாண்டும் நடுநிலையிலேயே வைத்துப் பழகவேண்டும். இன்பத்தையும் துன்பத்தையும் ஒரே பாங்கில் கருதிப் பழகுகின்றவனே உண்மையில் மனபரிபாக மடைகிறான். காற்றடிக்கின்றபொழுது செடி கொடிகளும் மரத்தின் கிளைகளும் அசைகின்றன. ஆனால் பெரிய மரத்தின் அடிப்பாகம் அசைவற்றிருக்கிறது. அடிமரத்தின் உறுதியை மனமானது பெறவேண்டும். அசையாது தெளிந்த நீரிலே சந்திர சூரியர்களுடைய பிம்பங்கள்

உள்ளபடி தென்படுகின்றன. இன்பதுன்பங்களிலே அசைவற்றிருக்கும் தெளிந்த மனதிலே ஆத்ம சொரூபம் உள்ளபடி ஒளிர்கிறது. அந்த ஆத்ம ஞானமே பிறகு பரம்பொருளைப்பற்றிய ஞானமாக ஓங்குகிறது. இன்பத்தையும், துன்பத்தையும் சமமாகக் கருதிப் பழகுகின்ற ஆத்மசாதகனுக்கு முடிவாகக் கிட்டுகிற பேறு பரம்பொருளைப்பற்றிய ஞானமாகும். பின்பு அத்தகைய பயிற்சியின் ஆரம்பதசையிலேயே அவன் பெறுகிற பேறு உண்டு. இயற்கை நல்குகிற இன்பத்தில் திளைத்திருப்பவன் அது நல்குகிற துன்பத்துக்கும் அடிமைப்பட்டாக வேண்டும். இயற்கையின் செயல்களைக் குறித்துச் சிரித்திருப்பவர்களெல்லாம் பிறகு அழவும் செய்தே ஆகவேண்டும். பகலைத் தொடர்ந்து இரவு வருவதுபோன்று இன்பத்தைத் தொடர்ந்து துன்பம் தங்கு தடையின்றி வருகிறது. இன்பத்தில் தட்டுப்படாதிருப்பவன் பின்பு துன்பத்தில் சோர்வுற மாட்டான். அவ்விரண்டையும் நிகராகக் கருதுபவனே மண்ணுலக வாழ்க்கையையும் நன்கு நடத்துபவனுகின்றான். அப்படி இவ்வுலக வாழ்க்கையை நன்கு வாழ்பவனே உடனடியாக நலன் மிக அடையப்பெறுபவனுகின்றான். எனவே, இவ்வையக வாழ்க்கைக்கும் பாரமார்த்திகப் பெரு வாழ்க்கைக்கும் தேவையாயிருக்கும் நிபந்தனை ஒன்றேயாம். இன்பத்துக்கும், துன்பத்துக்கும் அடிமைப்படாது இருந்து இரண்டையும் சமானமாகக் கருதுவதே அந்த நிபந்தனையாகும். இக்கோட்பாட்டை, **இன்ப துன்பம் சமானமாய் உறவதெப்படி ?** என்று தாயுமானவர் கேட்கிருர்.

இவ்வுலகவாழ்வு நல்குகிற இன்பத்திலோ அல்லது துன்பத்திலோ கட்டுப்படாது இருக்கும் பெருமக்களைக் காண்பது அரிது. அவ்விருமைகளில் கட்டுப்படாதிருப்பதற்கு உபாயம் ஒன்றுமில்லையா என்னும் கேள்வி பிறக்கிறது. அதற்கேற்ற உபாயமும் ஒன்று உண்டு. அது எப்படி என்று ஆராய்ந்து பார்ப்போம். இருப்புப் பாதை வண்டித்தொடர் ஒன்றில் பிரயாணம் செய்து மாணுக்கன் ஒருவன் தன் பெற்றோரைப் பார்க்கப் போய்க்கொண்டிருக்கின்றான். அவன் அவர்களை விட்டுப்பிரிந்து நெடுநாள் ஆகிவிட்டது. வண்டியிலோ பிரயாணிகளின் கூட்டம் மிக அதிகம். வண்டியில் உட்கார இடமில்லை. நின்றுகொண்டும் ஒருவர்மேல் ஒருவர் இடித்துத் தள்ளிக்கொண்டும் பயணம் போவதில் அந்த மாணுக்கனுக்குச் சலிப்புத் தட்டுவதில்லை. ஏனென்றால் அவனுடைய குறிக்கோள் அந்த வண்டியிலேயே வசித்திருப்பதல்ல. விரைவில் தன் பெற்றோரைச் சென்று பார்ப்பதை அவன் லக்ஷியமாகக் கொண்டிருக்கின்றான். துன்பத்துக் கேதுவான சூழ்நிலையைத் துன்பகரமானதாக அவன் நினைப்பதில்லை. குற்றவாளி ஒருவனுக்குத் தூக்குத் தண்டனை தருவதற்காகத் தாணுக்காரர்கள் கொண்டுபோகிறார்கள். வழியில் பூந்தோட்டம் ஒன்றில் அவனைச் சிறிது நேரம் பிடித்து வைத்திருக்கின்றார்கள். எங்குத் திரும்பிப் பார்த்தாலும் காண்பதற்கினிய பூஞ்சோலைகளின் காட்சி. இன்னிசைகள் ஆங்கு ஒலித்துக்கொண்டிருக்கின்றன. அவைகளுக்குச் செவி சாய்ப்பதும் ரமணீயமாயிருக்கிறது.

அறுசுவை நிறைந்த நல்லுணவு வகைகளை ஆங்கு வந்திருப்பவர்களுக்கெல்லாம் வேண்டியவாறு எடுத்து வழங்குகிறார்கள். மரண தண்டனைக்கு ஆளாயிருக்கும் குற்றவாளி ஒருவன் மட்டும் அந்த இன்பங்களை யெல்லாம் ரசிப்பதில்லை. ஏனென்றால் அதிவிரைவில் தன் கதி என்ன ஆகும் என்பதை அவன் நன்கு உணர்ந்திருக்கின்றான். சத்குரு ஒருவர் நல்ல சிஷ்யன் ஒருவனுக்கு வீட்டுக்குத் திரும்பும் மாணாக்கனுடைய நிலையையும், மரணத்தை நோக்கிப் போய்க்கொண்டிருக்கும்குற்றவாளியின் நிலையையும் எடுத்துச்சொல்லுகிறார். பிறகு அந்தச் சிஷ்யனுக்கு அவர் மந்த்ரோபதேசம் ஒன்று செய்கிறார். அந்த மந்த்ரத்தை உச்சரித்துக்கொண்டிருப்பவன் தனக்குத் தாயும் தந்தையுமாயிருக்கும் தெய்வத்துக்குப் பக்கத்தில் போய்க்கொண்டிருப்பதை அறிகிறான். ஆதலால் இவ்வுலகம் தருகிற துன்பங்களைப் பற்றி அவன் கவலையுறுவதில்லை. இப்பிரபஞ்ச வாழ்வு இன்பம் நிறைந்ததாகக் காட்சி கொடுத்து, பிறகு மரணம் என்னும் பேராபத்தில் மனிதனை மூழ்கடித்து வருகிறது. அதைக் குறித்து மற்ற மாந்தர்கள் மரண தண்டனைக்கு உட்பட்டிருக்கும் குற்றவாளி போன்று துன்புறுகின்றனர். ஆனால் தெய்வத்தை நோக்கிப் போகின்றவன் பாரமார்த்திகப் பேரின்பமேயன்றி எனக்கு எந்நாளும் இப்பிரபஞ்ச சம்பந்தமான இன்ப துன்பங்கள் இல்லை என்று உணருகிறான். சத்குருவிடமிருந்து தான் பெற்றுள்ள மந்த்ரோபதேசமே இக்குறைகளைக் கடப்பதற்கு உற்ற மருந்து ஆகிறது.

**இக்கோட்பாட்டை, ஆயினும் மற்றும் எனக்கைய நீ சொன்னவொரு வார்த்தையினை மலையிலக்கென நம்பினேன்** என்று அண்ணல் இயம்புகிறார். மலையிலக்கு என்பது நாம் அடைவதற்குக் குறியாக வைத்திருப்பது ஒரு மலை எனப் பொருள்படுகிறது. அதைப்பற்றிய சிறப்பு ஒன்று உண்டு. எத்திசையிலிருந்து திரும்பிப் பார்த்தாலும் தான் இருக்குமிடத்தை மலை தானே விளக்கிக் காட்டுகிறது. அதைப்போய் அடைதற்கான வழிகள் எண்ணிக்கையிலடங்காதவைகள். எந்த வழியில் உறுதியாகச் சென்றாலும் மலையை எட்டிவிடலாம். கடவுளை அடைதலிலும் அதே சிறப்பு அமைந்திருக்கிறது. இக்கருத்துக்கள் யாவும் மேற்கூறிய பாடலில் அமைந்திருக்கின்றன.

---

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

## இயற்றிய நூல்கள்

| | |
|---|---|
| திருவாசகம் (மூன்றும் பதிப்பு) பிரசார விலை | ரூ. 14-00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை (பதினொன்றும் பதிப்பு) பிரசார விலை | ... 12-00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரீ–பிரசார விலை | ... 2-75 |
| தினசரி தியானம் (பாக்கெட் சைஸ் பிளாஸ்டிக் உறையுடன்) | ... 2-75 |
| கர்மயோக விளக்கம் | ... 7-00 |
| பரமஹம்ஸரின் பெருமை | ... 4-50 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | ... 4-00 |
| விவேகானந்த உபநிஷதம் | ... 4-00 |
| கடவுளின் வடிவங்கள் | ... 4-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்-II | ... 3-50 |
| ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம் | ... 2-00 |
| தாயுமானவர் இயற்றிய கருணாகரக் கடவுள் (விரிவுரை) | ... 2-00 |
| தாயுமானவர் இயற்றிய சின்மயானந்த குரு ஷை | ... 2-00 |
| தாயுமானவர் இயற்றிய மௌனகுரு வணக்கம் ஷை | ... 1-50 |
| தேவரகசியம் (முதலிய கதைகள்) | ... 2-00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண சரிதம் | ... 2-00 |
| இராவணதத்துவம் | ... 1-00 |
| சகோதரி நிவேதிதை | ... 1-00 |
| ஹரிச்சந்திரன் (நாடகம்) | ... 1-00 |
| பஜனைப் பாடல்கள் | ... 1-00 |
| காயத்ரீ | ... 1-00 |
| குழந்தைகள் களிக்கூடம் | ... 1-00 |
| அறம் வளர்த்த நம்பி | ... 0-95 |
| தானவீரன் கர்ணன் (நாடகம்) | ... 0-80 |

| | |
|---|---|
| பாண்டவ கௌரவ பெருமை (நாடகம்) | ரூ. 0-80 |
| பாதுகா பட்டாபிஷேகம் (நாடகம்) | ... 0-75 |
| இறைவணக்கம் | ... 0-75 |
| *ஆத்ம சக்தி | ... 0-75 |
| செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா ? | ... 0-75 |
| *சக்தி தத்துவம் | ... 0-70 |
| *மனிதனது நிஜசொரூபம் | ... 0-70 |
| பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி கர்வபங்கம் (நாடகம்) | ... 0-65 |
| பிரஹ்லாதன் (நாடகம்) | ... 0-65 |
| *ஈசன் எங்கும் நிறைந்துள்ளான் | ... 0-60 |
| நன்மக்களைப் பெறுதல் | ... 0-60 |
| இந்து மதமும் கிறிஸ்துவ மதமும் | ... 0-60 |
| தாயுமானவர் இயற்றிய பரசிவ வணக்கம் (விரிவுரை) | ... 0-50 |
| சைவன் யார்? | ... 0-50 |
| *முருகக் கடவுள் | ... 0-50 |
| *விஷ்ணு தத்துவம் | ... 0-50 |
| *சூரியநாராயணன் | ... 0-50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணஷ்டோத்தர சத நாமாவளி: | ... 0-50 |
| மார்க்கண்டேயன் (நாடகம்) | ... 0-40 |
| தபோபலன் (நாடகம்) | ... 0-40 |
| *ஆலய வழிபாடு | ... 0-40 |
| *கணபதி | ... 0-40 |
| *சிவ தத்துவம் | ... 0-30 |
| வர்ணாச்ரம தர்மம் | ... 0-30 |
| பரசுராமர் கர்வபங்கம் (ஸ்ரீதானந்தர்) (நாடகம்) | ... 0-15 |
| The Bhagavad Gita (VIII Impression) | ... 15-00 |
| Indian National Education | ... 8-00 |
| Sri Lalithambika Sahasranama Stotram | ... 8-00 |
| Ramakrishna Lives Vedanta | ... 5-00 |
| Facets of Brahman or The Hindu Gods | ... 5-00 |
| Mahabharata (With Plastic Cover) | ... 4-50 |

THE BHAGAVAD GITA-Original Stanzas-Split up Reading-Transliteration-Word for Word Translation-A LucidEnglish Rendering and Commentary-Demy 8vo—1008 Pages-Calico Bound-Nominal Price Rs.15-00 (Postage Rs. 3-25). Please contact your local booksellers to save postage.

**ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசமஞ்ஜரீ:-** ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் தம் பக்தர்களுக்கு நிகழ்த்திய சம்பாஷணைகளினின்று பொறுக்கி எடுத்த 1426 உபதேசங்களைக் கொண்டது இப்புத்தகம். கிரௌன் சைஸ் 359 பக்கங்கள். அதிகம் பொருள் வசதி இல்லாதவரும் இதை வாங்கிப் படித்துப் பயன்பெற வேண்டும் என்ற நோக்குடன் ரூ. 4-00 விலையுள்ள இப்புத்தகம் ரூ.2-75க்கு தரப்பெறுகிறது. தபாற்செலவு ரூ. 2-20.

**தினசரி தியானம்:-** ரூ. 6-00 விலைமதிப்புள்ள புத்தகத்தை அதன் பாதி அளவான பாக்கெட் சைஸ் புத்தகமாகச் செய்து யாவரும் படித்துப் பயன் பெறவேண்டும் என்றநோக்குடன் பிரசாரவிலையில் வெளியிடப் பெற்றுள்ளது. 368 பக்கங்கள்; பிளாஸ்டிக் உறையுடன் விலை ரூ.2-75. தபாற்கட்டணம் ரூ.2-40

மேற்கண்ட பிரசார விலை வெளியீடுகளை நேரடியாக எங்களிடமிருந்து வரவழைக்க விரும்பும் அன்பர்கள் முன்பணம் அனுப்பி ரயில்வே பார்சல் மூலம் வரவழைத்துக்கொண்டால் செலவு குறையும். அதிகம் பிரதிகளை வரவழைப்பவர்களுக்குத் தக்க சலுகைகள் காட்டப்பெறும்; பார்ஸல் கட்டணத்திலும் அனுகூலமுண்டு. ஆதலால் பிரசார விலை பதிப்புகளை கூடுதலான அளவுக்கு வரவழைத்துத் தாங்களும் தங்கள் நண்பர்களுமாகப் பகிர்ந்துகொண்டால் குறைந்த செலவில் அல்லது செலவில்லாமல் புத்தகங்களைப் பெறுவதுடன் எங்கள் ஆத்மீகப் பிரசார கைங்கரியத்தில் பங்குகொண்டவர்களும் ஆவீர்கள்.

**ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்**

*திருப்பராய்த்துறை - 639 115 :: திருச்சி ஜில்லா*

---

## தர்ம சக்கரம்

**ஆசிரியர் சுவாமி நித்தியானந்தர்**

| | ஆண்டு சந்தா | தனி இதழ் |
|---|---|---|
| உள்நாடு | ரூ. 10-00 | 1-00 |
| வெளிநாடு | ரூ. 20-00 | 2-00 |

**வேண்டும்போது திரும்பப் பெற்றுக்கொள்ளத்தக்க டெபாஸிட் சந்தா ரூ. 100-00. விபரத்திற்கு எழுதக்கோருகிறோம்.**

தபோவன அச்சுப்பள்ளி, திருப்பராய்த்துறை. JUNE. 76



